# இரட்டைப்புலவர் பிரபந்தம்

1 தில்லைக்கலம்பகம்

2 திருவாமாத்தூர்க்கலம்பகம்

3 ஏகாம்பரநாதருலா

பதிப்பாசிரியரும் குறிப்புரையாசிரியரும்

வித்துவான்

கோ. கதிர்வேலு முதலியார்

அருள்நெறிமன்ற வெளியீடு

சைதாப்பேட்டை, ஆரணி

# RETTAIAR PRABANDAM

With Commentary By
VIDWAN
G. KATHIRVEL MUDALIAR

THIS BOOK IS
PUBLISHED WITH THE
FINANCIAL ASSISTANCE OF
TIRUMALA TIRUPATI DEVASTHANAMS
UNDER THEIR SCHEME
'AID TO PUBLISH RELIGIOUS BOOKS'

சிவமயம்

# இரட்டைப்புலவர் பிரபந்தம்

1 தில்லைக்கலம்பகம்

2 திருவாமாத்தூர்க்கலம்பகம்

3 ஏகாம்பரநாதருலா


பதிப்பாசிரியரும் குறிப்புரையாசிரியரும்

[illegible]

கோ. கதிர்வேலு முதலியார்

[illegible]

[illegible] நிலைப் பள்ளி, வேலூர்



அருள்நெறிமன்ற வெளியீடு

50, பேட்டைத்தெரு, சைதாப்பேட்டை

ஆரணி-632 301

டாக்டர் தி.ரா. செல்வராசன்
எம் ஏ.,எம்.லிட்.,பிஎச் டி.,
தமிழ்ப் பேராசிரியர்,
சென்னைக் கிறித்தவக் கல்லூரி.

6, பேராசிரியர் குடியிருப்பு,
கிழக்குத் தாம்பரம்,
சென்னை-600 059.
25-8-1989

# நூன்முகம்

'இனியதில் இனியது எது?' என்று வினவினால், எண்ணி எண்ணித் தேடித் திகைத்த பின்னர் நமக்குக் கிடைக்கும் விடை ஒன்றுதான்: அதுவே இலக்கியம்! மக்கள் உலகில் படைத்துத் துய்த்து மகிழ்ந்து சிறக்கும் செல்வத்துட் செல்வமாக இலக்கியம் திகழ்வதால் அதனை நாகரிகத்தின் சின்னமாகவும் பண்பாட்டின் சிகரமாகவும் கற்றறிந்தார் ஏற்றிப் போற்றுகிறார்கள்.

நேற்றைய கருத்துகள் வேர்களாகவும் இன்றைய சிந்தனைகள் கிளைகளாகவும் நாளைய நம்பிக்கைகள் பூங்கனிகளாகவும் தொடர்ந்து, வளர்ந்துவரும் மானுடத்தின் முற்றிய வித்துக்களாகத் திகழ்வன இலக்கியங்கள். காலக் கண்ணாடி என்றும் கருத்துப் பெட்டகம் என்றும் அவை போற்றப் படுவதற்குக் காரணம், அவை தோன்றிய காலத்தில் பயன்மிகத் தந்தது

போன்றே இனி எதிர்வரும் காலத்திற்கும் நயன்மிகு உடையதாய் உயிராற்றலுடன் அமைந்திருத்தலே ஆகும்.

தமிழிலக்கியத் தொடரில் சிற்றிலக்கியங்களின் எழுச்சி, பண்டைய புலவர் போற்றிய யாப்பும் அன்றைய நாட்டு மக்கள் நாவில் தவழ்ந்த பாடலும் பின்னிப் பிணைந்த பொலிவின் முகிழ்ப்பே ஆகும். தொண்ணூற்றாறு எனப் பல்கிப் பெருகிய சிற்றிலக்கிய வகைகளில் கலம்பகம் தனித்தன்மைகளை உடையது. அகப்பொருளும் புறச் செய்தியும் சேர்ந்த கலவையாகவும், பலப்பல ஓசை நயங்களின் சேர்க்கையாகவும், பற்பல செய்திகளைத் தொகுத்துக் காட்டும் அடுக்காகவும், மாறுபட்ட குணநலன்களை உடைய மக்களின் உணர்ச்சிக் கோவையாகவும் அமைந்துள்ள நூலிற்குக் கலம்பகம் எனும் பெயர் சாலப் பொருந்தும்.

பாராண்ட மன்னர்களையும் பண்பார்ந்த ஞானிகளையும் போற்றிப் பாடும் கலம்பக இலக்கிய மரபினை மாற்றிப் பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த இரட்டைப் புலவர்கள் தாம் வழிபடும் திருத்தலங்களையும் ஆங்கு எழுந்தருளியுள்ள இறைவனையும் பற்றிக் கலம்பகம் பாடிப் போற்றினார்கள். கற்றதனால் ஆய பயன், வாலறிவன் நற்றாளைத் தொழுது பாடுதல் எனக் கலம்பகப் படைப்பில் இறைமையின் பேரருளை இணைத்துக் காட்டினார்கள் இரட்டைப் புலவர்கள்! அவர்கள் இயற்றிய தில்லைக்கலம்பகம், திருவாமாத்தூர்க் கலம்பகம் ஆகியவற்றின் சொல்லழகும் பொருளழகும் கற்றவரைக் கவர்ந்து, ''கலம்பகத்துக்கு இரட்டையர்கள்'' எனச் சிறப்பிக்கச் செய்தன.

சோழ நாட்டில் ஆடுதுறைக்குத் தென்பால் உள்ள இலந்துறை என்னும் ஊரில் செங்குந்தர் மரபில் இரட்டையர்கள் தோன்றினார்கள். அவ்விருவரும் உறவின் முறையால் அம்மான் மகனும், அத்தை மகனும் ஆவர். இளமையிலே பெற்றோரின் பேரன்பை இழந்த இவர்களில் ஒருவர் குருடர்; மற்றொருவர் முடவர். குருடர் முடவர்க்குக் காலாகவும் முடவர் குருடர்க்குக் கண்ணாகவும் ஒருவர்க்கொருவர் உதவியாக ஒன்றுபட்டு இயங்கினர். செந்தமிழ்ப் புலமையும் சித்தத்தைச் சிவன்பால் வைத்த செம்மையும் கொண்ட இரட்டையர்கள் இணைந்தே தனிப்பாடல்களும் பாடிக் குவித்தனர்; கலம்பகம், உலா போன்ற சிற்றிலக்கியங் களைப் படைத்துத் தந்தனர். இது இலக்கிய உலகில் இரட்டையர் காட்டிய புதுநெறியாகும்.

இரட்டைப் புலவர்கள் பாடிய தில்லைக்கலம்பகம், திருவாமாத்தூர்க்கலம்பகம், ஏகாம்பரநாதர் உலா ஆகிய நூல்கள் திருத்தலங்களின் பெருமைகளையும் சிவ பெருமானின் பேராற்றலையும் அவர்தம் அருட் செயல் களையும் சுவைநயம் கனிய எடுத்தியம்புகின்றன. அகப் பொருட் சுவையும் எல்லை மீறாவண்ணம் உடன் வைத்துப் பேசப்பட்டுள்ளது.

இருபதாம் நூற்றாண்டின் இறுதிக் கட்டமாகிய இக் கால எல்லையில் தமிழ்நாட்டில் தமிழ் உணர்வு என்பது வேரில்லா நீர்ப்பாசி போல் படர்ந்துள்ளதே அன்றி ஆழங் கால்பட்டு நிலை பெறவில்லை. தமிழ் இலக்கியக் கல்வி யும் தமிழ்நூல் பயிற்சியும் ஊதியம் நல்கும் உயர்

பணியாகத் தோன்றவில்லை. பல்வேறு பண்பாடு, பொருளியல், அரசியல் தாக்குறவால் தம் பழம்பெரும் மரபுச் செல்வங்களை மறந்து 'தேடிச் சோறு நிதம் தின்று' பிழைப்பதே பெரும்பான்மையோரின் வாழ்வாங்கு வாழும் நெறியாக உள்ளது. இச்சூழலில் நமது முன்னவர் படைத்தளித்த நூல்கள் பல இன்று கிடைப்பது அரிதாகி விட்டது. வெறும் பெயர் அளவில் மட்டுமே அவை குறிக்கப்பட்டு 'மரணமிலாப் பெருவாழ்வு' நிலையை அடைந்துவிட்டன.

தமிழ் மொழியின் பண்டைப் பனுவல்கள் தமிழ் மக்களின் கைகளிலும் கருத்தினிலும் தவழ்ந்து பயன்பாட்டு நிலையைப் பெற வேண்டும் என்று கருதித் தமது முதுமையை நோக்காமல், உடல் நலிவைப் பாராமல், பொருள் இழப்பை மதிக்காமல், நூல்களைத் தேடிப் பலமுறை ஆழ்ந்து பயின்று, அவற்றின் அரும் பொருளை உணர்ந்து தெளிந்து, படிப்போர்க்கு உதவும் வண்ணம் தக்க குறிப்புரையை எழுதிச் செம்மையாக இரட்டையர் இயற்றிய பிரபந்தங்களை வெளியிட்டு உதவும் ஆரணி, பெரும்புலவர் திரு. கோ. கதிர்வேல் முதலியார் அவர்கள் தமிழ் கூறும் நல்லுலகத்தின் நன்றிக்கும் பாராட்டுதலுக்கும் உரியவர் ஆவார். இந்நூல்களை இவர் வெளியிடுவது காலத்தினாற் செய்யும் பேருதவியாகும்.

சிற்றிலக்கியங்களின் பாடல் எண்ணிக்கை வரையறைக்குட்பட்டவை; எனினும் நடைச் சிறப்பும் தொடை நலமும் கொண்டவை; மடக்கு, சிலேடை முதலிய அணி நயங்கள் செறிந்தவை; சமய, புராணக் குறிப்புகள்

மிக்கவை. ஆதலால் சிற்றிலக்கியங்களைப் படிக்கத் தொடங்குவோர் பேரிடர்ப்படுவது உண்டு. ஆழ்ந்தகன்ற நுண்ணிய புலமை உடையோர் துணையுடன்தான் இந்நூல்களின் கருத்து வளத்தையும் கற்பனை அழகையும் படித்து மகிழ இயலும். புலவர் திரு. கோ. கதிர்வேலு முதலியார் அவர்களின் குறிப்புரை, படிப்போர்க்குக் கைவிளக்காகப் பயன் படும். அவர்தம் இலக்கியப் பயிற்சியும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் திறமும் குறிப்புரையில் புலப்படு கின்றன. இரட்டையர் இயற்றிய அறிவுக் கருவூலத்திற்குப் புலவர்தம் குறிப்புரை ஒரு திறவு கோலாகும்.

தமிழன்பர்கள் இரட்டையரின் இணையற்ற நூல் களைப் பயின்று அறிவும் அருளும் பெறுவார்களாக!

**தி. ரா. செல்வராசன்**

# அணிந்துரை

திருக்குறள் நெறித் தோன்றல், நல்லாசிரியர்,
**புலவர். கோ. இளைய பெருமாள், ஆரணி, தி. ச. மா.**

பதினான்காம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் வாழ்ந்த புலவர் பெருமக்களுள் இரட்டைப் புலவர்கள் குறிப்பிடத் தக்கவர்கள். அவர்கள் இரட்டையர் ஆயினும் அத்தை மகன் அம்மான் மகன் என்னும் உறவு முறையுடையவர். பிறப்பால் இரட்டையர் என்பாரும் உளர்.

ஒருவர் கண்பார்வையற்றவர். மற்றொருவர் கால் முடம்பட்டவர். அவர்கள் உடலால் ஊனமுடையவர் ஆயினும் உணர்வால் ஊனம் இன்றித் தெய்வப்புலமை பெற்றவர். இளஞ்சூரியர், முதுசூரியர், என்றும் அழைக்கப் படுவர். பிறவிக்கவிஞராக விளங்கிய பெருமை மிக்கவர்.

சோழவள நாட்டில் ஆடுதுறைக்குத் தென்பால் உள்ள இலந்துறை என்னும் ஊரில் செந்தமிழ் நூல் விரித்த முருகப் பெருமானைக் குலதெய்வமாகக் கொண்ட செங்குந்தர் மரபினில் இரட்டையர் தோன்றினர்.

இளமைப் பருவத்திலேயே அவர்கள் பெற்றோரை இழந்தனர். அருட் செல்வம் பெற்ற அப்புலவர்கள் பொருட் செல்வம் இன்றி வறுமையால் வாடினர்.

**இருவே றுலகத் தியற்கை திருவேறு**
**தெள்ளிய ராதலும் வேறு**

என்பது பொய்யா மொழி யன்றோ?

'எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்' என்னும் பழமொழிக்கு எடுத்துக்காட்டாக இரட்டையர் வாழ்ந் தனர். முடவர் குருடருக்குக் கண்ணாகவும் குருடர் முடவருக்குக் காலாகவும் விளங்கினர். முடவர் குருடரின் தோள்மேல் ஏறிக்கொள்ளக் குருடர் அவரைச் சுமந்து செல்வார்.

பண்டைப் புலவர்களைப் போல் அவர்கள் வள்ளல் களைப் புகழ்ந்து பாடிப் பரிசு பெற்றுத் தம் வறுமையைப் போக்க விரும்பினர். ஆயினும் அக்காலத்தில் அவர்களின் தகுதியறிந்து பரிசு வழங்கும் வள்ளல்கள் அரியராயினர்.

ஒருநாள் அவர்கள் தில்லைக்குச் சென்றனர். தில்லைச் சிற்றம்பலவர் கோயிலின் வாயிலில் பட்டாடை அணிந்து பகட்டாகச் செல்வந்தர் ஒருவர் வருவதைக் கண்டனர். அச் செல்வரைப் புகழ்ந்து பாடினர் புலவர்கள். ஆனால் செல்வர் புலவரைப் பொருட்படுத்தாமல் செல்வா ராயினார். அதனால் இரட்டைப் புலவர் ஏமாற்றத்துடன் இறைவனை நோக்கிப் பின்வருமாறு பாடினர்:

முடர்முன் பாடல் மொழிந்தால் அறிவரோ ?
ஆடெடுத்த தென்புலியூர் அம்பலவா— ஆடகப்பொற்
செந்திருவைப் போலணங்கைச் சிங்காரித் தென்னபயன்
அந்தகனே நாயகன்ஆ னால்

முடவர் வெண்பாவின் முன் இரண்டடிகளைப் பாடுவார். குருடர் அவ்வடிகளை ஒட்டிப் பின் இரண்டடிகளைப் பாடி முடிப்பார். அவ்வாறு அவர்கள் பாடிய தனிப்பாடல்கள் பலவாகும். அவை சொற்சுவையும் பொருட்சுவையும் நிரம்பியவை.

தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினும்
சார்வி னுந்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள் !
இம்மை யேதரும் சோறும் கூறையும்
ஏத்த லாம்இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே—

என்னும் சுந்தரர் தேவாரத்தை எண்ணி அவர்கள் போலி மனிதர்களைப் புகழ்ந்து பாடும் பழக்கத்தை விட்டொழித்தனர். ஊர்தோறும் சென்று கோயில் வழிபாடு செய்து இறைவனைப் புகழ்ந்து பாடும் பணியே பணியாகக் கொண்டனர். அக்காலங்களில் பக்திச் சுவை ததும்பப் பல தனிப்பாடல்களுடன் தமிழில் இனிய இலக்கிய நூல்களும் இயற்றித் தமிழன்னைக்கு அணிகலமாகச் சூட்டினர்.

தில்லைக்கலம்பகம், திருவாமாத்தூர்க்கலம்பகம், காஞ்சி ஏகாம்பரநாதர் உலா என்பவை இரட்டையர் பிரபந்தம் எனப்படும். அவை "நவில்தொறும் நூல்நயம் போலும்" என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கு எடுத்துக் காட்டாக உள்ளன.

சிற்றிலக்கிய வரிசையில் கலம்பகம் என்பதும் ஒன்றாகும். இரட்டைப் புலவர்கள் கலம்பகம் பாடுவதில் வல்லுநர். "கண்பாய கலம்பகத்திற்கு இரட்டையர்கள்" என்னும் தனிப்பாடல் அதற்குச் சான்றாகும். தில்லைக் கலம்பகம், திருவாமாத்தூர்க்கலம்பகம், ஆகிய இரு நூல் களும் கலம்பக வரிசையில் முதலிடம் பெற்று இரட்டைப் புலவர்களின் புகழை விளக்கி நிற்கின்றன

புயவகுப்பு, மதங்கு, அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் என்னும் பதினெட்டு உறுப்புக்களும் பொருந்துமாறு வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய நால்வகைப் பாக்களும் பாவினங்களும் கலந்துவர அந்தாதித் தொடை யால் பாடப்படுவது கலம்பகம் என்னும் சிற்றிலக்கிய மாகும்.

இரட்டைப் புலவர்கள் சிதம்பரதரிசனம் செய்ய வேண்டித் தில்லைக்குச் சென்றனர். அக்காலத்தில் சிதம் பரத்தில் இருந்த அடியார்கள் இரட்டையர்களை நோக்கி, திருப்பாதிரிப்புலியூருக்குத் தொல்காப்பியத்தேவர் கலம் பகம் இயற்றியதுபோல் இத்தலத்திற்கு ஒரு கலம்பகம் இயற்றியருள வேண்டும் என்று வேண்டினர். அதனைக்

கேட்ட இரட்டையர்கள், "சிவபெருமான்மீது கலம்பகம் பாடுதற்கு யாம் வல்லேம் அல்லேம்" என்றனர். அடியார்கள் பின்னும் வற்புறுத்தினர். இரட்டையர்கள் அப்பொழுதும் துணிவின்றித் திரிப்பாதிரிப்புலியூர்க் கலம்பகச் சுவடியில் கயிறு சார்த்திப் பார்த்தனர். அக் கலம்பகத்திலுள்ள,

பாடுவார் பாடும் பரிசில் வரிசையெல்லாம்
ஆடுவார் அன்றி அயலார் அறிவாரோ
தோடுவார் காதன்றே தோன்றாத் துணைஐயர்
பாடுவார் ஓரிருவர்க் கிட்ட படை வீடே

என்னும் பதினாறாம் பாடல் அவர்களுக்கு அகப்பட்டது. அதனைக்கண்டு புலவர்கள் இப்பாடலின் பின் இரண்டடியின் பொருளையறிந்து மனம் உருகித் தம்மைப் பாடும்படி ஆனந்த நடராசரே அருளாணையிட்டதாக நினைந்து தில்லைக் கலம்பகத்தை இயற்றினார்கள் என்பர் பெரியோர்.

தில்லைக் கலம்பகம் என்பது தில்லையில் கோயில் கொண்டருளிய நடராசப் பெருமானைப் பற்றிப் பாடிய பிரபந்தம் ஆகும். இப்பிரபந்தத்தில் தில்லை நகரின் சிறப்பும் நடராசப் பெருமானின் அருட் பெருக்கும் புலப்படும் வண்ணம் கலம்பக உறுப்புக்கள் பதினெட்டும் அமையப் பல்வகைப் பாக்களால் பாடப்பட்டுள்ளன.

எளிய நடையில் புதுக்கவிதைகள் பெருகிவரும் இந்நாளில் இலக்கண வரம்புடன் மரபுக்கவிதைகளாலான இலக்கிய நூல்களைப் படிப்பவர் அரியராவர். இந்நிலை

யில் புதைபொருளாகக் கிடக்கும் பழந்தமிழ் இலக்கியக் கருத்துக் கருவூலங்களையும் அவற்றை ஆக்கிய புலவர் பெருமக்களின் புலமைச் சிறப்பையும் அறிந்து போற்றும் ஆர்வமும் திறமையும் மங்கிவருகின்றன. எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்னும் தமிழ் முழக்கம் எங்கும் கேட்கின்றது.— ஆயினும் தமிழ் வளர்ச்சியில் போதிய முயற்சியின்றித் தமிழ் மக்கள் தங்களை வளர்ப்பதிலேயே கண்ணுங்கருத்துமாக இருக்கின்றனர். தமிழ் மொழியில் ஆர்வம் கொண்டு பழந்தமிழ் நூல்களைப் போற்றிப் பாதுகாத்துப் படித்து இன்புறுதல் தமிழ்மக்களின் தலையாய கடமையாகும்.

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தைச் சேர்ந்த வேலூர் ஸ்ரீவேங்கடேஸ்வரர் மேல்நிலைப் பள்ளியில் முதல் நிலைத் தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற முதுபெரும் புலவர் ஆரணி திரு. கோ. கதிர்வேலு முதலியார் அவர்கள் தம் ஓய்வு நாளில் பண்டைத்தமிழ் நூல்களை ஆராய்ந்து படித்துச் சுவைத்து இன்புறுதலைப் பொழுது போக்காகக் கொண்டுள்ளார்.

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்

என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கேற்ப அவர் இரட்டைப் புலவர்கள் இயற்றிய காஞ்சி ஏகாம்பரநாதர் உலா, தில்லைக்கலம்பகம், திருவாமாத்தூர்க்கலம்பகம் ஆகிய நூல்களை ஆராய்ந்து குறிப்புரை எழுதி ''இரட்டையர் பிரபந்தம்'' என்னும் தலைப்பில் வெளியிட முன்

வந்துள்ளார். அவருடைய அரிய தமிழ்ப்பணி நன்றியுடன் பாராட்டி வரவேற்கத்தக்கது.

திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம் ஆரணி வட்டம் காமக்கூர் மகாவித்துவான் சிவத்திரு மு. சுந்தர முதலியார் அவர்களிடத்திலும் அன்னார் திருமகனார் சித்தாந்தரத்நாகரம், மதுரகவி, முதுபெரும் புலவர் சீலத்திரு முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்களிடத்திலும் முறையாகத் தமிழ் இலக்கிய இலக்கண நூல்களைப் பாடங் கேட்டுச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் (1943) வித்துவான் பட்டம் பெற்றவர். சைவப் பற்றும் தமிழ்ப் பற்றும் மிக்கவர்.

கலம்பகத்தில் திரிபு, யமகம், மடக்கு, சிலேடை முதலிய அரிய பாடல்களை நன்கு படித்து எளிதில் புரியும்படி சீர் பிரித்து அருஞ்சொற்களுக்குக் குறிப்புரை எழுதி வெளியிட்டிருப்பது அவருடைய நுண்மாண் நுழைபுலனை நன்கு விளக்கும்.

பழந்தமிழ் ஏட்டுச் சுவடிகளை இருக்கும் இடம் தேடிச் சென்று கண்டுபிடித்து ஆராய்ச்சி செய்து குறிப்புரை எழுதிப் பதிப்பித்த மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றிப் புலவர் திரு. கோ. கதிர்வேல் முதலியார் அவர்கள் இரட்டைப்புலவர்களின் நூல்களை அரிதில் முயன்று தேடி வெளியிட்டுள்ளார்.

என் தமிழ்க்கல்விக்கு வழிகாட்டியாக உறுதுணை புரிந்து ஊக்கமூட்டிய என் முன்னவர் வெளியிடும்

நூலுக்குப் பின்னவனாயினும் அன்பின் பெருக்கால் அணிந்துரை எழுதும் வாய்ப்பினை என்னிடம் அளித்தார். அதற்குரிய தகுதி எனக்கு இல்லையென்றாலும் என் சிற்றறிவிற்கு எட்டியவரை தில்லைக்கலம்பகத்திலிருந்து குறிப்பிடத்தக்க சில பகுதிகளை மட்டும் எடுத்துக்காட்ட விரும்புகின்றேன்.

இரட்டைப் புலவர்கள் இந்நூலுக்கு விநாயகர் காப்பாகக் கற்பக விநாயகக் கடவுளை அமைக்கின்றனர். விநாயகரைப் பாடத் தொடங்கியவர், ''கந்தனுக்கு முன் பிறந்த கற்பக மால்யானை'' என முருகவேளையும் உடன் வைத்துப் பாடியுள்ளனர். இதனால் செங்குந்த மரபில் தோன்றிய அவர்கள் தம்குல தெய்வமாகிய முருகப் பெருமானிடத்தில் கொண்ட பற்று நன்கு வெளிப்படு கின்றது.

தில்லைச் சிற்றம்பலத்தில் நடனம் புரியும் சிவபெரு மானைத் தரிசித்தவர்களுக்கு முத்தி கிடைக்கும் என்பது தெரிந்த உண்மை. அத்துடன் இறைவன் திருவடிகளைப் பரிசிக்க, வசனிக்க, வணங்க, மலரால் அருச்சிக்க, பிரதக் கணம் செய்ய முத்தியளிப்பாரென்று தில்லைக்கலம்பகம் 26 ஆம் செய்யுளில் கூறப்பட்டுள்ளது.

சிதம்பரத்தில் வயது முதிர்ந்து இறந்தாலும் பிறந்த வுடன் இறந்தாலும் உடல் கொழுத்துச் செத்தாலும் மெலிந்து செத்தாலும் கொலை செய்யப்பட்டாலும் புழுத்துச் செத்தாலும் புதையுண்டாலும் காலில் புரியைக் கட்டி இழுத்துச் செத்தாலும் இறப்பது நன்மை தருவதாகும் என்பது 28 ஆம் பாட்டின் கருத்து.

காஞ்சிமா நகரில் காசினி இலிங்கம், திருவானைக் காவில் அப்புலிங்கம், திருவண்ணாமலையில் வன்னி (சோதி) இலிங்கம், காளத்தியில் வாயுஇலிங்கம், சிதம் பரத்தில் ஆகாய லிங்கம் என்று 32 ஆம் பாட்டில் பஞ்சபூத இலிங்கங்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். மேலும் அப் பாட்டில் ஐந்து சபைகளைப் பற்றியும் குறிப்பிடுகின்றார். திருக்குற்றாலத்தில் சித்திரசபை, பழையனூரில் இரத்தின சபை, திருநெல்வேலியில் தாம்பிரசபை, மதுரையில் வெள்ளியம்பலம், தில்லையில் பொன்னம்பலம் என்பவை அவை.

சுந்தர மூர்த்தி சுவாமிகளுக்காகச் சிவபெருமான் பரவையார்பால் தூது சென்றமை, ஆற்றிலிட்ட பொன்னைத் திருவாரூர் குளத்தில் எடுத்தது புகலூரில் செங்கல்லைச் செம்பொன்னாக்கியது ஆகிய அற்புதங் களையும் குறிப்பிடுகின்றார். மற்றும் மூவர் அருளிய தேவாரத்திருப்பதிகங்களில் இறைவர் மிக விருப்ப முடையவர் என்பதனைப் பல வரலாறுகள் வாயிலாக அங்கங்கே அமைத்துப் பாடியுள்ளதைக் காணலாம்.

கார்காலம் முதலிய அறுவகைப் பருவங்களிலும் தலைவனைப் பிரிந்த தலைவி ஆற்றியிருந்ததைக் கூறும்போது ஆவணி— புரட்டாசி, ஐப்பசி— கார்த்திகை, மார்கழி— தை, மாசி— பங்குனி, சித்திரை— வைகாசி, ஆனி— ஆடி ஆகிய மாதங்களில் ஆவணி, ஐப்பசி, மார்கழி, மாசி, சித்திரை, ஆனி என்பன எதுகையில் வைத்துப் பாடப்பட்டுள்ள நயம் வியத்தற்குரியது.

சங்கப் பலகையில் இருந்து தமிழாராய்ந்தது, பாணனுக்குப் பொற்பலகையிட்டது, நரியைப் பரியாக்கியது, பிட்டுக்கு மண் சுமந்தது— முதலிய மதுரையில் நடந்த இறைவர் திருவிளையாடல்கள் குறிப்பிடப் பட்டுள்ளன.

அகப்பொருட் செய்திகளாக நாணிக்கண் புதைத்தல், வறுங்களம் நாடி மறுகல், தூது, அவையவத் தருமை சாற்றல், இடமணித் தென்றல், இரங்கல், அவையவங் கூறல் முதலிய துறைகள் காணப்படுகின்றன.

காந்தள் மலர் மலையிலே மலரும் முறை மாறிக் கடலிலே மலர்வது புதுமை என நாணிக்கண் புதைத் தலைக் கற்பனை நயத்துடன் கூறியுள்ளார். கடல்— கண்; காந்தள்—கை. (46)

இறுதியாகவுள்ள உயிர்வருக்க மோனை ஆசிரியப் பாவில் அம்பலக் கூத்தன் எனத் தொடங்கி ஓமாம் புலியூர்ச் சிற்றம்பலவன் எனப் பல சிவத்தலங்களைக் கூறி முடிக்கின்றார். இன்னும் விரிக்கிற் பெருகுமென்றஞ்சி இத்துடன் அமைகின்றேன்.

தமிழ் கூறும் நல்லுலகம் இந்நூலை வரவேற்றுப் பயன்கொள்ளுமாக.

*31-12-90*
*சைதாப்பேட்டை,*
*ஆரணி.*

**கோ. இளைய பெருமாள்**

# பதிப்புரை

## தில்லைக்கலம்பகம்

தில்லை நகரில் (சிதம்பரத்தில்) கோயில் கொண் டருளியுள்ள நடராசப் பெருமான் மீது இரட்டைப் புலவர் பாடியருளிய பிரபந்தம் இது

புயவகுப்பு, மதங்கு முதலிய கலம்பக உறுப்புக்கள் பதினெட்டும், மடக்கு, மருட்பா அகவல், அகவல்விருத்தம், கலியினம், வஞ்சித்துறை ஆகியவற்றோடு இடையிடையே வெண்பா கலித்துறைப் பாடல்கள் விரவிவர அந்தாதி மண்டலித்து வருவது இதன் சிறப்பாகும். இந்நூல் காப்பு 1. நூல் 100 ஆக 101 செய்யுட்களை உடையது.

முதற்பாடலில் தில்லையாகிய பெரும்பற்றப் புலியூரிலுள்ள மன்றங்கள்: திருச்சிற்றம்பலம் பொன்னம் பலம், பேரம்பலம் எனக் குறிக்கப்பட்டுள்ளன. நடராசர் திருவடி சாலோக, சாமீப, சாரூபந்தருவன என்றும், அதனால் சிவகங்கையில் நீராடித் திருவைந்தெழுத்தைச் செபித்து வணங்கினால் இறைவன் திருவடிப் பேற்றை அடையலாம் எனக் கூறுகின்றனர்.

தில்லையில் நடராசரைத் தரிசித்தோர் பெறும் பேறும், தரிசிக்காமல் அவமே பொழுதைக் கழிப்போர் அடையும் பயனும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. நடராசர் திருவடிகளை மறவாமல் பரிசிக்க, வசனிக்க, பணிய, மலரால் அருச்சிக்க, பிரதக்கணம் செய்ய முக்தி தருவார் எனக் கூறும் திறம் அறியலாம்.

## திருவாமாத்தூர்க்கலம்பகம்

திருவாமாத்தூரில் கோயில் கொண்டருளியுள்ள அழகிய நாதரைப்பற்றிய நூல் இது. இறைவன் திருப்பெயர் அழகியநாதர், அம்மையார் பெயர் அழகிய நாயகி என்பது. ஆக்கள் (பசுக்கள்) பூசித்துப் பேறுபெற்ற தலமாகையால் இஃது ஆமாத்தூர் எனப் பெயர் பெற்றது. ஆமாத்தூர் ஆமாதை எனவும், மாதை எனவும் நூலுள் மருவிவருகின்றது ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் ஆகிய அருளாளர் மூவர் பாடலும் இத்தலத்துக்கு உண்டு.

காப்பு 1 நூல் 101 ஆக 102 பாடல்களையுடையது இந்நூல். கலம்பகவுறுப்புக்கள் பதினெட்டும் நன்கு அமைந்துள்ளதை நூலுட் காணலாம். யோகினியார் என்ற துறையும் இதில் வந்துளது. இரட்டைப் புலவர் வாக்கில் சிவபரத்துவம் நிரம்பி இருப்பதால், ''கண்பாய கலம்பகத்திற்கு இரட்டையர்கள்'' என அறிஞர் சிறப்பித்துக் கூறுவர்.

## ஏகாம்பரநாதருலா

தமிழ் மொழியில் வழங்கும் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் உலா என்பதும் ஒன்று. பாட்டுடைத்தலைவன் பவனி (உலா) வரும்போது பேதை முதலிய ஏழு பருவமகளிரும் அவனைக் கண்டு மயங்கி அவனை அடையவிரும்புவதாகச் செய்யுள் செய்வது இதன் இலக்கணம்.

கவிஞர் தாம் வழிபடும் கடவுள் மீதும், தம்மை ஆதரித்த அரசர் மீதும் பண்டைக் காலம் தொட்டே உலாப் பாடிவந்திருக்கின்றனர். சிவபெருமான்மீது சேரமான் பெருமாள் நாயனார் பாடியது திருக்கயிலாய ஞான உலாவாகும். கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் தம்மைப் பெருமைப் படுத்திய சோழ மன்னர் மூவர்மீது பாடியது மூவருலா என வழங்குகின்றது.

காஞ்சிபுரத்தில் கோயில் கொண்டருளியுள்ள திருவேகம்பநாதர் மீது இரட்டைப் புலவர் பாடியது ஏகாம்பரநாதருலா. திருக்கச்சி ஏகம்பம் தேவாரப் பாடல் பெற்ற தலமாகும். அத்தலத்தில் உமாதேவியார் ஒருமாவின் கீழராகிய ஏகம்பநாதரைப் பூசித்துச் சிறப்புப் பெற்றார். தலவிருட்சம் மாமரம்.

இந்நூல் 556 கண்ணிகளையுடையது.

ஏகாம்பரநாதர் திருத்தேரிலமர்ந்து தமது பரிவாரம் புடைசூழ பவனிவருவது பலமுறை படித்து மகிழ்தற்குரிய செய்தியாகும்.

திருமலையில் கோயில் கொண்டுள்ள காத்தற் கடவுளாகிய கருணாமூர்த்தி திருவேங்கடப் பெருமான் தன்னை வழிபடும் அடியார்களுக்குத் திருவும் சிறப்பும் நிறையச் செய்பவன். அவனடியார்கள் நாள்தோறும் அவன் திருக்கோயிலை அடைந்து எம்பெருமானைக் கண்ணாரக் கண்டும் வாயாரப் புகழ்ந்தும் வணங்குவதோடு, காணிக்கையாகப் பொன்னும் பொருளுமாக அவன் கருவூலத்தை நிரப்பிக்கொண்டு இருக்கின்றனர்.

கோயில் நிருவாகத்தினர் பக்தியைப் பரப்புவதற்குரிய சமய சம்பந்தமான நூல்களை எழுதி வெளியிடும் வெளியீடுகளுக்குப் பொருளுதவி செய்து வருகின்றனர். வரையாது வழங்கும் அந்த நிதியுதவித் திட்டத்தில் நிதி உதவி பெற்று இந்நூல் வெளியிடப் படுகின்றது.

திருவேங்கடப் பெருமானின் கருவியாக இயங்கும் தேவஸ்தானத்தார்க்கும், குறிப்பாக E. O. அவர்கட்கும், எடிடர் திரு. K. சுப்பாராவ் M. A. அவர்கட்கும், வேலூர் ஸ்ரீ வேங்கடேசுவரர் மேல்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. A. ரத்தினம் அவர்கட்கும் எனது அன்பு கலந்த நன்றியைப் புலப்படுத்துகின்றேன்.

மேலும் இந்நூலுக்கு நூன்முகம் எழுதி வழங்கிய பேராசிரியர் டாக்டர். திரு. தி.ரா. செல்வராசன். எம்.ஏ, எம். லிட்., பிஎச்டி. அவர்கட்கும், அணிந்துரை எழுதி அளித்த நல்லாசிரிய விருது பெற்ற, வித்துவான். திரு. கோ. இளையபெருமாள் அவர்கட்கும், இந்நூல் சிறந்த முறையில் வெளிவர ஊக்கமும் ஆக்கமும் வழங்கிய பெருமக்கள் ஆரணி ஜவுளி அதிபர் திரு. R. N. சாமி அவர்கள், ஆரணி கல்யாணி சில்க் டெக்ஸ்டைல்ஸ் திரு. K. M. S. சிவகுமரன் அவர்கள் ஆகியோர்க்கும் என உளங்கனிந்த நன்றி என்றும் உரியதாகுக.

உரிய காலத்தில் அழகிய முறையில் அச்சிட்டு உதவிய சென்னை மயிலை ஸ்ரீ பரமேஸ்வரி அச்சக உரிமையாளர், மற்றும் தொழிலாளர்கள் அனைவர்க்கும் எனது நன்றியை அறிவிக்கின்றேன்.

இங்ஙனம்

*24-4-1991* **கோ. கதிர்வேலு முதலியார்**

# உள்ளே...

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# தில்லைக்கலம்பகம்

[சிதம்பரம் நடராசப் பெருமான் மீது இரட்டைப் புலவர் பாடியது]

பதிப்பாசிரியரும் குறிப்புரை ஆசிரியரும்

வித்துவான்

**கோ. கதிர்வேல் முதலியார்**

முன்னாள் தலைமைத் தமிழாசிரியர்

ஸ்ரீ வேங்கடேசுவரர் மேல்நிலைப் பள்ளி, வேலூர்

அருள்நெறி மன்ற வெளியீடு

30, மேட்டுத் தெரு, சைதாப்பேட்டை

ஆரணி, 632 301

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# தில்லைக்கலம்பகம்

## காப்பு

நேரிசை வெண்பா

**அல்லைப் பொருவும் அணிமிடற்(று)எம் ஐயனுறை**
**தில்லைத் கலம்பகத்தைச் செப்பவே— ஒல்லையிலே**
**கற்பகமுன் சத்திவிடும் கந்தனுக்கு, முன்பிறந்த**
**கற்பகமால் யானைஅருள் காப்பு.**

*(குறிப்புரை) அல்லைப் பொருவும்—இருளைப் போன்ற, அணிமிடற்று—அழகிய நீலகண்டத்தையுடைய, ஐயன் உறை—இறைவன் எழுந்தருளியுள்ள, தில்லைக் கலம்பகம் செப்ப—தில்லை நடராசப் பெருமானுடைய கலம்பகம் என்ற நூலைப் பாட, ஒல்லை—விரைவு, (கல்+பக) கற்பக, கல்பக—கிரவுஞ்சமலை பிளக்கும்படி, சத்திவிடும்—உமாதேவி அருளிய வேலாயுதத்தை ஏவிய, கந்தனுக்கு முன் பிறந்த—முருகப்பெருமானுக்கு முன்னே தோன்றிய, கற்பகமால்யானை அருள்காப்பு—கற்பகமால் யானையின் திருவருள் காப்பாகும். கற்பகமால் யானை என்பது விநாயகரின் திருப்பெயர்.*

உ

சிவமயம்

# தில்லைக்கலம்பகம்

## நூல்

*(1) நேரிசையொத்தாழிசைக் கலிப்பா*

சீர்கொண்ட மன்றமென்றும் திருச்சிற்றம் பலமென்றும்
ஏர்கொண்ட பொழிற்றில்லை எழில்பொன்னம் பலமென்றும்
வார்கொண்ட முலையுமையாள் வாழ்பேரம் பலமென்றும்
பேர்கொண்ட கனகசபைப் பெரும்பற்றப் புலியூரோய்

*இது தரவு*

I பூலோக முதலாய புவனங்கள் அளிப்பதுவும்
சாலோகந் தருவதும்நின் சரணார விந்தமன்றே.

II பூமீது வலஞ்செய்து புகழ்ந்தோதும் அடியவர்க்குச்
சாமீபம் அளிப்பதும்நின் தாட்கமல மலரன்றே.

III நீருரும் சடைமௌலி நிலவெறிப்ப மறையொலிப்பச்
சாரூபம் தருவதும்நின் தாமரைப்பூஞ் சரணன்றே.

*இவை மூன்றுந் தாழிசை*

அதனால் *(இது தனிச்சொல்)*

அலம்புநீர் மூழ்கியும் அஞ்செழுத்து நவின்றும்
பொலம்புனை நறுமலர் புனைந்தும்
சிலம்படி பரவுதும் செனனமறற் பொருட்டே

*இது சுரிதகம்*

(குறிப்புரை) (தரவு) சீர்கொண்டமன்றம்—சிறப்புடைய ஆயிரக்கால் மண்டபம்.

திருச்சிற்றம்பலமென்றும், பொன்னம்பலமென்றும், பேரம்பலமென்றும் பல பெயர்களைக் கொண்டது கனக சபை. ஏர்கொண்ட—அழகு பொருந்திய, எழில்—அழகு, பொழில்—சோலை.

I (தாழிசை)

பூலோகம் முதலாய—பூவுலகம் முதலிய, புவனங்கள்—உலகங்களை, அளிப்பதுவும்—படைத்துக் காப்பதும், சாலோகம்—கடவுள் உலகம், சரணாரவிந்தம்—திருவடித் தாமரை.

II

பூ மீது வலஞ்செய்து—நாட்டிலுள்ள திருத்தலங்களுக்குச் சென்று (தரிசித்து), புகழ்ந்து ஓதும் அடியவர்—உம்மைப் புகழ்ந்து பாடித் துதிக்கும் அடியவர்கள், சாமீபம் அளிப்பது—கடவுள் உலகில் அவருக்கு அருகில் இருக்கச் செய்வது, தாள்கமலமலரன்றே—திருவடித் தாமரை அல்லவா?

III

சடைமௌலி நிலவு எறிப்ப—சடைமுடியில் நிலா ஒளிவீச, மறை முழங்க—வேதங்கள் ஒலிக்க, சாரூபம் தருவது—கடவுள் உருவம் போன்று வாழ அருள் செய்வது, நின்தாமரைப் பூஞ்சரண்—உமது தாமரை மலர் போன்ற திருவடியே.

அதனால்— ஆகையினால்

(சுரிதகம்)

அலம்பு நீர் மூழ்கியும்—தீர்த்தங்களில் நீராடியும், அஞ்செழுத்து நவின்றும்—பஞ்சாக்கரம் செபித்தும்,

பொலம்புனை—பொன்மயமான, நறுமலர் புனைந்தும்—நல்ல மலர்களால் அலங்கரித்தும், சிலம்படி—சிலம்பணிந்த உமது திருவடியை, பரவுதும்—துதிக்கின்றோம், சென்னம் அறற்பொருட்டு—எமது பிறவி நீங்குதற்காக. 1

(2) நேரிசைவெண்பா

பொருள்வடிவாய் நின்ற புனிதா கயவர்க்(கு)
இருள்வடிவாய் நின்ற இறைவா— அருள்வடிவம்
ஆளவா நின்தாள் அவாவென்(று) அறிந்துதில்லை
வானவா நின்றாள வா

(குறிப்புரை) தில்லை வானவா—சிதம்பரத்திலுள்ள தேவனே, புனிதா—தூய்மையானவனே, கயவர்க்கு—கீழ் மக்களுக்கு, இருள்வடிவாய் நின்ற இறைவா—இருண்ட வடிவமாகக் காட்சியளிக்கும் இறைவனே, அடியார்க்கு அருள்வடிவமானவா-பக்தர்களுக்கு அருளுருவமானவனே, நின்தாள்அவாஎன்றறிந்து—உமது திருவடிகளை விரும்பித் தொழுகின்றேன் என்பதை அறிந்து, நின்றுஆளவா—என் உள்ளத்திலிருந்து ஆட்கொள்ள வருவீராக. 2

(3) கட்டளைக்கலித்துறை

வாசவ னந்தி மதிகதிர் வானவர் மாமலரோன்
கேசவ னந்திக் கணபதி வேலவன் கெங்கையுமை
நேசவ னந்தி யனந்தன் பரவிடு நீலமிடற்(று)
ஈசவ னந்திகழ் தென்புலி யூரவென்(று) ஏத்துமினே

(குறிப்புரை) வாசவன்-இந்திரன், அந்திமதி—பிறைச் சந்திரன், கதிர்—கதிரவன், மலரோன்—பிரமன், கேசவன்—திருமால், நந்தி—நந்திதேவர், உமைநேச—உமைக்கு நேசனே, நீலமிடற்று ஈச—நீலகண்டத்தையுடைய ஈசனே, தென்புலியூர்என்றுஏத்துமின்—அழகிய புலியூரனே என்று துதியுங்கள்.

கேசவன் அந்திக் கணபதி எனப் பொருள்கோடலும் ஆம். ஈச+அனம்+திகழ்= ஈசவனந்திகழ், அனம்—அன்னம், ஈச—அண்மைவிளி, அனம்—அன்னம் என்பதன் இடைக்குறை. 3

(4) எழுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

மின்னொன்று வான மதியொன்று வேணி
விடையொன் றிருந்த கொடியார்
மன்னொன்று சோதி நடமொன்று தில்லை
மணிமன்றின் முன்றி லிடையே
பொன்னொன்று மேனி யரவொன்று நீடு
புலியொனறு நின்ற வதனால்
என்னொன்று பேதை தொழுவான துணிந்தும்
எழுவாள் மடந்தை யிவளே

(குறிப்புரை) மின்ஒன்று—ஒளி பொருந்திய, மதிஒன்றுவேணி—பிறைமதி அணிந்த சடை, விடை...... கொடியார்—இடபக் கொடியை உடையவர், மணிமன்றின் முன்றிலிடை—அழகிய சபையின் முற்றத்தில், அரவு ஒன்று—பதஞ்சலியாகிய பாம்பு ஒன்றும், புலியொன்று—வியாக்கிர பாதராகிய புலியொன்றும், நின்ற அதனால்—இருப்பதனால், பேதை—பெண், தொழுவான் துணிந்தும்—தொழத் துணிந்தும், எழுவாள்—தொழாமலே செல்லுவாள்.

(5) அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

இவளைக்கண் டனைவோரும் இரங்குகின்றார்
பொழுதுபுகும் இடத்திற் பாய்ந்த
தவளைக்கண் டனைமறைத்துந் தாமரையின்
இதழ்குவியும் தடஞ்சூழ் தில்லைக்
குவளைக்கண் டனைக்கண்டு மாயவனாண்
முன்கையினிற் குழவி வைத்த
அவளைக்கண் டனைக்கண்ட அன்றுமுதற்
குடியிருப்ப(து) அருமைதானே.

(குறிப்புரை) பொழுதுபுகும்இடத்தில்-மாலை நேரத்தில், பாய்ந்ததவளைக்கண்தனைமறைத்து—தாமரையில் பாய்ந்த தவளையின் கண்களை மறைத்துக் கொண்டு, தாமரையின்இதழ்குவியும்தடம்சூழ்—தாமரை மலர் மூடிக் கொள்ளும் தடாகம் சூழ்ந்த, தில்லைக்குவளைக் கண்டனைக்கண்டு—தில்லை நீலகண்டனைப் பார்த்து, குவளைக்கண்டன்—நீலகண்டன், மாயஅனாள்—மயங்கிய தலைவி, கையினில்குழவிவைத்த—கையில் மான்கன்றை வைத்துள்ள, அ வளைக்கண்டனைக்கண்டஅன்றுமுதல்—அந்த அம்பலவாணனைப் பார்த்த நாள் முதல், குடியிருப்பதுஅருமை—தலைவி உயிரோடிருப்பது அரிதாயிற்று, இவளைக்கண்டுஅனைவோரும்இரங்குகின்றார்—இந்தத் தலைவியைக் கண்டு யாவரும் வருந்துகின்றனர்.

மாயவன்—திருமால், திருமால் மோகினியாகிச் சிவபெருமானுக்கு ஹரிஅர புத்திரன் என்னும் சாத்தனைப் பெற்றார் என்ற வரலாறு காண்க.

மாயவன் (திருமால்) தன் ஆண்மை பொருந்திய (சக்கரம் முதலிய படைவிடும்) முன் கையினில் குழவியை வைத்து விட்டார் சிவன். குழவியென்பது பெண்கள் அணியும் வளையையும் சாத்தனாராகிய குழந்தையையும் குறிக்கும். மாயவனாண் என்பது மாயவன்+ஆண் எனவும் மாயவன்+நாண் எனவும் பிரிதல் காண்க.

அ அளைகண்-அந்த அளைதலையுடைய (மயக்குதலையுடைய) கண் என்பது, வளைக்கண்—ஒசிந்த காமப் பார்வையும் ஆம்.

காமமூட்டும் ஆண்ட வன்கண் தன்னைக் கண்டது முதல் இத்தலைவி பூமியில் வாழ்வது அருமையாயிற்று.

(6) விருத்தம்

அருமை யாகிய பசுபதி அம்பலத்(து)
ஆடிதென் புலியூரின்
உரிமை யாகிய காளையைக் கண்டபின்
உயிர்வரும் அல்லாமல்
கருமை யாகிய கன்(று)இழந் திருப்பவள்
காலனார் பகட்டின்பின்
எருமை போனபின் இவளுயிர் மீளுமோ
ஏழமை மடவீரே

*(குறிப்புரை) ஏழமை மடவீர்—அறியாமையுடைய பெண்களே! பசுபதி—உயிர்களுக்குத் தலைவன், அம்பலத்தாடி-பொன்னம்பலத்தில் நடனம் புரிகின்றவன், தென்புலியூரின் உரிமையாகிய காளையை—தென் புலியூரின் உரிமையாகிய தலைவனை (இறைவனை) கண்டபின் உயிர்வருமல்லாமல்—பார்த்த பின்னர் அவன் உயிர்வருமேயன்றி, கன்றிழந்திருப்பவள்—காமத்தால் வளையலை இழந்திருப்பவள், கன்று—வளையல், காலனார் பகட்டின் பின் எருமை போனபின்—எருமையை வெட்டிப் பலியிட்டால், இவளுயிர் மீளுமோ?—இவள் உயிர் வாழ்வாளோ, (வாழாள்) காளையைக் கண்ட பின்னரே இவள் உயிர் நிலைக்கும் என்பது கருத்து. (வெறியாட்டுப் பயன் தாராது)* 6

(7) கட்டளைக்கலித்துறை

மடலூர் வதுமறுத் தியான்செய்த நன்றி
மறக்தொழிந்தீர்
அடலூர் பகையெனில் ஆற்றுங்கொ லோமுன்றில்
ஆர்த்தசங்கம்
திடலூர் வளவயல் தென்புலி யூர்தென்றல்
தில்லைசுற்றுக்
கடலூர் மரக்கலக் காகமன் றோவஞ்சி
காதலர்க்கே

*(குறிப்புரை) அடலூர்பகையெனில்—(அம்பல்கூறும்) ஊரே வலிய பகையானால், முன்றில்ஆர்த்தசங்கம்— இல் முன் ஒலிக்கின்ற சங்குகள், தில்லைக்காதலர்க்கு— தில்லைத் தலைவர்க்கு, வஞ்சி—தலைவி, (அண்மை விளி), மரக்கலக்காகமன்றோ—கடலின் கண் செல்கின்ற மரக் கலத்தின் கூம்பின்மீது அமர்ந்துள்ள காகம் அம்மரக் கலத்தைவிட்டு அகலாததுபோல, தலைவி தலைவனை விட்டுப் பிரிந்திருத்தல் இயலாது என்பது.*

*"எறிகடல்வாய் எங்கும் போய்க் கரைகாணாது வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே"— குலசேகர ஆழ்வார்.* 7

*(8) நேரிசைவெண்பா*

காதில் இரண்டுபேர் கண்டோர் இரண்டுபேர்
ஏதிலராய்க் காணார் இரண்டுபேர்— பேதைமுலை
உண்ணார் இரண்டுபேர் ஓங்குபுலி யூரருக்குப்
பெண்ணான பேரிரண்டு பேர்

*(குறிப்புரை) புலியூரருக்கு—சிதம்பரம் நடராசருக்கு. காதில் இரண்டுபேர்—கம்பளர் அசுவதரர். தும்புரு, நாரதரும் ஆம் கண்டோர்—வியாக்கிரபாதர், பதஞ்சலி முனிவர். காணார் இரண்டுபேர்—திருமால், பிரமன். முலையுண்ணார் இரண்டுபேர்—விநாயகன், முருகன். பெண்ணானபேர் இரண்டுபேர்—சிவகாமவல்லி, கங்கை.*

8

*(9) அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.*

பேரம்பலவனை நினையும் பொழு(து) ஒரு
  பிறையும் சடைமுடியும்
சேரும் பலபல பவனத் தருவது
  திருவம் பலமன்றோ
தாரம் பலவனை தமர்தங் தையரொடு
  சரணம் புகஎளிதா

நீரம் பலவனை நினைஅன் பிலைஎனில்
நிரயம் பலபலவே.

(குறிப்புரை) பேரம்பலவனை—அம்பலவாணனை, நினையும் பொழுது—உள்ளத்தில் நினைக்கும்போது, பிறையும் சடைமுடியும் சேரும்—பிறைமதியும் சடைமுடியும் மனதில் வரும். (சாரூபம் எய்தலாம்) தாரம்பலவனை—மாலையணிந்த அம்பலவாணனை, தமர் தந்தையரொடு—சுற்றத்தோடும் தந்தையரோடும், சரணம் புகஎளிதா—அடைக்கலம்புக எளிதாகுமா? நீர் அம்பலவனை நினை—நீவிர் அம்பலவாணனை நினையுங்கள், அன்பிலைஎனில்—அவரிடம் அன்பில்லை யானால், நிரயம்பல—பல நரகம் அடைய நேரும். 9

(10) ஷை வேறு

பலகோடி மலரன்றி மலரொன்று புனைந்துலகம்
படைத்தான் வேதன்
மலர்கோடி அருகிருப்ப ஒருமலரால் விண்புரந்தான்
வச்ர பாணி
உலகோடி வணங்குதில்லை அம்பலவர் திருவடியில்
ஒருகண் சாத்தி
அலர்கோடி புனைந்திடுமுன் சக்கரம்பெற் றான்ஆழி
அரங்கத் தானே

(குறிப்புரை) பலகோடிமலர் அன்றி—கோடிக்கணக்கான மலர்கள் இருக்க, மலர்ஒன்றுபுனைந்து—தாமரை மலர் ஒன்றையே சூடி, வேதன்உலகம்படைத்தான்—பிரமன் உலகத்தைத் தோற்றுவித்தான், வச்ரபாணி—இந்திரன், ஒருமலரால்விண்புரந்தான்—கற்பகமலர் ஒன்றாலே விண்ணுலகை ஆண்டான், உலகுஓடிவணங்கு—உலக மக்கள் சென்று வணங்குகின்ற, தில்லைஅம்பலவர் திருவடியில்ஒருகண்சாத்தி—தில்லை நடராசர் திருவடியில் ஒரு கண்ணை மலராக இட்டு, அரங்கத்தான்அருச்சித்து—

திருமால் அருச்சனை புரிந்து, சக்கரம்பெற்றான்—சக்கராயுதத்தை அடைந்தார், உலகு—உலகமக்கள்—இடவாகு பெயர். 10

(11) அறுசீர்ச்சந்தவிருத்தம்

தனந்தத் தனனா தனந்தத் தனனா
தனந்தத்தத் தனனானா

அரங்கச்சிற் சபையார் மடந்தைக்குப் பிரியார்
அலங்கற்பொற் சடையாளர்
விரிஞ்சற்குத் துயில்கூர் முகுந்தற்குத் துரையாம்
விடங்கற்குப் பதியாமால்
மருங்குற்றுக் கயல்சேல் கரும்புக்குட் புகவே
வரும்பெற்றிச் சினவாளை
பெருங்கப்பற் கடல்மீன் உடன்தத்திக் கரைசேர்
பெரும்பற்றப் புலியூரே

(குறிப்புரை) அரங்கச் சிற்சபையார்—அரங்கமாகிய சிற்சபையினையுடையவர், மடந்தைக்குப்பிரியார்—சிவகாமவல்லிக்குப் பிரியமுடையவர், (மடந்தையைப் பிரியாதவர் எனவும் ஆம்) விரிஞ்சற்கு, முகுந்தற்குதுரை—பிரமனுக்கும் திருமாலுக்கும் தலைவர், கயல்சேல் மருங்குற்று—கயலும் சேலும் கரைப் பக்கம் வந்து, கரும்புக்குள்புக—கரும்புவயலை அடைய, சினவாளை—சினங்கொண்ட வாளைமீன், பெருங்கப்பல்கடல்மீனுடன் தத்தி—பெரிய கடல் மீனொடு சேர்ந்து போய், கரைசேர்—கரையை அடைகின்ற, புலியூர்—சிதம்பரம், கயல்சேல்வாளை—மருதநிலத்துக்குரியவை. கடல்மீன் நெய்தல் நிலத்துக்குரியது, மருதமும் நெய்தலும் மயங்கும் திணை மயக்கம் கூறியவாறு. 11

(12) நேரிசைவெண்பா

புலியூர் உறையும் புனிதா புகுவெண்
பலியூர் தொறுமிரக்கும் பண்பா—பொலி கயிலைக்

**கல்லில் இருக்கக் கடனானால் என்நெஞ்சக்**
**கல்லில் இருக்கக் கடன்**

*(குறிப்புரை) புலியூர் உறையும் புனிதா—புலியூரில் எழுந்தருளியுள்ள புனிதரே, வெண்பலி—சாம்பல், சோற்றுப்பலியும் ஆம், இரக்கும்பண்பா—யாசிக்கும் பண்பரே, கயிலைக்கல்—கயிலைமலை, நெஞ்சக்கல்—கல்போன்ற நெஞ்சம், இருக்கக்கடன்—இருப்பது கடமையாகும், கயிலைமலையில் இருப்பதுபோல என் உள்ளத்திலும் எழுந்தருள வேண்டும் என்பது கருத்து.* 12

## (13) புயவகுப்பு

*தந்தனந் தனதான தனதத் தனந்தன*

**கல்லினும் கடிதாக இறுகத் திரண்டன**
**கைவிலங்(கு) உயிர்மாள எதிரிட்டு வென்றன**
**கல்வியந் தணர்ஏவும் மழுவைத் திருந்தன**
**கையில்வெண் தலையோடு திகழப் பொலிந்தன**
**வில்லெனும்படிமேரு கிரியைப் புரந்தன**
**மெய்அருந் தவர்கோவை எழுதிச் சிவந்தன**
**வெய்யவன் குருடாக விழியைப் பிடுங்கின**
**வில்வமும் கழுநீரும் நிறையக் கிடந்தன**
**வல்லியம் தலைசாய உரியைக் கவர்ந்தன**
**வைகைமண் கரைமீது குவியச் சொரிந்தன**
**மல்கும்ஐந் தலைநாக மணியிட்(டு) அணிந்தன**
**வையகந் தருவோனை முடியைக் களைந்தன**
**செல்வியம் சிவகாமி தழுவக் குழைந்தன**
**தெய்வவெண் திருநீறு துதையப் புனைந்தன**
**தெள்ளுசெந் தமிழ்மூவர் கவியைச் சுமந்தன**
**தில்லைஅம் பலவாணர் கனகப் புயங்களே**

*(குறிப்புரை) தில்லை... கனகப்புயங்கள்—தில்லை நடராசப் பெருமானின் பொன்மயமான தோள்கள், கல்லினும் கடிதாக—கல்லைக் காட்டிலும் வலியதாக,*

இறுகித் திரண்டன—இறுகிப் பெருத்தன, கைவிலங்கு—மதயானை, எதிரிட்டு வென்றன—எதிர்த்து வெற்றி பெற்றன, அந்தணர் ஏவும்—தாருக வனத்து முனிவர் ஏவிய, மழுவைத்திருந்தன—மழுப்படையைத் தாங்கின, வெண்தலைஓடு—பிரமகபாலம், மேருகிரி—மேருமலை, வில்எனும்படி—வில்லாக, அருந்தவர் கோவை—மாணிக்கவாசகர் அருளிய திருக்கோவையார் என்னும் நூலை, எழுதிச்சிவந்தன—எழுதியதால் செந்நிறம் பெற்றன, வெய்யவன்—சூரியன், கழுநீர்—செங்கழுநீர் மலர், வல்லியம்—புலி, உரி—தோல், வையகம் தருவோன்-பிரமன், சிவகாமிதழுவ—சிவகாமவல்லி தழுவும்படி, திருநீறு—விபூதி, துதையப்புனைந்தன—மிகுதியாக அணிந்தன, மூவர்—ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரமூர்த்தி, செந்தமிழ்க்கவி—தேவாரத் திருப்பாடல்களை, சுமந்தன—தரித்தன. 13

(14) கலிவிருத்தம்

புயங்க மாலை புனைபுலி யூரினான்
வயங்க மாலை மதியணி வேணியான்
முயங்க மாலை முராரியை வேட்டவன்
உயங்க மாலை உதவினன் வஞ்சியே

(குறிப்புரை) புயங்கமாலைபுனை—பாம்பை மாலையாக அணிந்த, வயங்க—விளங்கும்படி, மாலைமதி—பிறைச்சந்திரன், வஞ்சியே—வஞ்சிக்கொடி போன்ற மாதே, முயங்க-தழுவுதற்கு, முராரி—திருமால், உயங்க—நீ வருந்தும்படி, மாலை உதவினன்—மயக்கத்தை (வேட்கையை)க் கொடுத்தான், இது செவிலித்தாய் கூற்று, கடவுளரைக்கண்டு மானிடப்பெண் காதல் கொள்வது.
14

(15) கட்டளைக்கலித்துறை

வஞ்ச மனத்தைச் சிதம்பரத் தாக்கிய வல்லமையைக்
கஞ்ச மனத்தை யுயர்த்தோன் வியந்தனன் வையிசைந்தான்

**வெஞ்ச மனத்தை யறிந்தபின் னீரினி விட்டுவிடீர்**
**கொஞ்ச மனத்தை யொருபாகம் வைத்த குணக்குன்றமே**

*(குறிப்புரை) கொஞ்சு அம் அனத்தை—கொஞ்சுவதற்காக அழகிய அன்னம் போன்ற உமையை, ஒருபாகம் வைத்த—இடப்பாகத்தில் வைத்தருளிய, குணக்குன்றம்—அருள்மலை, வஞ்சமனத்தை—வஞ்சனையுள்ள எனது மனத்தை, சிதம்பரத்து ஆக்கிய—சிதம்பர தரிசனத்துக்கு உரியதாகச் செய்த, கஞ்சம்மன்—பிரமன், நத்தை உயர்த்தோன்—பாஞ்சசன்னியத்தையுடைய திருமால், நத்து—சங்கு, வியந்தனன்—வியப்புற்றனர். வியந்தனன் என்பதை பிரமன், திருமால் ஆகியவற்றுடன் தனித்தனி கூட்டுக. வெஞ்சமன்கைபிசைந்தான்—கொடிய இயமன் இனி நாம் உயிர்களைக் கவர முடியாதே என்று கையைப் பிசைந்து கொண்டான். நந்து—நத்துஎன ஆனது. படைக்கும் கடவுள் பிரமனும் காக்கும் கடவுள் திருமாலும் தமக்கு வேலையில்லாமற் போனதறிந்து வியப்புற்றனர்.* **15**

தலைவி கூற்று

*(16) அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்*

**குன்றுளோன என்னும் தெய்வக் குறுமுனி வணங்கும் தில்லை**
**மன்றுளோர் நடனம காணா வஞ்சரைக் கண்டால் அஞ்சேன்**
**தெனறலோ(டு) இகலும் சேவல் சிறையினால் அணைத்த பேடை**
**அன்றிலோ என்னும் ஓசைக்(கு) அஞ்சுமென் நெஞ்சந் தானே.**

*(குறிப்புரை) குன்று—பொதியமலை, குறுமுனி வணங்கும்—அகத்திய முனிவர் வழிபடும், மன்றுளோர்—நடராசர், நடனம்காணா—நடனத்தைக் காணாத வஞ்சரை அஞ்சேன்—வஞ்சகமுடையவரைக்கண்டு அஞ்ச மாட்டேன், தென்றல்—தென்றற் காற்று, சேவல்—ஆண் பறவை, பேடை—பெண்பறவை, அன்றிலோ என்னும் ஓசைக்கு—அன்றில் பறவையோ என்று அலறும் ஓசை கேட்டு, அஞ்சும்என்நெஞ்சம்—என் உள்ளம் அஞ்சும்.*

அன்றிற் பறவையின் குரல் தலைவனைப் பிரிந்து தனித்து இருப்போருக்குத் துன்பம் தரும். 16

*"சழக்(கு) அன்றில் வாய்பிளந்தால் உய்யலாமென்று சாற்றுமினே" அழகரந்தாதி 16*

*(17) கட்டளைக்கலிப்பா கடைமடக்கு*

அஞ்சுபேயுடன் கானக மொன்றுமே
அரக்கனைப்பொருங் கானக மொன்றுமே
கஞ்சன் மால்தொழு மன்றவ ரங்கமே
கைலை மாலையு மன்ற வரங்கமே
வஞ்ச மான பரசிவ கங்கையே
மன்னு தீர்த்தம் பரசிவ கங்கையே
நெஞ்ச மேநீ சிதம்பரந் தில்லையே
நித்த மோது சிதம்பரந் தில்லையே

*(குறிப்புரை) கானகம் ஒன்றும்—சுடுகாட்டில் ஒன்றி நிற்கும், அரக்கன்—இராவணன், பொரும்—தாக்கும், கால்+நகம்=கானகம். கஞ்சன்மால்தொழு—பிரமனும் திருமாலும் தொழுகின்ற, மன்றவர்—சபாநாயகர், அங்கம்—உடலுறுப்பு கைலைமாலையும்—கயிலை மலையின் தன்மையும், மன்றஅரங்கம்—நிச்சயமாகச் சிற்றம்பலம், மன்னுதீர்த்தம்—நிலையானதீர்த்தம், சிவகங்கையே—சிவகங்கைத்தீர்த்தமே. நெஞ்சமே—மனமே, நீநித்தம்ஓது—நீ நாடோறும் துதிசெய், சிதம்பரம் தில்லையே—ஞான ஆகாசமான தில்லையே.* 17

*(18) பாதவகுப்பு*

தில்லைமூ வாயிரவர் பூசைபுரி பாதம்
தேவருட னேஇருவர் தேடரிய பாதம்
வல்லமா காளியொடு வாதுபுரி பாதம்
மாமுனிவற் காயமனை மார்பிலுதை பாதம்
சொல்லவே பரவையிடம் தூதுசென்ற பாதம்
தொல்புலிப தஞ்சலியும் தொண்டுசெயும் பாதம்

அல்லலாம் ஏழ்பிறவி தீரநட மாடும்
ஆதிபுலி யூர்திரு அம்பலவர் பாதம்

(குறிப்புரை) தில்லை மூவாயிரவர்—தில்லையிலுள்ள மூவாயிரம் அந்தணர்கள், பூசைபுரிபாதம்-பூசனைசெய்யும் திருவடி, தேவருடன் இருவர்—தேவர்களும் திருமாலும் பிரமனும், தேடரிய பாதம்—தேடிக்காண முடியாத திருவடி, காளியொடு வாதுபுரி—திருவாலங்காட்டில் காளியோடு நடனமாடிய, பாதம்—திருவடி, மாமுனிவற்கா—சிறந்த மார்க்கண்டனுக்காக, யமனை மார்பிலுதை—இயமனை மார்பிலே உதைத்த, பரவை யிடம்—பரவை நாச்சியாரிடம், புலிபதஞ்சலி—புலிக்கால் முனிவர் பதஞ்சலிமுனிவர், அல்லல்—துன்பம், ஏழ்பிறவி தீர—ஏழு பிறப்பும் நீங்க, அம்பலவர் பாதம்—சிற்றம்பல நாதர் திருவடி. 18

(19) கட்டளைக்கலித்துறை

அம்பல வாணனை வென்றோன் புறவத்(து) அரும்புமுல்லை
அம்பல வாணனை யார்குழல் வேற்கண் அரிவையரா
யம்பல வாணனைப் பெண்ணுருவாக அமர்ந்தவனை
அம்பல வாணனைப் போற்றாரின் வாடும் அவள்மருங்கே

(குறிப்புரை) அம்பலவாணனை—வலிமை மிகுந்த வாணாசுரனை, வென்றோன்—வென்ற திருமாலுக்குரிய, புறவம்—முல்லைநிலம், வாள்நனையார்குழல்—ஒளி பொருந்திய தேன் நிறைந்த கூந்தல், அரிவையர் ஆயம் பல—கோபியர் கூட்டம் பலவற்றுள், வாழ்நனை—வாழ்கின்ற கண்ணபிரானை (திருமாலை), பெண் ணுருவாக—மோகினியாக, அமர்ந்தவன்—உடையவன், அம்பலவாணன்—பொன்னம்பலவனை, போற்றாரின்—துதிக்காதவர் போல, இன்—ஐந்தன் உருபு, அவள்மருங்கு வாடும்—அவள் இடை தளர்வுறும். 19

(20) சந்தக்கலிநிலைத்துறை

தனதன தனதன தனதன தனதன தனதான

மருமலி சபையினில் வரதனை உமையொடு மலர்தூவிப்
பெருமையும் அடைகுவர் அவரவர் பதவிகள் பெறுவாரே
பொருமகள சசிமகள் வனமகள் புலமகள் புகழ்மாதர்
திருமகள் நிலமகள் ரதிமகள் நிதிமகள் செயமாதே

(குறிப்புரை) மருமலிசபையினில்—மணம் நிறைந்த கனகசபையில், வரதன்உமையொடு— நடராசப் பெருமானை சிவகாமவல்லியோடு, மலர்தூவி— மலரிட்டு வணங்கி, அவரவர்பதவிகள்பெறுவார்— அவரவர்களுக் குரிய பதவிகளைப் பெறுவார்கள், பொருமகள்— காளி, சசிமகள்—இந்திராணி, வனமகள்— துர்க்கை, புலமகள் —சரசுவதி, திருமகள்—இலக்குமி, நிலமகள்—பூதேவி, ரதிமகள்—இரதிதேவி, செயமாது— வெற்றிமகள். 20

(21) நேரிசை வெண்பா

மாதரெச்சிற் சிற்றம்பலத்தை வெளவாதே நன்னெஞ்சே
நீதிருச்சிற் றம்பலத்தை நின்றுதொழு—போதருச்சித்(து)
ஆடிப்பா டித்திரியா(து) ஆதுலர்போல் ஏதிலர்போல்
வாடிப்பா டித்திரியா மல்

(குறிப்புரை) நல்நெஞ்சேநீ—நல்ல மனமே நீ, மாதர்—இளமகளிரது, எச்சில்தம்பலத்தைவெளவாது— காமத்தால் முத்தமிட்டு அவரது எச்சில் வெற்றிலைச் சாற்றைக் கவராமல், திருச்சிற்றம்பலத்தை—சிதம்பரத்தில் எழுந்தருளியுள்ள நடராசரை, போதுஅருச்சித்து—மலர் களால் அருச்சனை புரிந்து, நின்றுதொழு—நின்று வணங்கு, ஆதுலர்போல்ஏதிலர்போல்— தரித்திரர் போலவும், அயலாரைப் போலவும், ஆடிப்பாடித்திரியா மல்-ஆடியும் பாடியும் திரியாமல், தொழு-வணங்கு. 21

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர் —குறள் 1121

(22) நிலைமண்டில ஆசிரியப்பா

மல்லலம் பணைசூழ் தில்லையம் பதியினில்
புழுவாய்ப் பிறப்பினும் மழுமான் கரத்தஎன்(று)
எழுதாக் கிளவி இருடி பகர்ந்ததும்
எழுதுமறை பகர்ந்த கழுமல முனிவன்
சங்கரன் புலியூர்ச் சதாசிவம்அனைத்தும்
செங்கர மழுமான் சுமந்தன தெரிந்து
பண்ணுறு செந்தமிழ்ப் பதிகம் பாடி
மண்ணுறு மாந்தர்கரு வகுத்துரைத தனவும்,
செவ்ப்புலம் கதுவத் தெளிந்தொழிந் தனன்யான்
அதனால், இருடிகளாகிய ஈங்கிவர் இருவர்
திருவடி நான்கும் சிரத்தின்மே லனவே

(குறிப்புரை) பணைசூழ்—வயல்கள் சூழ்ந்த, தில்லையம்பதி—தில்லைமாநகரில், மழுமான் கரத்த என்று—மழுவும் மானும் கரத்தில் உடையவனே என, இருடி பகர்ந்ததும்—வியாசமுனிவர் கூறியருளியதும், எழுதுமறை—தேவாரத் திருமுறைகளை, பகர்ந்த—கூறியருளிய, கழுமலமுனிவன்—ஞானசம்பந்தப் பெருமான், பண்ணுறு செந்தமிழ்—இசையோடு கூடிய செந்தமிழ்ப் பாடல்களான, பதிகம் பாடி—திருமுறைப் பதிகங்களை (தேவாரப் பாடல்களை)ப் பாடி, மாந்தர்க்கு—மக்களுக்கு, வகுத்துரைத்தனவும்—வகைப் படுத்திக் கூறியருளியதும், தெளிந்தொழிந்தனன்—அறிந்தேன், இருவர் திருவடி நான்கும்—வியாசமுனிவர், ஞானசம்பந்தர் ஆகிய இருவர் திருவடிகளையும், சிரத்தின் மேலான—என் முடிமீது வைத்து வணங்குகின்றேன். 22

(23) அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்
மதங்கியார்

இரு கைகளிலும் வாளேந்தி வீசி ஆடிப்பாடும் மதங்கர் குலப்பெண்.

சிரத்திலே கரங்குவித்து முப்பத்து முக்கோடி
தேவ ரெலலாம்
வரத்திலே தெண்டனிடும் அம்பலவர் தென்புலியூர்
மதங்கி யார்தம்
உரத்திலே கோடிரண்டு கதுப்பிலே கோடிரண(டு) என்
உயிரை வாட்டும்
கரத்திலே வாளிரண்டு முகத்திலே ஓரிரண்டு
கணைகள தானே

(குறிப்புரை) தேவரெல்லாம்—முப்பத்து முக்கோடி தேவர்களும், தெண்டனிடும்—வணங்கும், அம்பலவர்—அம்பலவாணரது, தென்புலியூர் மதங்கியார்—சிதம்பரத்தில் உள்ள மதங்கியாருக்கு, உரத்திலே கோடிரண்டு—மார்பிலே இரு தனங்கள், கதுப்பில்—கன்னத்தில், கோடு இரண்டு—இரு கோடுகள் (ரேகைகள்), கரத்திலே வாளிரண்டு—கைகளில் இரு வாட்படை, முகத்தில் ஓரிரண்டு கணை—முகத்தில் அம்புபோன்ற இருகண்கள். தான், ஏ—அசை. 23

(24) வஞ்சிவிருத்தம்

தானவரை யாளகனக சபையாமா
தானவரை யோமுழவு தனையோராய்
தானவரை யார்கிளவி தவறார்நீ
தானவரை ஆணைகொளல தவறாமே

(குறிப்புரை) தானவரைஆள்கனகசபையாம்-அசுரரை ஆட்கொள்ளும் பொற்சபை, மாதானம்வரை—பெரிய கோயிலின்கண், ஓர்முழவுதனைஓராய்—ஒப்பற்ற முழவின் ஒலியை அறிக, தானவரையார்—மலைநிலத் தலைவர், கிளவிதவறார்—சொல்தவறமாட்டார், நீஅவரை ஆணை கொளல்தவறாம்—அத்தலைவரை நீ கட்டளை இடுவது குற்றமாகும். தான், ஏ—அசை. 24

(25) எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

தவபுரத்தை இழந்துகொடு நரகில் வீழ்வர்
சாலகடங் கடராவர் தகுவ ராவர்
அவபுரத்தில் அம்பரத்தை அடைவர் தில்லை
அம்பலத்தில் திருநடத்தை அறியா தோர்கள்
பவபுரத்தை அகல்வர்அந்தப் புரத்தை ஆள்வர்
பரமபுரத்(து) அணிவர்நிதி படைத்து வாழ்வர்
சிவபுரத்தில் வீற்றிருப்பர் எம்மை ஆளச்
சிதம்பரத்தில் திருநடத்தைத் தெரிசித் தோரே

(குறிப்புரை) தில்லைஅம்பலத்தில்—தில்லைக் கனகசபையில், திருநடத்தைஅறியாதோர்—நடனக் கோலத்தைத் தரிசியாதவர், கொடுநரகில்வீழ்வர்—கொடிய நரகத்தைஅடைவார்கள், தகுவராவர்—அசுரராவர், சாலகடங்கடர்—இராக்கதர், அவபுரம்—மண்ணுலகம், அம்பரத்தைஅடைவர்—நடனத்தை தெரிசித்தோர் பிறவி நீங்குவர், மனைவியோடு மகிழ்ந்து வாழ்வர், நிதிபடைத்து வாழ்வர், மோட்சத்தை அடைவர். 25

(26) எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

தெரிசிக்க முத்திதரு நித்த ரத்தர்
சிகரப் புயத்தர் புலியூரில்
இருவர்க்கு நிர்த்தமிடு சிற்ச பைக்குள்
இறைபொற் பதத்தை மறவாமல்
பரிசிக்க முத்தி வசனிக்க முத்தி
பணிதற்கு முத்தி மலராலே
மருசிக்க முத்தி பிரதக் கிணத்தில்
வருதற்கு முத்தி தருவாரே

(குறிப்புரை) புலியூரில்—சிதம்பரத்தில், இருவர்க்கு—வியாக்கிரபாதர், பதஞ்சலிமுனிவர் இருவருக்கும், நிர்த்தமிடு—நடனம் புரியும், சிற்சபை—சிற்றம்பலம், இறைபொற்பதத்தை—இறைவன் திருவடிகளை, பரிசிக்க—தொட்டுவணங்க, வசனிக்க—புகழ்ந்து பாட, மருசிக்க—

மலரால் அருச்சனை புரிய, பிரதக்கணம்—வலம் வருதல், முத்திதருவார்—மோட்சமளிப்பார், தெரிசித்தல்-கண்ணின் தொழில், பரிசித்தல்—கையின் செயல், வசனித்தல்—வாய்க்குரியது, பணிதல்—தலையின் வேலை, அருச்சித்தல்—கை வாய் ஈருறுப்பின் செயல், பிரதக்கணம்—காலின் வேலை. 26

(27) நேரிசைவெண்பா

தருத்தாவு பூஞ்சோலைச் சங்கரா தில்லை
நிருத்தா உருகாதென் னெஞ்சம்—பருத்தமரம்
ஏவம் பழுத்த இடைவெளிறில் லாவயிரம்
பாவம் பழுத்த பழம்

(குறிப்புரை) தருதாவு—மரங்கள் உயர்ந்த, தில்லை நிருத்தா—தில்லையில் உள்ள நடராசப் பெருமானே, நெஞ்சம் உருகாது—என் உள்ளம் உருகவில்லை, ஏவு அம்பு அழுத்த—ஏவப்படும் அம்பு பாய, வெளிறில்லா—வயிரமின்மை இல்லாத (வயிரம் முதிர்ந்தது) நெஞ்சம், பாவம்பழுத்தபழம்—என் மனம் பாவம் முதிர்ந்தது, ஏவம்பழுத்த—குற்றம் முதிர்ந்த எனவும் ஆம். 27

(28) கட்டளைக் கலித்துறை

பழுத்துச்செத் தாலும் பிறந்துசெத் தாலும் பாமுடலம்
கொழுத்துச்செத் தாலும் மெலிந்துசெத் தாலும் கொலைப்படினும்
புழுத்துச்செத் தாலும் புதைத்தாலும் காலில் புரியைக்கட்டி
இழுத்துச்செத் தாலும் சிதம்பரத் தேசென்(று) இறத்தல்நன்றே

(குறிப்புரை) பழுத்து—வயது முதிர்ந்து, பிறந்து—பிறந்தவுடனே, கொழுத்து—உடல் பருத்து, மெலிந்து—நோயால் மெலிவுற்று, கொலைப்படினும்—கொல்லப் பட்டாலும், புரி—கயிறு, சிதம்பரத்தேஇறத்தல்நன்று—சிதம்பரத்தில் சாதல் நல்லது.

எந்த வயதில், எக்காரணத்தால், எந்நிலையில் இறப்பினும் சிதம்பரநகரில் இறத்தல் நல்லது என்றபடி. 28

(29) அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

நன்றென மகிழ்ந்தொரு சிதம்பர நடம்புரியும்
நம்பர் பரனார்
குன்றென உயர்ந்தவர் விரும்பிய பெரும்பதி
குடந்தை கடலூர்
தென்குடி வலஞ்சுழி புறம்பியம் எறும்பிமலை
செம்பிய னல்லூர்
அன்பில் புறவம் பழனம் வஞ்சிகளம் இஞ்சிகுடி
அம்பல் நகரே

*(குறிப்புரை) குன்றென—மலைபோல, விரும்பிய பதி—விரும்பி எழுந்தருளியுள்ள திருப்பதி, குடந்தை—கும்பகோணம், கடலூர்—திருக்கடலூர், வலஞ்சுழி—திருவலஞ்சுழி, இங்குக் கூறப்பட்ட சிவத்தலங்களின் பெயர் அடைமொழியின்றிக் கூறப்பட்டிருப்பது போற்றற் குரியது.* 29

மடக்கு

(30) பதினாறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

அம்பு லிக்கொரு நட்டம் புரிந்தவர்
அம்பு லிக்கொரு நட்டம் புரிந்திலார்
ஆழி யும்சங்கும் மாலுக் களித்தவர்
ஆழி யும்சங்கும் மாலுக் களித்திலார்
வம்பு லாவும் இதழியை வேட்டவர்
வந்து செய்ய இதழியை வேட்டிலார்
மானை யும்கைப் பிடித்தே நடத்தினார்
மானை யும்கைப் பிடித்தே நடத்திலார்
பம்பு வேலை விடமிட(று) ஆக்கினார்
பாவை யாசை விடமிட(று) ஆக்கிலார்
பரவை கோபமும் சோபமும் தீர்த்தவர்
பரவை கோபமும் சோபமும் தீர்த்திலார்
செம்பொன் மாளிகை அம்பலக் கூத்தனார்
தினமும் எங்களை அம்பலத்(து) ஏற்றினார்

தில்லை யம்பதி வாழ்நட ராசனார்
திருவு ளச்செயல் நன்றா யிருந்ததே

(குறிப்புரை) அம்புலி—முன்னது புலிக்கால் முனிவர் பின்னது சந்திரன், நட்டம்பயின்றவர்—நடனம் புரிந்தவர், மால்—முன்னது திருமால் பின்னது மயங்கிய தலைவி, ஆழியும்சங்கும்—முன்னது சக்கரமும் சங்கும் பின்னது மோதிரமும் வளையலும், இதழி—முன்னது கொன்றை பின்னது சிவந்த இதழையுடைய தலைவி, மான்—மான்கன்றை மான்போன்ற தலைவியை, வேலை விடம்—கடலில் தோன்றிய நஞ்சு, மிடறு—கழுத்து, பாவைஆசைவிட—தலைவியின் ஆசை நீங்க, பரவை—பரவை நாச்சியார், கடல் பரவையார் கோபத்தையும் தளர்ச்சியையும் நீக்கியவர் கடலால் தலைவிக்கு உண்டான உடல் எரிச்சலையும் தளர்ச்சியையும் நீக்கினாரல்லர். அம்பலம்—சிற்றம்பலம், அம்பல்—ஊரவர் கூறும் பழிச் சொல், கூத்தனார் திருவுளச்செயல் நன்றாயிருந்தது. 30

### களி

(31) அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

இரும்பெணணை விரும்பாதார் எவருளர்கட்
குடிமாறா(து) இருந்தான் வேதன்
வரும்பெண்ணை அகன்றபின்னெண் ணறவருந்தி
னான்முகுந்தன் மாலு மானான
சுரும்புண்ணும் மதுமுடியும் பசுந்தோடும்
பூமடலும் சுமந்து தோன்றிக்
கருமபெண்ணை நீஙகாமல் உடனிருந்தான்
கனகசபைக் கடவுள் தானே

(குறிப்புரை) களி—கள்ளுண்டு களிப்பவன் அதன் பெருமையைத் தானே கூறுதல்.

பெண்ணை—பெண், பனை இரண்டையும் குறிக்கும். பெண்ணைவிரும்பாதார்யாவர்— எவருமில்லை, இரும் பெண்ணை—கரிய பனையை, கட்குடி— மதுநிறைந்த

*தாமரையாகிய வீட்டை, வேதன் மாறாதிருந்தான்—பிரமன் நீங்காதிருந்தான், வரும் பெண்ணை—உடன் வந்த சீதையை, அகன்றபின்—நீங்கிய பின்னர், முகுந்தன்—திருமால், எண்ணறவருந்தினான்—அளவற்ற வருத்தமுற்றான், மாலும்ஆனான்—மயக்கமும் அடைந்தான், சுரும்பு—வண்டு, பூமடல்— பூவிதழ், கரும்பெண்—பார்வதி, கனகசபைக்கடவுள்— பொன்னம்பலநாதன், கரும்பெண்ணை—கருமை நிறமுள்ள பார்வதியை, கரிய நிறமுள்ள பனையை.* **31**

*(42) பதினான்குசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்*

கடல்விடம் நுகர்ந்த காசினி யிலிங்கம்
காஞ்சிமா நகருறை இலிங்கம்
காவிரி வடபால் வருதிரு வானைக்
காவினில் அப்புலிங் கமதாம்
வடதிசை அண்ணா மலையினில் லிங்கம்
வன்னியின் வடிவுகா ளத்தி
வாயுலிங் கமதாம் சிதம்பர லிங்கம்
மாசில்ஆ காயலிங் கமதாம்
குடதிசை யதனில் மருவுகுற் றாலம்
கோதறு சித்திர சபையாம்
குற்றமில் குணக்கில பழையனூர் மன்றம்
குலநவ ரத்னமன் றென்பர்
அடல்விடைப் பாகன் நெல்லையம் பதியில்
அம்பலம் தாம்பிர சபையாம்
ஆலவாய் மதுரை வெள்ளியம் பலமாம்
அணிதில்லை செம்பொனம் பலமே

*(குறிப்புரை) காஞ்சிமாநகர்—பிரிதிவிலிங்கம், பிரிதிவி—மண். திருவானைக்கா—அப்புலிங்கம், அப்பு—நீர், திருவண்ணாமலை—வன்னிலிங்கம்—வன்னி—நெருப்பு, காளத்தி—வாயுலிங்கம், சிதம்பரம்—ஆகாயலிங்கம், பஞ்சலிங்கத் தலங்கள் கூறியவாறு அறிக, குடதிசை—மேற்குத்திசை, குணக்கு—கிழக்கு, குற்றாலம்—சித்திர*

சபை, திருவாலங்காடு—இரத்தினசபை, திருநெல்வேலி—தாம்பிரசபை, மதுரைஆலவாய்—வெள்ளியம்பலம், தில்லை—கனகசபை, ஐந்து சபைகள் கூறியவாறுகாண்க.
32

(33) குறளடி வஞ்சித்துறை

வண்டொடு புலம்பல்

அம்பலவர் தாளே — நம்பர்பத தூளே
தம்பமென தாளே — வம்பர்மத வேளே

(குறிப்புரை) அம்பலவர்—கூத்தபிரான், நம்பர்—அடியவர், பததூள்—திருவடித்துகள், தம்பம்—பற்றுக்கோடு, மதவேள்—மன்மதன், எனதாள்—எனக்கு ஆளாவான்.

அம்பலவர்தாளும் நம்பர்பததூளும் எனக்குப் பற்றுக்கோடாக அமைந்திருத்தலின், மதவேள் என் கட்டளைக்குக் கீழ்ப்படிகின்றான் என்பது கருத்து. 33

(34) நேரிசைவெண்பா

வேலை யிடுதுரும்பாய் வெம்பினேன் அம்பலவர்
மாலை எனக்குதவ மாட்டாயேல் —சோலையினில்
போதந்த தும்பியே புனகணீர் போலெனது
போதந் ததும்பியே போம்

(குறிப்புரை) வேலைஇடுதுரும்பாய்—கடலில் இட்ட துரும்புபோல, வெம்பினேன்—வருந்தினேன், போதந்த தும்பியே—வந்தடைந்த வண்டே, அம்பலவர்மாலை—நடராசரது மாலையை, உதவமாட்டாயேல்—எனக்கு வாங்கித் தாராவிட்டால், போதம்ததும்பியேபோம்—என் அறிவு அழிந்துவிடும், வேலை—கடல், போதம்—அறிவு.
34

(35) கட்டளைக்கலித்துறை

போதத்தை விட்டவர்க்(கு) ஆளாகி வேள்வி புரிந்ததக்கன்
வேதத்தை விட்டவர் வேந்தா யிருப்பர்வில் வேளிருந்து
மாதத்தை விட்டவர் அம்பல வாணர் மலர்க்கமலப்
பாதத்தை விட்டவர் ஊரூர் திரிவர் பலிக்குழன்றே

*(குறிப்புரை) போதத்தைவிட்டவர்க்கு—அறிவைக் கைவிட்டு யான், எனது என்னும் செருக்குக் கொண்ட வருக்கு, ஆளாகி—ஆட்பட்டு, வேள்விபுரிந்ததக்கன்— யாகம் செய்த தக்கன் போல், வேந்தாயிருப்பர்—அரசரா யிருக்கலாம், வில்வேள்—மன்மதன், மாதத்தைவிட்டவர்— பெரிய யோகநிலையை விட்ட சிவபெருமானது, மலர்க் கமலப்பாதத்தைவிட்டவர்—தாமரை மலர் போன்ற திருவடியை வணங்காதவர், பலிக்குஉழன்று—பிச்சைக்கு அலைந்து, ஊரூர் திரிவர்—ஊரூராகத் திரிவார்கள். 35*

(36) வெளிவிருத்தம்

பலியூரும் கன்மனத்தார் பழிநாணார் என்செய்கேன்
பரவாய் வாழி
புலியூரர் கழிக்கானல் புலம்பரொடு மறந்தனையோ
புணரீ வாழி
கலியூர்தி யுடனசென்றார் கடுந்திண்டேர் வழிசிதையேல்
கடலே வாழி
வலியூரும் மலர்கணைக்(கு)என் உயிரிலக்கம் புரிந்திடேல்
வாரீ வாழி—

*(குறிப்புரை) கன்மனத்தார்—கல்நெஞ்சமுடையவர், பழிநாணார்—பழிக்கு அஞ்சார், கடலே—விளி, கழிக் கானல்—மிக்க கானல்நீர், புலம்பர்—நெய்தல் நிலத் தலைவர், திண்தேர்வழி சிதையேல்—வலிய தேர்சென்ற வழியைச் சிதைக்காதே, மலர்க்கணைக்கு—மன்மதன் மலரம்புகளுக்கு, என் உயிர் இலக்கம்புரிந்திடேல்—எனது உயிரை இலக்காக்காதே, வாரி பரவை புணரியாவும்*

கடலைக்குறிக்கும் சொற்கள் பரவாய் புணரி கடலே வாரீ—விளிகள், திணை—நெய்தல்—துறை—காமம் மிக்க கழிபடர்கிளவி. 36

## (37) இடைச்சியார்

தெருவில் தயிர் விற்கும் இடைக்குலமங்கையைச் சிறப்பித்துக் கூறுதல்.

வானிச்சி யார்விளங்கும் அம்பலவர் தென்புலியூர்
மணிவீ திக்கே
கோனிச்சி யார்தயிர்பால் விலைகூறி விற்றுவரும்
குரலைக் கேட்டால்
தேனிச்சி யார்கரும்பு தனைஇச்சி யார்இவரைக்
தெரிசித் தோர்கள்
ஏனிச்சி யார்மதவேள் இரதியைக்கண் டாலுமவர்
இச்சி யாரே

(குறிப்புரை) வான்இச்சியார்—சுவர்க்க இன்பத்தையும் விரும்பாத மெய்யடியவர், மணிவீதிக்கு—அழகிய வீதியில், கோனிச்சி—இடைக்குலமாது, குரலைக் கேட்டால்—அவள் குரலினிமையைக் கேட்டால், தேன் இச்சியார்—தேனைவிரும்பார், கரும்புதனைஇச்சியார்—கரும்பையும் விரும்பார், இவரைத்தெரிசித்தோர்—இம்மாதைக் கண்டவர்கள், ஏன்இச்சியார்—ஏன் விரும்ப மாட்டார்கள். இந்த இடைக்குலமகளைக் கண்டவர்கள் மன்மதன் மனைவி இரதியைக் கண்டாலும் விரும்ப மாட்டார்கள். இரதியினும் இவள் அழகுவாய்ந்தவள் என்பது கருத்து. 37

## (38) கலிவிருத்தம்

இச்சையடி யார்பரவும் ஏமசபை வாணர்
பொற்சடிலர் நீலமணி கண்டர்புலி யூரர்
பச்சையொரு பாதியுடல் பால்வடிவ மானார்
செச்சைமல ரேஅனைய சேவடிக ளாரே

(குறிப்புரை) அடியார்பரவும்—அடியவர் துதிக்கின்ற ஏமசபை—பொற்சபை, சடிலர்—சடையையுடையவர், பச்சைஒருபாதி—பார்வதியை ஒருபாகம் உடையவர், செச்சைமலர்—சிவந்த மலர்போன்ற, சேவடிகளார்—திருவடிகளை உடையவர், (ஒருபாதி) பால்வடிவம்—ஒரு பகுதி திருநீறு பூசப்பட்டிருத்தலின் பால்வடிவம் என்றார்.
38

கார்காலம்

(39) அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

**சேவணியும் மணியோசைக்(கு) இடையகின்று**
**விழிதூங்கத் தில்லை மன்றில்**
**கோவணியும் கொன்றையெனப் பசலைஎழ**
**அன்பர்மனம் குறியாக் காலம்**
**பூவணிக வேளாளர் புவியரசர் கொடுங்கோன்மை**
**பொறுத்தாற் போல**
**ஆவணியும் புரட்டாசி மாதமும்நான்**
**தனியிருந்திங(கு) ஆற்றி லேனே**

(குறிப்புரை) சேஅணியும் மணியோசைக்கு—எருதுகள் அணிந்துள்ள மணிஒலிக்கு, விழிதூங்க—கண்ணுறங்க, கொன்றைஎன—கொன்றை மலர்போல, பசலைஎழ—எனக்குப் பசலைதோன்ற, அன்பர்—பிரிந்து சென்ற தலைவர், மனம்குறியாக்காலம்—மனத்தில் எண்ணிப் பாராத காலம், பூவணிகவேளாளர்—பூமியை உழுவித்துண்ணும் வேளாளர், அரசர் கொடுங்கோலாட்சியைப் பொறுத்திருப்பதுபோல், ஆவணி புரட்டாசி மாதமும்—கார்காலமான ஆவணி புரட்டாசி மாதங்களில், நான் ஆற்றிலேன்—நான் தனியாக இருந்து ஆற்றியிருக்க இயலவில்லை.
39

ஆவணிபுரட்டாசிகார்காலம்

(40) அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

**ஆற்றிலிடும் பொருள்குளத்தில் அழைப்பித்த**
**திருக்கதையும் ஆரு ரர்க்குச்**

சேற்றுவயல் புகலூரில் செங்கலைப்பொன்
ஆக்கியதும் திருந்தச் சொன்னார்
நேற்றிரவின் எனைப்புகழ்ந்தார இன்றறிந்தேன்
பொருளதேட நினைந்த தெல்லாம்
போற்றுதிரு அம்பலவர் பொருப்பர்எனைப்
புகழ்ந்ததெல்லாம் பொய்மெய் தானே

(குறிப்புரை) (பழமலைநாதர்—விருத்தாசலத்தில் கோயில் கொண்டுள்ள இறைவர்) ஆரூரர்க்கு—சுந்தர மூர்த்தி நாயனாருக்கு, ஆற்றிலிடும்பொருள்—மணிமுத்தா நதியில் இட்ட பொன்னை, குளத்தில்அழைப்பித்தகதையும் —திருவாரூர்க் குளத்தில் வரச் செய்த கதையையும், புகலூரில்—திருப்புகலூரிலே, செங்கலைப்பொன்ஆக்கிய தும்—செங்கல்லை (இறைவன்)ப் பொன்னாக ஆக்கியதை யும், திருந்தச்சொன்னார்-திருத்தமாக எடுத்துக்கூறினார், நேற்றிரவில்எனைப்புகழ்ந்தார்—தலைவர் நேற்று இரவு என்னைப் புகழ்ந்து கூறினார், இன்றறிந்தேன்பொருள் தேடநினைந்தது—இன்றுதான் அவர் புகழ்ந்தது பொய் என்றும், பொருள் தேடச் செல்ல நினைந்தது மெய் யென்றும் அறிந்தேன், பொருப்பர்—மலைநிலத் தலைவர்.

40

41

பொய்ப்பசிகொண்(டு) இரந்துழலும் புலியூரர்
செஞ்சடைமேல் பொலிந்து வாழும்
மைப்பசியில் உழல்பாந்தள் நெடுமுச்சு
விடுவதுபோல் வாடை வீச
மெய்ப்பசியும் அருந்துயிலும் தவிர்ந்துபெருந்
தவம்புரியும் விரதர் போல
ஐப்பசியும் கார்த்திகையும் பிரிந்திருந்தும்
ஒருவகைநான் ஆற்றி னேனே.

(குறிப்புரை) புலியூரர்செஞ்சடைமேல்—நடராசர் திருச்சடையில், பாந்தள்நெடுமுச்சுவிடுவதுபோல்—பாம்பு

பெரு மூச்சுவிடுவதுபோல, வாடைவீச—வாடைக்காற்று வீச, பசியும் துயிலும் தவிர்ந்து—ஊண் உறக்கம் நீங்கி, விரதர்போல—தவம்புரியும்தவசிதள்போல, பிரிந்திருந்தும்—தலைவர் என்னைப்பிரிந்து சென்றிருந்தும், ஒருவகை நான் ஆற்றினேன்—ஒருவகையாக நான் ஆற்றியிருந்தேன்.

(42) வேறு

ஆற்றுநீர் மலையில்வீழும் அருவிநீர்
பூஞ்சுனைநீர் அகழுங் கூவல்
ஊற்றுநீர் குளத்துநீர் உததிநீர்
மேகத்தில் உள்ள நன்னீர்
வேற்றுநீர் விரிசடையோன் கங்கைநீர்
இத்தனைக்கும் மேலாம் கண்டீர்
காற்றுநீர் உரிவையர்அம் பலத்தாடும்
ஐயர்சிவ கங்கை நீரே

(குறிப்புரை) கூவல்—கிணறு, உததி—கடல், விரிசடையோன்கங்கைநீர்—இறைவனது விரிந்த சடையில் உள்ள கங்கைநீர்.

ஆற்றுநீர், அருவிநீர், சுனைநீர், கிணற்றுநீர், குளத்துநீர், கடல்நீர், வேறு நீர்நிலைகளிலுள்ள நீர், இறைவன் சடையிலுள்ள கங்கைநீர் இத்தனைக்கும் மேலானது சிதம்பரத்தின் கண் உள்ள சிவகங்கைதீர்த்தத்தின் நீர் என்பது.

(43) வேறு

நீர்கழிக்கும் சடைமுடியார் அம்பலவர் தென்புலியூர்
நியம வீதி
தேர்கழிக்கும் திருநாளும் மறந்தார்தாம் சென்றிருக்கும்
திசையும் காணேன்
கூர்கழிக்கும் வாளினுக்கும் இலக்கான புண்ணாற்றிக்
கொள்வார் போல
மார்கழிக்கும் தைக்கும்இருந்(து) ஆற்றினேன் முன்பனியை
மாற்றி னேனே

(குறிப்புரை) புலியூர்நியமவீதி—சிதம்பர நகரத் தெருவில், தேர்கழிக்கும்திருநாள்—தேர்செல்லும் விழா நாளையும், மறந்தார்—தலைவர் மறந்துவிட்டார், திசையும்காணேன்—அவர் சென்ற திசையையும் அறியேன், கூர்கழிக்கும்வாளினுக்கும்—கூர்மையான கழியாலும் வாளாலும், இலக்கான. புண் ஆற்றிக் கொள்வார்போல—உண்டான புண்ணைத் தாங்கிக் கொள்பவர்போல, மார்கழிக்கும் தைக்கும்—முன்பனிக் காலமான மார்கழிதை மாதங்களில், ஆற்றினேன் முன்பனியைமாற்றினேன்—பொறுத்திருந்து முன்பனிக் காலத்தை மாற்றினேன். (கழித்தேன்) 43

(44) நேரிசைவெண்பா

மாற்றாய் இதழியந்தார் வாங்கிவந்து வஞ்சிதுயர்
ஆற்றாய் உனை வளர்த்த ஆயிழையைத்—தேற்றாயேல்
அஞ்சுகமே அஞ்சினாள அம்பலவ ரைப்பிரிந்தால்
அஞ்சுகமே அஞ்சினா ளாம்

(குறிப்புரை) அஞ்சுகமே—கிளியே, மாற்றாய்—தலைவிஉனக்குச்செய்தஉதவிக்குமாற்றாக, தார்வாங்கி வந்து—கொன்றை மாலையை வாங்கி வந்து, ஆற்றாய்—தலைவியின் துயரத்தை நீக்குவாய், தேற்றாயேல்—தலைவியைத் தேற்றா விட்டால, அம்பலவரை—சிற்றம்பல நாதரை, அஞ்சினாளாம்—அஞ்சியவள ஆவாள், ஆயிழை—ஆய்ந்த ஆபரணமணிந்த தலைவி, (அன்மொழித் தொகை) 44

(45) கட்டளைக்கலித்துறை

அஞ்சத் தனையும் அயிலோனை யும்பெற்ற அம்பலனை
வஞ்சத் தனையும் மனத்திலெண் ணாதவர் மால்பிரமர்
எஞ்சத் தனையும் மறைந்துநின் றானுக்(கு) இணையெனவே
கஞ்சத் தனையும் திருமாலை யுஞ்சொல்வர் காசினிக்கே

(குறிப்புரை) அஞ்சு+அஸ்தன்—ஐந்து கரங்களையுடைய விநாயகன், அஞ்சத்தன்—விநாயகன், அயிலோன் —முருகன், வஞ்சத்தனையும்—வஞ்சனை ஒரு சிறிதும், எஞ்ச—திருமாலும் பிரமனும் காணாதவாறு, மறைந்து நின்றானுக்கு—மறைந்து நின்ற சிவபெருமானுக்கு, இணைஎன்ன—ஒப்பு என்று, கஞ்சத்தன்—பிரமன், திருமாலையும்சொல்வர்—திருமாலையும் கூறுவர், காசினிக்கு—உலகின்கண், காசினிக்கு-வேற்றுமை மயக்கம். ஆராய்ந்து பாராதவர் திருமாலையும் பிரமனையும் சிவபெருமானுக்கு ஒப்பாகக் கூறுவர். 45

(46) அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

காசிக்கும் சேதுவிற்கும் தலைவர்திரு வம்பலவர்
கமல பாதம்
பூசிக்கும் அடியவரைத் தெரிசிக்கும் எனைமதனன்
போர்வல் லானோ
ஊசிக்கு நிகரான ஐங்கணைக்கும் தென்றலுக்கும்
உறுவா டைக்கும்
மாசிக்கும் பங்குனிக்கும் முன்புவரும் பின்பனிக்கு
வருந்தி லேனே

(குறிப்புரை) அம்பலவர் கமலபாதம்—நடராசனுடைய தாமரை போன்ற திருவடிகளை, பூசிக்கும் அடியவரை—பூசனை புரியும் அடியார்களை, தெரிசிக்கும் எனை—கண்டு தொழும் என்னை, மதனன்—மன்மதன், ஐங்கணை—தாமரை, மா அசோகு முல்லை நீலம் ஆகிய ஐந்து மலர்க்கணைகள், தென்றலுக்கும் உறுவாடைக்கும்—தென்றற்காற்றுக்கும் மிக்க வாடைக்காற்றுக்கும், பின்பனிக்கும்—பின்பனிக்காலத்துக்கும், வருந்திலேன்—நான் வருந்தவில்லை, மாசி பங்குனி பின் பனிக்காலம். 46

(47) வேற்றொலி வேண்டுறை

நாணிக்கண் புதைத்தல்

வருகடலில் விடமுண்டார் மன்னியதென் புலியூரில்
குரு(கு)அடரும் கெடுங்கொல்லிக் குன்றநா(டு) உடையீர்
முரு(கு)அடரும் மலர்க்காந்தள் வெற்பிலே மலருகின்ற
முறைமை (இன்று) இப்
பொருகடலின் மலர்வதொரு புதுமைஎன இணைவிழிகள்
பொத்தி னீரே

(குறிப்புரை) புலியூரில்—சிதம்பரத்தில், குருகு அடரும்—பறவைகள் நெருங்கிவாழும், கொல்லிக் குன்றம் உடையீர்—கொல்லிமலை நாட்டிலுள்ள தலைவியே, முருகு—வாசனை, காந்தள்மலர்—காந்தள்பூ, வெற்பிலே மலருகின்ற முறைமை—மலையிலே மலர்வதுண்டு, இன்றுஇப்பொருகடலில்—இன்றைக்கு இந்தக் கடலில், மலர்வது புதுமை என—மலர்ந்திருப்பது புதுமை என்னும்படி, இருவிழிகள்பொத்தினீர்—இருகண்களையும் மூடினீர், கண்—கடல், கை—காந்தள், இது நாணிக்கண் புதைத்தல் என்ற துறை. 47

(48) அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

பொத்திரைக்கும் கரும்பாம்பு வைத்திருக்கும் சடைமுடியர்
புலியூர் நாட்டில்
நித்திரைக்கும் இடமின்றி விழித்திருக்கத் தந்தவர்என்
நிலைமை ஓரார்
இத்திரைக்கும் படநாகம் அருக்(து)இரைக்கும் இளவேனிற்(கு)
இடமாய் வந்த
சித்திரைக்கும் வைகாசி வசந்தனுக்கும் யான்இனிஎன்
செய்கு வேனே

(குறிப்புரை) பொத்துஇரைக்கும்—பொந்திலே பெருமூச்சுவிடும், கரும்பாம்பு—கருநாகம், புலியூர்நாட்டில்—சிதம்பரத்தில், நித்திரைக்கும்இடமின்றி—உறங்கவும்

முடியாமல், என்நிலைமைஓரார்—(பிரிந்துசென்ற தலைவர்) எனது நிலைமையை எண்ணிப்பாரார், இ திரைக்கும்—இந்தக் கடல் அலைக்கும், நாகம்அருந்து இரை—தென்றல்காற்று, வசந்தனுக்கும்—மன்மதனுக்கும், என் செய்குவேன்—என்ன செய்வேன், வசந்தன் தென்றலும் ஆம், பொந்து என்பது எதுகைநோக்கிப் பொத்துஎன வலித்தல் விகாரம் பெற்றது. 48

சித்திரை வைகாசி இளவேனிற்காலம்.

(49) எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

தலைவன் வறுங்களம் கண்டு புலம்பல்.

செய்ய மேனியார் ஐயர் மாலயன்
தேடும் அம்பலத்(து) ஆடும் ஈசனார்
துய்ய மால்வரைப் புனமி ருந்தபைந்
தோகை யார்பிரிந்(து) ஏகி னார்கொலோ
கொய்யும் வார்தினைக் கிளியினங்களே
கோகி லங்களே கேக யங்களே
மையல் யானையின் பிடியி னங்களே
மானி னங்களே தேனி னங்களே

(குறிப்புரை) தினைக்கிளியினங்களே—தினைக்கொல்லையில் உள்ள கிளிக்கூட்டங்களே, கோகிலங்கள்—குயில்கள், கேகயங்கள்—மயில்கள், பிடியினங்கள்—பெண்யானைகள், மானினம்-மான்கூட்டம், தேனினம்—வண்டுக்கூட்டம், மால்வரை—பெரிய மலை புனம்இருந்த-தினைக்கொல்லையில் இருந்த தோகையார்—மயில்போன்ற சாயலுடைய தலைவி பிரிந்துஏகினார்கொலோ—நீங்கிச் சென்றுவிட்டாரோ, தோகை—ஆகுபெயர். 49

(50) அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

தேனிக்கும் அடியவர்கள் வந்திக்கும் அம்பலவர்
தில்லை நாட்டில்

நாளிக்கு மதன்கணைக்கும் நரலைக்கும் அயலவர்கள்
நகைக்கும் அஞ்சேன்
கூனிக்கும் குமுதமலர் அலர்மதிக்கும் முதுவேனில்
கோடை நீங்கா
ஆனிக்கும் உடனான ஆடிக்கும் உயிர்தரிப்ப(து)
அருமை தானே

(குறிப்புரை) அடியவர்கள் வந்திக்கும்—அடியார்கள் வணங்கும், தில்லைநாட்டில்—சிதம்பரத்தில், இக்கு மதன் கணைக்கும்—கரும்பு வில்லையுடைய மன்மதன் மலர்க் கணைக்கும், நரலை—கடல்அலை, நகைக்கும்—அயலார் நகைப்புக்கும், அஞ்சேன்—நான் அஞ்சவில்லை, மதிக்கும்—சந்திரனுக்கும், கோடைநீங்கா—கோடைக்காலம் நீங்காத, ஆனிக்கும்ஆடிக்கும்—ஆனி ஆடி மாதங்களில், உயிர் தரிப்பது அருமை—உயிர் தாங்கி இருப்பது அரியதாகும்.

தியானிக்கும் என்பது எதுகை நோக்கித் தேனிக்கும் என வந்தது. ஆனி ஆடி முதுவேனிற்காலம். 50

(51) கலிநிலைத்துறை

இயலிடம் கூறல்

அரும்பு தான்சில அவயவ மலர்வடி வாகும்
கரும்பு தேன்மொழி கமுகமும் சங்கமும் கழுத்தாம்
விரும்பும் தென்புலி யூரர்மால் வரையின்மின் னார்க்கு
நிரம்பு தேர்படம் திரைகடல் கடிதடம் நிதம்பம்

(குறிப்புரை) புலியூரர்வரையின்மின்னார்க்கு—தென் புலியூர் மலைநிலத் தலைவிக்கு, அரும்புதான்சிலஅவயவம்—அரும்பு போன்ற தனங்கள், சில அவயவம் மலர் வடிவாகும்—தாமரை போன்ற முகம், குவளை மலர் போன்ற கண்கள்.

மொழி கரும்பும் தேனும், கழுத்து சங்கும் கமுகமும், கடிதடமாகிய நிதம்பம் தேர்ப்படமும் திரைகடலும். ஆம் என்க 51

(52) அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

இடமணித்தென்றல்

நிதம்பதட மயிலேகொள் ளிடங்கடந்தோம்
இனிச்சற்று நேரஞ் சென்றால்
பதம்பரவும் ஆயிரக்கால் மண்டபமும்
திருமதிலும் பசும்பொன் தேரும்
சதம்பெறுகால் மண்டபமும் சிவகங்கை
யுடன்கனக சபையும் தில்லைச்
சிதம்பரமும் கோபுரமும் தில்லைமூ
வாயிரவர் தெருவும் தானே

(குறிப்புரை) மயிலே—மயில்போன்ற மாதே, கொள்ளிடம்—கொள்ளிடநதி, இனி சற்று நேரம் சென்றால்—இன்னும் சிறிது நேரம் நடந்துசென்றால், சதம்பெறும் கால்மண்டபம்— நூற்றுக்கால் மண்டபம், சிவகங்கை—சிவகங்கைதிர்த்தம். இது தலைவன் தன்பதி அணிமை சாற்றல். 52

(53) கட்டளைக்கலித்துறை

தெருவார வாரங்கள் வண்டின மேசெவி கேட்டவுடன்
உருகாது வீழ்ந்திடும் வண்டின மேபுலி யூரரன்பு
தருவா ரெனமிக வண்டின மேயவர் சந்ததமும்
மருவா விடிலொரு நாளுக மானது வண்டினமே

(குறிப்புரை) தெரு ஆரவாரங்கள்—தெருவில் ஆரவாரம், வண்டினமே (வண்+தினம்) விழாநாள், விழாக் காரணமாகத் தெருவில் எழும் ஆரவாரம் செவியில் கேட்டவுடன் என்க. உருகாது வீழ்ந்திடும் வண்டினமே— வளையல்தொகுதி படிப்படியாகக் கழலாமல் திடீரென விழும். வண்டு—வளையல், புலியூரர் அன்பு தருவாரென மிக அண்டினம்—புலியூரர் அன்பு செய்வாரென்று மிகவும் நெருங்கினோம். வண்டினமே— வண்டுகளே, அவர் சந்ததமும் மருவாவிடில் ஒருநாள் ஒருயுகமானது, மருவுதல்—அணைதல். 53

(54) ஐயந்தெளிதல்

மருட்பா

வண்டறை தாமரை வைகுதலாற் கண்டேன்
புலியூர் தொறுந்திரி பிரமரங்காள்
புலியூர் அணங்கிவள் பொன்னணங் கலளே

(குறிப்புரை) புலியூர் தொறுந்திரி பிரமரங்காள்—தேனைப் பருகப் புலியூரில் மலர்தோறும் திரியும் வண்டுகளே, பூக்களைப் புல்லித் தழுவித் தேனைப்பருகும் வண்டுகள் எனவும் கொள்ளலாம். வண்டு அறை—வண்டுகள் ஒலித்துக்கொண்டு, தாமரை வைகுதலால்—தாமரை மலரில் மொய்த்தலால், இவள் பொன் அணங்கு அல்லள்—இவள் தெய்வமகள் அல்லள், புலியூர் அணங்கு—புலியூர்ப்பெண்ணே, புல்லி என்பது புலி என ஆனது தொகுத்தல் விகாரம். 54

(55) அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

பொன்னாரும் சடைக்காடு தனைக்கண்டோ கங்கையெனும்
புனலைக் கண்டோ
எந்நாளும் திகழறுகு தனைக்கண்டோ அம்புலிமான்
இனத்தைக் கண்டோ
அந்நாளில் கருமானின தோலுரித்து மருங்கசைத்த
அச்சந் தானோ
தன்னாசை யாற்புலியூர் அம்பலவர் கரத்தின்மான்
தாவும் தானே

(குறிப்புரை) அம்பலவர் கரத்தின்மான்—அம்பலவாணரது கையிலுள்ள மான்கன்று, சடைக்காடு கண்டோ—இறைவன் சடையாகிய காட்டைக் கண்டோ, கங்கைபுனலைக்கண்டோ—கங்கை நீரைக் கண்டோ, அறுகுதனைக்கண்டோ—பசுமையான அறுகம் புல்லைப் பார்த்தோ, மானினம்—மான்கூட்டம், கருமான்தோல்—யானைத் தோல், மருங்கு—இடை, அச்சம்-பயம், தாவும்-தாவிச் செல்ல முயலும். 55

### கொற்றியார்

(56) அறுசீர்க்கழி நெடிலடிஆசிரியவிருத்தம்

தாவிந்து மதிச்சடையார் நடமாடும் சிதம்பரத்துத்
தளத்தே தில்லைக்
கோவிந்தர் திருவடிகள் சேவிக்கும் படிவந்த
கொற்றி யாரே
மேவிந்த மதியிருக்கக் கரும்புயலை ஏன்மறைத்தீர்
மேகத் தாலே
மாவிந்து வினைத்திரும்ப மறைத்தாலின் னமும்சிலநாள்
வாழ லாமே

(குறிப்புரை) தலையை முண்டிதம் செய்துகொண்டு வைணவச் சின்னம் தரித்து வீதியில் பிச்சைக்கு வரும் பெண் (கொற்றியார்)ணைக் கண்ட காமுகன் கூற்று.

மதிச்சடையார் நடமாடும்—சடையில் பிறை மதியணிந்த பெருமான் நடனம் புரியும், சிதம்பரத்து—சிதம்பரத் தலத்தே, தில்லைகோவிந்தர்—தில்லைக் கோவிந்த ராசரை, சேவிக்கவந்தகொற்றியாரே—வழிபட வந்த கொற்றியாரே, மதியிருக்க—மதிபோன்ற இந்த முகம் மறையாதிருக்க, கரும்புயலை—கரிய கூந்தலை மட்டும், ஏன் மறைத்தீர்—ஏன் மறைத்துள்ளீர், மாஇந்து வினைமறைத்தால்—சிறந்த மதிபோன்ற முகத்தை மறைத்தால், சிலநாள்வாழலாம்—இன்னும் சிலநாள் வாழலாமே, மாவிந்துவினை என்பது பெரிய விந்தமலை போன்ற தனத்தை என்றும் ஆம். 56

(57) வேறு

வாழும் புலியூர் எனுநாமம் வைய முழுதும் பரந்ததலால்
ஆழும் புனல்சூழ் சீரங்கத்(து) ஆலைக் களத்தும் உளதாமால்
வீழும் பொழுதும் கண்ணுறங்கி விழிக்கும் பொழுதும் ஆலயங்கள்
சூழும் பொழுதும் மறவேன்யான் துஞ்சும் பொழுதும் துதிப்பேனே

(குறிப்புரை) புலியூர்எனும்நாமம்—புலியூர் என்ற பெயர், வையம்முழுதும்பரந்தது—நாடு முழுவதும் பரவி

யுள்ளது, அல்லால்—அதுவுமல்லாமல், ஆழும்புனல் சூழ்—காவிரியாறு சூழ்ந்த, ஆலைக்களத்தும்—கரும்பு ஆலைகள் நிறைந்த இடத்திலும், உளதாம்—புலியூர் என ஓர் ஊர் இருக்கிறது, வீழும்பொழுதும்—படுத்துஉறங்கும் போதும், ஆலயங்கள்சூழும்பொழுதும்—கோயில் வலம் வரும்போதும், துஞ்சும்போதும்—உறங்கும் போதும் துதிப்பேன். 57

(58) சந்தவிருத்தம்

தனத்த தானன தனதன தானன
தனத்த தானன தனதன தானன
தனத்த தானன தனதன தானன தனதான

துதிக்கை வீசிய மறமத வாரணம்
உரித்த போர்வையர் முனிவர்கள் தேவர்கள்
துதிக்க வேவரு கனகச பாபதி எனுமீசர்
மதிச்ச டாடவி மழவிடை யார்முகில்
எருக்கு மாலிகை இதழியை யேபுனை
வரைப்பு யாசலர் வளர்புலி யூர்வரும் மயில்போல்வாய்
உதித்த மாமதி தழலல வோபினை
எனக்கு நீரொரு துரையல வோஇனி
உமக்கு நானொரு பயலல வோதய(வு) இலையோதான்
கொதித்த மாமதன அடுகணை யேவிட
முழுப்பி ராணனும் அரையுயி ராயுள
குறைப்பி ராணனும் அழியுதை யோதலை விதிதானோ

(குறிப்புரை) மதவாரணம்—மதயானை, முனிவர்கள் தேவர்கள்—முனிவர்களும் தேவர்களும், கனகசபாபதி—கனகசபைக் கடவுள், சடாடவி—சடைக்காடு, மழவிடை—இளமையுடைய எருது, மயில்போல்வாய்—மயில் போன்ற மாதே, மதிதழலலவோ—சந்திரன் நெருப்புப் போல் காயவில்லையா, நீஒருதுரைஅலவோ—எனக்கு நீ ஒரு தலைவரல்லவா, பயலலவோ—ஏவலாளன் அல்லனோ, மதன்அடுகணைஏவிட—மன்மதன் கொல்லும் நீலமலர்க்

கணையை ஏவ, (வேட்கையால் முழுஉயிர் அரை உயிராக) மன்மதன் விட்ட அம்பால் அரைஉயிரும் அழிகின்றதே, தலைவிதிதானோ—இஃது என் தலை எழுத்தோ.

*மன்மதன் மலர்க்கணை இயல்பு :*

நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ
அனைத்துணவும் நீக்கும் அசோகு—வனத்திலுறு
முல்லைக்(கு) இடைகாட்டும் மாதே முழுநீலம்
கொல்லும்மதன் அம்பின் குணம் 58

—இரத்தினச்சுருக்கம் 11

(59) நேரிசைஆசிரியப்பா

விதிவழி தவறிய மதியி லாஎனை
மெய்த்தவம் புரியாப் பித்தனிவ னென்று
மன்பதை உலகத்(து) அன்பர்கள் நகைத்தனர்
ஆழியம் புவியில் அனைவரும் பழித்த
ஏழையென்(று) இகழா(து) என்னையும் தாங்குறும்
சூதமும் முல்லையும் அசோகமும் குவளையும்
மீதுயர் கஞ்சமும் வெளிப்பட மலர
வெந்திறல் வாலியைத் தந்தைகொன் றதுபோல்
ஒளித்துநின்(று) எய்த ஒண்சிலை மாரனை
முழுத்திரை கொழிக்கும் முத்தவெண் நகையால்
மருங்குசூழ் கிடந்த கருங்கடல் நகைக்கும்
மல்லலம் பெரும்பணை வயல்சூழ்
தில்லையம் பலவர் தென்புலி யூரே!

*குறிப்புரை : விதிவழிதவறிய—நெறி முறையிலிருந்து பிறழ்ந்த, மதியிலாஎனை—அறிவில்லாதஎன்னை, பித்தன்—பித்துக்கொண்டவன், வெந்திறல்வாலியை—மிக்க வலிமையுடைய வாலியை, தந்தை—இராமன், கொன்றதுபோல்—மறைந்து நின்று கொன்றது போல எய்த மாரனை, (மறைந்திருந்து) மலரம்பு தொடுத்த மன்மதனை, முத்தவெண்நகையால்—முத்துக்களாகிய*

பற்களால், கடல்நகைக்கும்—கடல் நகைத்து இழிவு படுத்தும், புலியூர்—சிதம்பரம்.

சூதம்—மாம்பூ, கஞ்சம்—தாமரைமலர், குவளை—நீலமலர், மன்மதன் மலர்க் கணைகளும் இயல்பும் 58-ஆம் பாடல் உரையிற் காண்க. 59

### அம்மானை

(60) கலித்தாழிசை

தென்புலியூர் அம்பலவர் தில்லைச் சிதம்பரத்தே
வெம்புலிஒன்(று) எந்நாளும மேவுங்காண் அம்மானை
வெம்புலி ஒன்(று) எந்நாளும் மேவுமே ஆமாகில்
அம்பலத்தை விட்டே அகலாதோ அம்மானை
ஆட்டைவிட்டு வேங்கை அகலுமோ அம்மானை

குறிப்புரை: அம்மானை என்பது மகளிர் மூவர் கூடி வினாவும் விடையுமாகக்கூறி ஆடிமகிழும் ஒரு விளையாட்டு

வெம்புலி—கொடிய புலி, (வியாக்கிரபாதர்) வெம்மை—விருப்பமும ஆம், எந்நாளும்மேவும்—எப்போதும் இருக்கும், அம்பலம்—சபை என்றும் ஆடு இருக்கும் இடம் என்றும் பொருள்படும், அம்பலத்தைவிட்டுஅகலாதோ—சபையை விட்டு நீங்காதோ, ஆட்டை—நடனத்தை. அம்மானையில் பெரும்பாலும் சிலேடை அணி அமைந்திருக்கும். ஆட்டைவிட்டு வேங்கை அகலுமோ என்பது தொனிப்பொருள். 60

அம்புலியூரென்னும் அணிகொள் சிதம்பரத்தே என்பது பாடபேதம்

(61) அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

மானுலாம் விழிஉமையாள் கற்பலகை நீக்கிநின்ற
மடவாள் பங்கன்
ஊனெலாம் நடுங்கமடங் கற்பலகை உடையோனை
உருத்து வென்றோன்

**கானிலே நடமாடும் கற்பலகை யுடனடிக்கும்**
**கடவுள் தில்லைப்**
**பானிலா மதிச்சடையான் கற்பலகை என்பர்சங்கப்**
**பலகை தானே**

*குறிப்புரை : மானுலாம்விழி—மான் போன்ற கண்; உமையாள்பங்கன்—உமையை இடப்பாகம் உடையவன், ஊனெலாம்நடுங்க—உடல் நடுங்க. மடங்கல்—சிங்கம், கானில்—சுடுகாட்டில், அலகையுடன்நடிக்கும்—பேயோடு நடனமாடும், மதிச்சடையான்—பிறையணிந்த சடையானை, கற்பலகைஎன்பர்—சங்கப்பலகையில் இருந்தவன் என்பர், பானிலா (பால்+நிலா) பால் போன்ற நிலவு· சங்கப் பலகையைக் கன்மாப் பலகை என்பர். 61*

பாண்

*(62) அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்*

கற்பலகை தனிலிருந்து கவியுரைத்த புலவனார்
கருணை தன்னால்
பொற்பலகை பெற்றீரே ஆதலால் இத்தனையும்
பொறுத்தேன் கண்டீர்
எற்பலகை போற்பசியால் எங்கையர்பால் தூதுசென்றீர்
இங்கும் வந்தீர்
பற்பலகை தனில்ஏற்பீர் வீணனா ராயிருந்தீர்
பாண னாரே

*(குறிப்புரை) கற்பலகை—சங்கப்பலகை, கவியுரைத்த புலவனார்-சிவபெருமான், எற்பலகை (என்பு+அலகை)—எலும்புக் கூடான பேய், எங்கையர்பால்—எம் தங்கைமாராகிய பரத்தையர்பால், தூதுசென்றீர்—தூதாகச் சென்றுவந்தீர், வீணனாராய்-கையில் வீணையையுடையவராய். பாணனாரே நீர் வீணனாராய் இருந்தீர் என்க.*

*பொன்பலகை பெற்றீரே என்பது பாணனாருக்குப் பொற்பலகையிட்ட திருவிளையாடல். 62*

(63) நேரிசைவெண்பா

பாணன் பெறப்பொற் பலகை அளித்ததில்லை
வாணன் எனையாள வல்லானே—வீணன்போல்
அக்கமலம் உற்றும் அடிப்போது தந்துமுள்ளக்
கற்கமலம் முற்றுங் கடந்து

(குறிப்புரை) பாணன்—பாணபத்திரர், தில்லை வாணன்—சிற்றம்பலவன், அடிப்போது—திருவடித் தாமரை, மலம்முற்றும்கடந்து—பாசங்கள் நீங்கி, எனை ஆள வல்லான்—என்னை ஆட்கொள்ள வல்லவன், வீணன் போல்—வீணனைப் போன்ற என்னை (ஆட்கொள்ள வல்லவன்) அக்கமலம்(அகக்கமலம்)—உள்ளத்தாமரை. 63

(64) கட்டளைக் கலித்துறை

கடித்தாள் விளங்கும் பறவையை வேட்டுவன் கண்ணிவைத்துப்
பிடித்தா லெனவொரு காட்சியுண் டானது பேய்முலைப்பால்
குடித்தான் மலர்கொண்(டு) அருச்சித்த போது குழகன்செய்ய
அடித்தா மரையில் விழித்தா மறைசென்(று) அகப்பட்டதே

(குறிப்புரை) கடித்தாள் விளங்கும் பறவையை—விரைந்து செல்லும் ஆற்றலுடைய பறவையை, அச்சந் தரும் பறவை என்றும்ஆம், வேட்டுவன்—வேடன், கண்ணி—வலை, பிடித்தாலென—பிடித்ததுபோல, பேய்முலைப் பால் குடித்தான்—திருமால் (கண்ணபிரான்), குழகன்—சிவபிரான், விழித்தாமரை—விழியாகிய தாமரை மலர், (அகப்பட்டது) திருமால் சிவபெருமானை ஆயிரம் தாமரை மலர்களால் அருச்சிக்கத் தொடங்கி, ஒன்று குறைந்தது கண்டு தன் கண் ஒன்றை மலராகப் பிடுங்கி அருச்சித்தான் என்பது புராண வரலாறு. கண்ணியில் பறவை அகப்பட்டது போலச் சிவபெருமான் திருவடியில் திருமாலின் கண் (மலர்) அகப்பட்டது எனக்கொள்க. 64

(65) அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

அகப்பட்டேன் அதிமோக வலைப்பட்டேன்
பின்பழைய அடியார் தம்மால்

நகப்பட்டே னாயவர்கள் நாப்பட்டை
எழவைதும் நாண மில்லேன்
முகப்பட்ட மதயானை யுரியுடையாய்
தஞ்சமென முறையிட் டாளாய்ப்
புகப்பட்டேன் தென்புலியூர் அம்பலவா
போறியற்றேன் போற்றி னேனே

(குறிப்புரை) அகப்பட்டேன்—மனம்போனபோக்கில் சென்றேன், அகம்—மனம், மோக வலைப்பட்டேன்—காம மயக்கத்தை அடைந்தேன், நின் அடியர் தம்மால் நகப் பட்டேன்—உமது அடியார்களால் எள்ளி நகைக்கப் பட்டேன், நாபட்டைஎழ—நாத்தழும்பேறும்படி, வைதும் —பழித்தும், நாணமில்லேன்—நாணமடையவில்லை, அம்பலவா—அம்பலவாணரே, தஞ்சமென—அடைக்கலம் என்று, புகப்பட்டேன்—உம்மை அடைந்தேன், போற்றி னேன்—வணங்குகின்றேன் (உம்மைப் புகழ்ந்து துதிக் கின்றேன்). 65

(66) வகுப்பு

பொறியா(டு) அரவினை அரைக்(கு) அசைத்தனை
புகையார் திரிபுரம் நகைத்(து) எரித்தனை
புலவோர் தமிழிரு செவிக்குள் வைத்தனை
புயமேல் உமையிரு குயப்பொ ருப்பினை
பெறவே நெறிதனை எனக்(கு) அளித்திலை
பிறவா வகையெழு பிறப்(பு) அறுத்திலை
பிரமா எழுதிய எழுத்(து) அழித்திலை
பெரியோர் இணையடி தொழப்ப ணித்திலை
அறநூல் வழிஎனை நடத்தி வைத்திலை
அடியார் சபைநடு(வு) இருத்தி வைத்திலை
அருளார் அமுதினை அருத்தி வைத்திலை
அடியேன் மனதினில் உருக்கம் வைத்திலை
சிறைசா லையிலெனை அடைத்து வைத்தனை
செலதா ரையிலெனை அகப்ப டுத்தினை
சிவகா மியைஒரு புறத்தில் வைத்தனை
சிவனே சபையினில் நடித்த சித்தனே

(குறிப்புரை) சபையினில்நடித்தசித்தனே—கனகசபையில் நடனம் புரிகின்ற சித்தரே, அரவினை—நாகத்தை, அசைத்தனை—அணிந்தாய், திரிபுரம்நகைத்தெரித்தனை—முப்புரத்தைப் புன்முறுவலால் அழித்தாய், புலவோர்தமிழ்—ஞானசம்பந்தர் முதலிய அருளாளர் திருப்பாடல்களை, புயமேல்—தோளில், உமைஇருகுயப்பொருப்பினை—உமையம்மையின் பருத்த இரு தனங்களை உடையை, பெறவே நெறிதனை—நான் நின்னைப் பெறுதற்குரிய வழியை, எனக்களித்திலை—எனக்கு அளித்தாயல்லை, பிறவாவகை—நான் பிறவி எடுக்காதவாறு, எழுத்து அழித்திலை—பிரமன் எழுதிய எழுத்தை அழித்தாயல்லை, அடியார் சபைநடு—அடியவர் கூட்டத்தில், உருக்கம்வைத்திலை—கருணை வைத்தாயல்லை, சிவகாமியை—சிவகாமவல்லியை, ஒருபுறத்தில்வைத்தனை—இடப் பாகத்தில் வைத்தருளினை. 66

(67) கலித்தாழிசை

நடிப்பார்தென் புலியூரில் நமபரிடம் பிரியாமெல்
அடிப்பாவை சிறுமருங்குல் ஆற்றியிருந் ததுபாரீர்
கொடிப்பாதி யாயிரண்டு குடம்சுமந்து வடம்சுமந்து
முடிப்பாரம் சுமந்தும்ஒரு முருகனையும் சுமந்ததுவே

(குறிப்புரை) தென்புலியூரில்—சிதம்பரத்தில், நம்பர்—நடராசப் பெருமான், இடம்பிரியா—இடப் பாகத்தை அகலாத, பாவைமருங்குல்—சிவகாமவல்லியின் இடை, இரண்டுகுடம்சுமந்து—குடம் போன்ற இரு கொங்கைகளைச் சுமந்து, வடம்—மாணிக்கவடம், முத்துவடமும் ஆம். முடிப்பாரம்—முடியின் பாரத்தை, முருகனையும் சுமந்து—இளைய பிள்ளையாகிய முருகனையும் சுமந்து, இருந்தது பாரீர்—இருந்ததைப் பாருங்கள். 67

மறம்

(68) அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

முரு(கு)அணைக்கும் தார்வேந்தன் விடுதூதா
இமயவரை முதல்வி தன்னை

அரு(கு)அணைக்கும் அம்பலவர்க்(கு) ஆட்பட்ட
மறக்குலமென்(று) அறியான் போலும்
பொருகணைக்கும் சிலைமாரன் பூங்கணைக்கும்
மறவர்குலப் பூவை வாட்கண்
இருகணைக்கும் இலக்(கு) ஆனால் எங்களொரு
கணைக்(கு)இவனோ எதிர்நிற் பானே

*(குறிப்புரை) முருகு—நறுமணம், இமையவரை முதல்வி—உமாதேவி, அம்பலவர்க்கு—அம்பலவாணருக்கு, அறியான்போலும்—மன்னன் அறியவில்லை போலும், சிலைமாரன்—கரும்புவில்லையுடைய மன்மதன், மலர்க் கணை—தாமரை மலர் முதலிய மலர்க்கணைகள், பூவை வாள்கண்—மறக்குல மகளின் வாள்போன்ற கண்ணாகிய, இருகணை—இரண்டு அம்புகள், எங்கள் ஒருகணைக்கு—எங்களுடைய ஓரம்புக்கு, இவனோஎதிர்நிற்பான்—இவன் எதிர்த்து நிற்பவனோ (அல்லன் என்றபடி)*

*மறம்—மறவர்குல மகளை மணக்க விரும்பிய மன்னன் அனுப்பிய தூதனிடம் மறவன் மறுத்துக் கூறியது. 68*

*(69) எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்*

நில்லாத எழுபிறப்பும் தொல்லை அல்லல்
நீக்குசிவ காமவல்லி நிலையும் தொல்லை
செல்லாரும் பொழில்புடைசூழ் சிதம்பரமும் தொல்லை
திருமூலட் டானமொடு சிவகங்கை தொல்லை
சல்லாபம் தருமகுடா கமமும் தொல்லை
தலபுரா ணமும்தொல்லை சபையும் தொல்லை
சொல்லாரும் நான்மறையும் தொல்லை தில்லைச்
சோதிநடம் ஆடுவதும் தொல்லை தானே

*(குறிப்புரை) எழுபிறப்பும்தொல்லை—ஏழு பிறவியும் துன்பம் தருவதே, தொல்லை—பழமை எனவும் ஆம் அல்லல்நீக்கு—துன்பத்தைப் போக்குகின்ற, சிவகாமவல்லி நிலையும் தொல்லை—சிவகாமவல்லி இருப்பதும் பழமை*

யானது, செல்லாரும்—மேகம் தங்கும், சிதம்பரமும் தொல்லை—சிதம்பரமும் பழமையானதே, திருமூலட்டானம், சிவகங்கை, மகுடாகமம், தலபுராணம், சிற்சபை, நான்மறை, நடராசர் நடனமாடுவது யாவும் பழமையே, பொழில்—சோலை, செல்—மேகம் சிதம்பரத்தல வழிபாடு மகுடாகமப்படியே நடைபெறுகின்றது என்பதை அறியலாம். 69

ஊசல்

(70) எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

தொல்லைமறை அம்பலவர் ஊசல் ஆடச்
சுரர்முனிவர் மலரயன்மால் தொழுது போற்றக்
குல்லைமகிழ் சண்பகம்மா தவிமந் தாரை
கொன்றைமலர் சொரிந்(து)அடியர் குணங்கள் பாட
முல்லைமுகை நகையரும்பப் பசும்பொன் ஓலை
முகமதியின் முத்தரும்ப அரம்பை மாதர்
தில்லைவளம் புகழஇனி(து) ஆடீர் ஊசல்
சிவகாம சுந்தரியார் ஆடீர் ஊசல்

(குறிப்புரை) மறை அம்பலவர்-வேதங்கள் போற்றும் அம்பலவாணர், சுரர் முனிவர்—தேவர்களும் முனிவர்களும், அயன்மால்—பிரமனும் திருமாலும், தொழுது போற்ற—வணங்கித் துதிக்க, அடியவர்கள் வெட்சி முதலிய மலர்களால் அருச்சித்து இறைவன் புகழைப் பாட, முல்லை முகை—முல்லையரும்பு போன்ற பற்களையுடைய சிவகாமவல்லி, நகையரும்ப—புன்முறுவல் கொள்ள, அரம்பை மாதர்—தெய்வமகளிர், தில்லை வளம் புகழ—தில்லை நகரின் வளத்தைக் கூற, ஆடீர் ஊசல்—ஊசலாடுவாராக, சிவகாம சுந்தரியார்-சிவகாமவல்லியும், ஆடீர் ஊசல்—ஊசல் ஆடுவாராக, குல்லை—வெட்சிமலர், மகிழ்—மகிழம்பூ, மாதவி—குருக்கத்தி, பொன்ஓலை—பொன்னாலான காதணி, முகமதி—உருவகம், முல்லைமுகை—உவமத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. 70

(71) நேரிசைவெண்பா

ஆடிய வெண்பிறையோ(டு) அந்தரத்தின் மேற்கொழுந்தாய்
ஓடிய செக்கர்வான் ஒக்குமே— நீடியகோ
பங்கக் குழையான் படைமழுவான் தென்புலியூர்
சங்கக் குழையான் சடை

(குறிப்புரை) பங்கக் குழையான்—ஒளிபொருந்திய காதணியுடையவன், படைமழுவான்—மழுப்படையை உடையவன், சங்கக்குழையான்—சங்கினால் ஆன காதணியுடையவன், சடை—சடைமுடி, வெண்பிறையோடு—பிறைச்சந்திரனோடு, அந்தரத்தின்மேல் கொழுந்தாய் ஓடி—ஆகாயத்தில் பரவி, செக்கர்வான் ஒக்கும்—செவ்வானம் போல் திகழும், சங்கக் குழையான்சடை செக்கர்வான் ஒக்கும் எனக்கொள்க 71

குறம்

(72) அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

சடைமுடிக்கும் அம்பலவர் வந்தணைவர் என்றகுறி
தப்பா தம்மே
கொடைமுடிக்கும் படிசொன்னால் குறத்தியல்ல யானுமொரு
குசத்தி கண்டாய்
கடைதுடிக்கும் விழிஇரண்டும் இடந்துடிக்கும் துடிக்குமிடக்
கரமும் தோளும்
துடிதுடிக்கும் இடப்புருவம் தளந்துடிக்கும் துடிக்குமிடத்
தொடையும் தானே

(குறிப்புரை) குறத்தி குறியறிந்து கூறுதல், அம்மே—தாயே, நானும் ஒரு குசத்தி—நானும் ஸ்தனங்களை யுடைய ஒரு பெண்தான், குசம்—நகில், குசத்தி—குலாலப்பெண் என்ற தொனிப்பொருளும் உண்டு. நான் கூறும் குறி தவறாது, விழி—கண்கள், இடம் துடிக்கும்—இடக்கண் துடிக்கிறது, இடக்கரமும் தோளும் இடப்புருவமும் இடக் கொங்கையும் தொடையும் துடிக்கின்றன. ஆதலால், அம்பலவாணர் உன்னை வந்து சேர்வது உறுதி.

பெண்களுக்கு இடக்கண் புருவம் முதலியன துடித்தல் நன்மைக்கு அறிகுறி என்பது அறிஞர் துணிவு. 72

(73) *அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்*

தொடையாடச் சிறுசதங்கை துதைந்தாடச்
சிவகணங்கள் துணங்கை யாட
உடைவாளில் பசுங்குருதிக் குழம்பாடச்
சிறுத்தொண்டர் உவகை யாட
நடையாடு பசுங்குழவித் தசைவிரும்பி
னார்புலியூர் நம்பர் பாரின்
இடையாடு புலிக்குருளைக்(கு) எப்படிபாற்
கடலூட்ட எண்ணி னாரே

*(குறிப்புரை) தொடை—மாலை, துதைந்து—நெருங்கி, துணங்கை—ஒருவகைக் கூத்து, சதங்கை—சிறுவர் காலில் அணியும் அணி, பசுங்குருதி—இரத்தம், குழவித் தசை விரும்பிய நம்பர்—இளம்பிள்ளை இறைச்சியை விரும்பிய இறைவன், புலிக்குருளைக்கு—புலிக்குட்டிக்கு (புலிக்கால் முனிவர் புதல்வர் உபமன்யுவுக்கு) பாற்கடல் ஊட்ட—பாற்கடலை உண்பிக்க எவ்வாறு நினைத்தார் இது வியப்பாக உளது. புலிக்குட்டிக்குப் பாலூட்டியது உபமன்யு வரலாறு பற்றியது ஆகும். "பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்" திருப்பல்லாண்டு.* 73

(74) *கலித்தாழிசை*

எண்ணினுக்குள் அடங்கிடாதவர் தில்லையம்பல வாணனார்
இவரளித்திடும் மதனமோகனம் இவள்மனத்தில் அடங்குமோ
விண்ணினுக்குள் அடங்கிடாது விரித்தெழுந்திடு வெண்ணிலா
விரகினுக்குள் அடங்கிடாது விசைத்தெழுந்திடு காமநோய்
மண்ணினுக்குள் அடங்கிடாது வசந்தகால வசந்தனும்
வாசகத்தில் அடங்கிடாது மடந்தைபட்ட வருத்தமும்

கண்ணினுக்குள் அடங்கிடா(து)இவள் கண்ணிலேவிழு கண்ணீர்
காசினிக்குள் அடங்கிடா(து)இவள் காதல்கொண்ட விலாசமே

(குறிப்புரை) எண்ணினுக்குள் அடங்கிடாதவர்—நினைவுக்கு எட்டாதவர், மதனமோகனம்—காமமயக்கம், விரகினுக்குள்—சூழ்ச்சியில், வசந்தன்—மன்மதன், தென்றற் காற்றும் ஆம், வாசகம்—சொல், மடந்தை—தலைவி (பெண்), காசினி—உலகம், காதல் விலாசம்—காதல் விளையாட்டு, எண்—எண்ணம், விண்—ஆகாயம், மண்—பூமி 74

(75) கட்டளைக்கலித்துறை

மேலண்டர் போற்றும் புலியூரர் பாம்பின் விடத்தை அஞ்சி
மாலஞ் செழுத்தும் திருநீல கண்டர் மணியும் பொற்றார்
நீலந் தருமணி சின்னப் படாமல் நிறுத்தநிலாப்
பாலும் பசுந்தழை யும்கை விடாது பரிந்தனனே

(குறிப்புரை) அண்டர்போற்றும்—தேவர்கள் துதிக்கின்ற, புலியூரர் பாம்பின்—புலியூரர் அணிந்துள்ள பாம்பினது, விடத்தைஅஞ்சி—நஞ்சுக்குப் பயந்து, மால்—திருமாலானவர், ஐந்தெழுத்தையும், (நமசிவய) என்ற மந்திரத்தையும், மணி—உருத்திராக்கமும். கௌத்துப மணியும் ஆம், நிலாப்பால்—நிலவொளி, பொற்றார்—கொன்றைமாலை, (பொன்+தார்) தார்—மாலை, பசுந்தழை—துளசி, கைவிடாது—நீக்கிவிடாமல், பரிந்தனன்—தாங்கியுள்ளார். ஏ—அசை. திருமால் சிவபெருமான் அணிந்துள்ள பாம்பின் விடத்துக்கு அஞ்சி, பஞ்சாக்கரமும் உருத்திராக்கமும் துளசிமாலையும் அணிந்துள்ளார் என்க. 75

சித்து

(76) அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

பரிசித்தும் நறுமலர்கொண்(டு) அருச்சித்தும்
அம்பலவர் பதத்தை நன்றாய்த்

தெரிசித்தும் கேசமுடன் பூசித்தும்
திரிகின்ற சித்த ரப்பா
வருசித்தர் தமைக்கண்டால் வஞ்சித்து
நயம்பேசி வழிவி டாமல்
ஒருசித்தர்க்(கு) அமுதளித்தால் ஒன்பதினா
யிரம்பசும்பொன் உதவ லாமே

(குறிப்புரை) இரசவாதம் புரியும் சித்தர் தமது பெருமையைக் கூறுவது.

அம்பலவர்பதத்தை—நடராசப்பெருமான் திருவடி களை, பரிசித்தும்—தொட்டு வணங்கியும், அருச்சித்தும்—மலர்கொண்டு அருச்சனை புரிந்தும், திரிகின்ற சித்தர்யாம்—திரிந்து உழலும் சித்தர்யாம், வருசித்தர்—வருகின்ற சித்தர்களை, நயம்பேசி—இனிமையாகப் பேசி வழிவிடாமல்—அனுப்பி விடாமல், ஒருசித்தர்க்கு—சித்தர் ஒருவருக்கு, உணவளித்தால்—பசிதீர்த்து மகிழ்வித்தால், ஒன்பதினாயிரம்பொன்உதவலாம்—ஒன்பதாயிரம் பொன் உதவியதுபோல் பயனுண்டாகும்.

தான்சிறி தாயினும் தக்கார்கைப் பட்டக்கால் வான்சிறிதாப் போர்த்துவிடும்'' என்ற கருத்து இங்கு நினைவு கூறத் தக்கது. நாலடி 38 76

(77) இன்னிசைவெண்பா

உதயமே ருப்பொருப்போ(டு) ஒப்பர் சபைவாணர்
துதயவே நீறணி வாய்தூய் திருப்பர்
கதையைமீ தேஎழுதிக் கட்டிவைத் தாலென்
இதயமே சம்பந்தர் ஏடு

(குறிப்புரை) மேருப்பொருப்பு—மேருமலை, சபைவாணர்நீறு—அம்பலவாணரது திருநீற்றை, துதைய அணிவாய்—நிறையப் பூசுவாய், தூய்திருப்பர்கதை—தூய்மையானவர் பெருமைகளை, மீதுஎழுதிக்கட்டி வைத்தால்—என் உள்ளத்தில் நிலைபெறச் செய்தால்,

என்இதயம்சம்பந்தர்ஏடு—எனது உள்ளம் சம்பந்தர் ஏடுபோல நெருப்பில் வேகாமலும் நீரை எதிர்த்தும் அழிவின்றி இருக்கும். 77

சம்பிரதம்

(78) பன்னிருசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

ஏடியும் புலவனும் போலவே ஊமைதனை
இன்னமும் பேசுவிப்பேன்
இவுளிதனை நரியாக்கி நரியையும் பரியாக்கி
இந்திரசா லம்பண்ணுவேன்
வாடியுடல் வேர்வொழுக மதுரையில் பிட்டுக்கு
மண்சுமந்(து) ஐயர்முன்னாள்
வைகையை அடைத்தபடி கடலையும் அடைத்திடுவன்
மண்ணுலகில் இதுவித்தையோ
பாடியும் பரவியும் தேடாமல் மாயனும்
பத்மாச னக்கடவுளும்
பன்றியும் பறவையும் தானாகி முண்டகப்
பாதமும் சடைமகுடமும்
தேடியும் காணாத திருவுருவை மார்கழித்
திருமஞ்ச னத்தில்யார்க்கும்
தெரிசிக்க வும்பண்ணி அனவரத நடனமும்
சேவிக்க வும்புரிவனே

(குறிப்புரை) சம்பிரதம்—இந்திரசால வித்தையில், வல்லவன் தன் பெருமையைத் தானே கூறுதல், ஏடியும் புலவனும்—(திருச்சாழலில் விளிக்கப் பெற்றுப் பாடும்) ஊமைப் பெண்ணும் மாணிக்க வாசகரும் போல, இவுளி—குதிரை, பரியாக்கி—குதிரையாக்கி, இந்திரசாலம் புரிவேன், ஐயர்வைகையை அடைத்தபடி—இறைவன் (பிட்டுக்கு மண்சுமந்து) வைகை நதிக்கரையை அடைத்தது போல, கடலையும் அடைத்திடுவன்—கடலையும் அடைப்பேன், மாயனும் பத்மாசனக் கடவுளும்—திருமாலும் பிரமனும், காணாததிருவருவை—தேடிக்

காணமுடியாத இறைவனை, யார்க்கும் தெரிசிக்கவும் சேவிக்கவும் புரிவன்—யாவரும் கண்டு தொழச் செய்வேன், முண்டகப்பாதம்—தாமரை போன்ற திருவடி, அனவரத நடனம்—இடைவிடாது எப்போதும் புரியும் நடனம், மார்கழித் திருமஞ்சனம்—மார்கழி மாதத்தில் நடைபெறும் திருமஞ்சன விழா, (திருவாதிரை நாளில்) 78

(79) கலிநிலைத்துறை

புரிநூல் புனைவார் திருநீ றணிவார் புலியூரர்
பரிபூ ரணராய் மடவா ருயிரே பலிதேர்வார்
எரிநீ றிடவே நகுவார் பகுவாய் எருதேறி
வருநூ புரமான் நசையால் பலகால் வருவாரே

(குறிப்புரை) புரிநூல்—முப்புரிநூல் (பூணூல்), புலியூரர்—சிதம்பரநாதர், பரிபூரணராய்—எங்கும் நிறைந்திருப்பவராகி, மடவாருயிர்—தாருகவனத்து முனிவர் பத்தினிமாரிடம் பலி ஏற்று அவர்கள் உயிரை, பலிதேர்வார்—பிச்சையாக ஏற்க முடிவு செய்வார், எரிநீறிட நகுவார்—திரிபுரம் எரிந்து சாம்பராகும்படி சிரிப்பார், நூபுரமான்—காற்சிலம்பு அணிந்த பெண், நசை—விருப்பம். 79

மேகவிடு தூது

(80) அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்

வருடிக்கும் மழைமுகில்காள் எனதாசைக் கடல்சுவற்ற
மன்று ளாடும்
குரிசிற்கு நீர்மொழிந்தால் ஆவிபெற லாமெமக்கும்
கொண்டல் காள்ஓர்
இருடிக்கும் பதஞ்சலிக்கும் இடைகடுவே நடனமிடும்
இருபா தங்கள்
தெரிசிக்க லாமுமக்கும் சேவிக்க லாம்புலியூர்ச்
சிவனைத் தானே

(குறிப்புரை) முகில்காள்—மேகங்களே, எனது ஆசைக்கடல் சுவற்ற—என் கடல் போன்ற ஆசை வற்றும்படி, நீர்மொழிந்தால்—நீவிர் கூறினால், ஆவி பெறலாம்—உயிர்பெறமுடியும், கொண்டல்காள்—விளி, ஓர்இருடி—வியாக்கிரபாதர், நடனமிடும் இருபாதங்கள்... நடனம் புரியும் திருவடிகளை, சேவிக்கலாம்—தொழலாம், குரிசில்—ஆடவரிற் சிறந்தவன், புலியூர்ச்சிவன்—நடராசப்பெருமான். தான், ஏ—அசை. 80

(81) வஞ்சிப்பா

சிவகங்கையும் திருமதிலும்
மணிமன்றமும் மதிமுகமும்
பவள வாயும் படர்சடையும்
பவள நீறும் தமருகமும்
சிவந்த காலும் கருமிடறும்
பசந்த தாரும் பனிமதியும்
புண்டரமொடு புலியதளும்
குண்டலமொடு குரைகழலும்
கண்டவன்
(புன்பிறப்பு)அகற்றினை புனிதா
என்பிறப்(பு)அறயான் என்றுகாண்பதுவே

(குறிப்புரை) சிவகங்கை—சிவகங்கை தீர்த்தம். தவளநீறு—வெண்ணிற விபூதி, தமருகம்—உடுக்கை, கருமிடறு—திருநீலகண்டம், தார்—கொன்றை மாலை, பனிமதி—பிறைச்சந்திரன், புலியதள்—புலித்தோல், குரைகழல்—ஒலிக்கின்றக் கழலணிந்த திருவடி, புண்டரம்—திருநீற்றுக் குறி. கண்டவன்—தரிசித்த நந்தனார், புன்பிறப்பு—இழிந்த பிறவி, புனிதா—விளி, யான் என்று காண்பது-நான் தரிசிப்பது எப்போது. 81

### (82) சந்தக்கலிநிலைத்துறை

*தானன தானன தானன தானன தானானா*

**வேதபு ராணச பாபதி யாகிய வேதாளர்**
**தாதகி மாலையர் தாமரை யாகிய தார்தாரார்**
**மாதர்பு றாமயில் கேகய மாமுகில் வாழ்பூவை**
**ஓதிம மாமிவை போவதும் மீள்வதும் ஓயாவே**

*(குறிப்புரை) சபாபதி—சபைத்தலைவர், வேதாளர்—பூதகணங்களையுடையவர், தார்தாரார்—மாலையைக் கொடார், அழகியபுறா, மயில், குயில், மேகம், அன்னம் ஆகிய இவை அவரிடம் தூது போவதும் மீண்டு வருவதும் ஒழியவில்லை, தாமரையாகிய தார்தாரார் என்பது தாம் அரையாகிய தாரும் [பாதி மாலையும்] தந்தாரில்லை எனப் பொருள் படுவதும் காண்க. 82*

*தூது செல்வதற்குரியவை.*

**இயம்புகின்ற காலத்(து) எகினமயில் கிள்ளை**
**பயம்பெறுமே கம்பூவை பாங்கி— நயந்தகுயில்**
**பேதைநெஞ்சம் தென்றல் பிரமரமீ ரைந்துமே**
**தூதுரைத்து வாங்கும் தொடை— இரத்தினச் சுருக்கம்—7**

*82*

### (83) கலித்தாழிசை

**ஓய்விதண்டை இல்லைதில்லை அம்பலத்துள் ஆடுவார்**
**ஒருவர்அன்பி லாமைகொண்(டு) ஒருத்தரோ விதண்டைமுன்**
**போய்விதண்டை யிட்டுமீள்வர் அன்னைமார்கள் தோழிமார்**
**புலவிதண்டை யிட்டுநிற்பர் புள்ளெலாம் விதண்டைகாண்**
**வேய்விதண்டை உறவினோர்கள் வெகுவிதண்டை கண்ணிலா**
**வெண்ணிலா விதண்டையூர் விதண்டைமற்ற மின்னனார்**
**வாய்விதண்டை நீலிபெற்ற தாய்விதண்டை இவையலால்**
**வாரிஏமு மேவிதண்டை மாரவேள் விதண்டையே**

(குறிப்புரை) விதண்டை என்ற சொல் பகை எனவும், வாக்குவாதம் எனவும் பொருள்படும். அம்பலத்துள் ஆடுவார்—பொன்னம்பலத்துள் நடனம் புரிபவர், ஒருத்தரோ விதண்டை—அவர் ஒருவர் மட்டுமா பகை, அன்னைமார்—தாய்மார், தோழிமார் புலவி தண்டை இட்டு நிற்பர்—தோழியர் தலைவர் என்னைப் புல்லவேண்டுமென அவரிடம் வாதாடுவர், புல—புல்ல, இடைக்குறை, புள்ளெலாம் விதண்டை—பறவைகள் யாவும் பகை, கண்ணிலா வெண்மதி—கண்ணோட்ட மில்லாத சந்திரன், ஊர்—ஊரிலுள்ள மக்கள், மின்னனார்—மகளிர், நீலிவாய்—குயிலின் குரல், தாய்விதண்டை—பெற்ற தாயும் பகை, வாரிஏழும்—ஏழுகடலும், மாரவேள்—மன்மதன், தலைவர் என்னிடம் அன்பு கொள்ளாமையால் எல்லோரும் எனக்குப் பகையாயினர் என்பது கருத்து. 83

(84) நேரிசைவெண்பா

தண்ணார் பொழில்தில்லைச் சங்கரனார் சீர்பிழைத்தால்
கண்ணா யிருந்து கலந்தாலும்— எண்ணார் கொல்
வேரல் உமிழ்ந்ததழல் வேள்வியனல் கைஉடம்பு
மூரல் உமிழ்ந்தசுடர் மூனறு

(குறிப்புரை) சங்கரனார் சீர்பிழைத்தால்—சிவபிரானிடம் நன்னடையில் தவறினால், கண்ணாய் இருந்து கலந்தாலும்—கண்போலப் பழகினாலும், எண்ணார் கொல்—எண்ணிப்பார்க்கமாட்டார் போலும், வேரல்—மூங்கில், மூங்கிலைக் கடைந்து உண்டாக்கிய தழலாலான தக்கன் யாகத்தில் சிவபெருமான் மூன்று கண்களான அக்கினி, சந்திரன், சூரியன் மூவரும் முறையே கையையும், உடலையும், பல்லையும் இழந்தனர் என்பது புராண வரலாறு. 84

### தழை

(85) கட்டளைக்கலித்துறை

மூதந்த மாந்தில்லை அம்பலக் கூத்தர் முனிவர் விண்ணோர்
போதந்த மாந்தர் புகழ்புலி யூரர் பொருப் பிறைவா
மா´து)அந்த மாந்தன பாரத்தி லேஒற்றி வாழ்ந்தனள்காண்
நீதந்த மாந்தழை ஆவியன் றோஎங்கள் நேரிழைக்கே

(குறிப்புரை) மூதந்தம்—(முதுமை+அந்தம்) பழமை யான, முனிவர் விண்ணோர் மாந்தர் புகழ்—முனிவர் களும் தேவர்களும் மக்களும் புகழ்கின்ற, புலியூர் பொருப்பு இறைவா—புலியூர் மலைத் தலைவனே, நேரிழைக்கு—தலைவிக்கு, நீ தந்த மாந்தழை—நீர் அளித்த மாந்தழையாலான தழையுடை, ஆவி—உயிர், ஆவி அன்றோ—உயிரல்லவோ, மாது அந்தமாம் தனபாரத்திலே ஒற்றிவாழ்ந்தனள்—அவள் அதனைத் தன் உடலுறுப்பான பருத்த கொங்கைகளில் சேர்த்து மகிழ்ந்தாள், மாது—தலைவி. தழை என்பது மலர்களாலும் இளந்தளிர் களாலும் ஆன உடை. 85

(86) அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்

நேராடல் புரிபரமர் புலியூர்ச்சிற் றம்பலவர் நிமல நாட்டில்
வாராடு களபமுலை வடமாட விளையாடும் மடவார் கண்கள்
போராடும் எதிராடும் உறவாடும் வரிக்கயலைப் போந்து சாடும்
தாராடும் இளைஞோரைச் சண்டையிடும் மணிக்குழையைச்
சருவுந்தாமே

(குறிப்புரை) நேராடல்புரி—விதிமுறை தவறாமல் நடனம் புரிகின்ற, வாராடு களபமுலை—கச்சணிந்த கலவைச்சாந்து பூசப்பெற்ற நகில்கள் மீது, வடமாட—முத்துமாலை அசைய, மடவார்கண்கள்—மகளிர்கண்கள், போராடும் எதிராடும்உறவாடும்—போர்செய்யும் எதிர்க் கும் உறவு கொள்ளும், கயல்—கயல்மீன், இளைஞோரை—இளைஞர்களை, குழையைச்சருவும்—காதணியை நெருங்கும். 86

### பிச்சியார்

*(87) அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்*

**சருவிச்சீ ராட்டுமொரு பஞ்சவன்னக் கிளியேந்தித்
தவத்தோர் காணத்
தெருவிச்சீ ராயணிந்த கஞ்சுளியும் திருநீறும்
தெரிசித் தோரைப்
பொருவிச்சீர் பேராசை பூண்பிச்சீர் சண்டையிடு
பூச லெல்லாம்
வருவிச்சீர் மடலேற வைப்பிச்சீர் சிவன்புலியூர்
வரும்பிச் சீரே**

(குறிப்புரை) *பிச்சியார்—திருநீறு முதலியசிவசின்னந் தரித்துச் சூலம்ஏந்தி வீடுதோறும் பிச்சைக்கு வரும்பெண், புலியூர் வரும்பிச்சியாரே—புலியூரில் பிச்சைக்கு வந்த பிச்சியாரே, சருவி—டழகி, சீராட்டும்—பேணிவளர்க்கும், கிளிஏந்தி—கிளியைக் கையில் தாங்கி, தவத்தோர்காண— தவசிகள் காணும்படி, தெருவிச்சீர்—உம்மைத் தெரிவித்துக் கொண்டீர், கஞ்சுளி—சட்டை, பொருவிச்சீர்—போரிடச் செய்தீர், பேராசைபூண்பிச்சீர்—பேராசையை உண்டாக் கினீர், பூசல்வருவிச்சீர்—போர்செய்யும் ஆரவாரம் வரச் செய்தீர், மடலேறவைப்பிச்சீர்—மடலேற வைத்தீர். 87*

*(88) இன்னிசைச்சிந்தியல்வெண்பா*

**சீரணங் கண்ட திருநீல கண்டர்பரி
பூரணங் கண்ட புலியூர் தொழு(து) எழுவார்
ஆரணங் கண்டார் அவர்**

(குறிப்புரை) *சீரணம்கண்ட—சீரண ஆகமம் ஆராய்ந் தறிந்த, சீரணம்-சிவாகமம், பரிபூரணம்—எங்கும் நிறைந்த தன்மைத்தாய, புலியூர்தொழுதுஎழுவார்—புலியூரை வணங்குபவர், ஆரணம்கண்டார்அவர்—வேதங்களைக் கரைகண்டவராவர், ஆரணம்—வேதம், சீரணம்— சிவாகமம் இருபத்தெட்டினுள் ஒன்று. 88*

மடக்கு

(89) எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

**அண்டர் காணநெஞ் சங்கவன் றாயிலை**
**அத்த னேயிலை அங்கவன் தாயிலை**
**புண்ட ரீக புரநடங்(து) ஏறிலாய்**
**பொன்னின் வாயிற் படிநடங் தேறிலாய்**
**மிண்ட னாகவும் காலம் கழிந்ததே**
**மிகஇ ரந்துண்டு காலங் கழிந்ததே**
**தெண்ட னாக வரங்கிடந் தில்லையே**
**செம்பொன் அம்பல வர்க்கிடந் தில்லையே**

*(குறிப்புரை) அண்டர்காண—வானோர் தலைவனைத் தரிசிக்க, நெஞ்சம்கவன்றாயிலை—உள்ளம் கவலைப்படவில்லை, அத்தனேஇலை—தந்தையே இல்லை, அவன்தாயிலை—அவனுக்குத் தாயும் இல்லை, பொன்னின் வாயிற்படி—பொன்னம்பலத்தின்வாயில், நடம்தேறிலாய்—நடனத்தைத் தெளியவில்லை, மிண்டனாக—வலியவனாக, தெண்டனாக—வணக்கமுடையவனாக, வரம் கிடந்திலை—வரம் கிடந்தாயல்லை, பொன் அம்பலவர்க்கு—கனகசபையாருக்கு, இடம் தில்லையே—இருப்பிடம் தில்லை நகரே.* 99

(90) இடையினச்சந்தவிருத்தம்

**தில்லைஅரன் எல்லைதிரு நெல்லை திருமுல்லை**
**நல்லமொடு வில்லைவனம் நெல்லிவனம் நல்லூர்**
**மல்லைநகர் கொல்லமொடு வில்லிபுரம் வல்லம்**
**குல்லைவனம் நல்லநகர் கொல்லிமலை யாமே**

*(குறிப்புரை) தில்லைஅரன்எல்லை—சிதம்பரத்திலுள்ள சிவபிரானின் கோயில்களாவன, நெல்லை—திருநெல்வேலி, திருமுல்லை—திருமுல்லைவாயில், மல்லை—திருக்கடல் மல்லை, நல்லம், வில்லைவனம் முதலியன.*
90

(91) கட்டளைக்கலித்துறை

ஆயும் தனயரும் பெண்டிரு மாயலைந் தேனடவிப்
பேயும் தனயரும் பெண்டிரும் ஆயிற்று பேதமுண்டோ
நாயும் தலைமுறை ஏழா னதுநட ராசஇன்னும்
ஓயும் படிக்கில்லை யோஐய னேஎன் உயிரினுக்கே

(குறிப்புரை) நடராச—நடராசப் பெருமானே, ஆய்—தாய், தனயர்—பிள்ளைகள், பெண்டீர்—மனைவி, அடவி—சுடுகாடு, பேயும்தனயரும்பெண்டிரும்ஆயிற்று—பேய்களே பிள்ளைகளும் மனைவியுமாக வந்து சேர்ந்தன. நாயும்தலைமுறை ஏழானது—நாய்கூட பல தலைமுறை யாக வாழ்கின்றது, என் உயிருக்கு இன்னும்—பிறப்பு இறப்புக்களினின்றும் ஓய்வு இல்லையோ. சுடுகாட்டி லுள்ள பேய் எனக்குத் தாயும் தனயரும் மனைவியுமாக வாய்த்தன. என் உயிருக்கு உய்வில்லையோ இறைவனே.
91

(92) ஆசிரியப்பா

உயிர்த்தனள் ஆமோ உறவினர் ஒலிப்பச்
செயிர்த்தனள் செவிலி தேய்த்த சிறுபறை
அஞ்சுகக் கிளவிக்கு ஐயவி அப்பி
வெஞ்சினக் கூளியை விலக்குநர் ஒருசார்
நித்திலக் குதம்பை நீரெழ நிவந்த
கைத்தலங் கதுவாது கன்றிழந் தனவே
அதனால்,
காரியொடு கழறவும் களியள் இயம்பனம்
நாரியொரு நவிலவும் நாவெழுந் திலளே

(குறிப்புரை) உயிர்த்தனள் ஆமோ—(மயக்கமுற் றிருக்கும் இவள்) உயிர்பெறுவாளோ, உறவினர்ஒலிப்ப—சுற்றத்தார் அலர் கூறிப் பழிக்க, செயிர்த்தனள்செவிலி—செவிலித்தாய் கோபமுற்றனள், அஞ்சுகக்கிளவிக்கு—கிளிபோல் மொழிபேசும் தலைவிக்கு, ஐயவிஅப்பி—வெண் சிறு கடுகைத் தலையில் தேய்த்து, கூளியை—

பேயை, விலக்குநர்—நீக்குபவர், ஒருசார்—ஒரு பக்கம் குதம்பை—காதணி, கைத்தலம் பற்றாது கன்றிழந்தன. வளையல்கள் கையில் நில்லாமல் கழன்றன, கன்று—வளையல், காரியொடுகழறவும்—கிளியோடு கூறவும், நாரியொடுநவிலவும்—தோழியோடு கூறவும், நாஎழுந்திலள்—அவளுக்கு நா எழவில்லை.

இச் செய்யுளில் மகுடம் இல்லை. அதாவது தில்லையைக் குறிக்கும் சொல் இல்லை. அடுத்த செய்யுளோடு அந்தாதித் தொடையும் அமையவில்லை. சில அடிகள் விடுபட்டனவோ என ஐயுற வேண்டியுள்ளது.
92

(93) சந்தக்கலிநிலைத்துறை

கல்லும் குழையும் படிநின்(று) அடரும் கருதாரைப்
புல்லும் புரமுன் பொடிகண் டவர்தென் புலியூரில்
வில்லும் கயலும் புயலும் கொடுவென்(று) இளைஞோரைக்
கொல்லும் படியென் எதிர்நின் றதுமின் கொடிமானே

(குறிப்புரை) நின்றுஅடரும்கருதாரைப்புல்லும்புரம்—எதிர்நின்று தாக்கும் பகைவரைத் தன்பால் கொண்ட திரிபுரம், புரமுன்பொடிகண்டார்—திரிபுரத்தைச் சிரித்து நீறாக்கியவர், தென்புலியூர்—சிதம்பரம், வில்லும்புயலும் கயலும் கொடு, புருவமாகிய வில்லையும், கூந்தலாகிய புயலையும், கண்களாகிய கயலையும் கொண்டு, இளைஞோரைவென்று—இளைஞர்களை வெற்றி கொண்டு எதிர்நின்றதுமின்கொடிமான்—எதிர்த்து நின்றாள் மின்னற்கொடி போன்ற பெண், கொடு—கொண்டு, இடைக்குறை.
93

(94) பதினான்குசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

மாழைமா மயில்போல் மாழைநேர் விழியாள்
மாழைசேர் வனமுலை வெதும்ப

மாலைமா மதியால் மாலையே நிகர்வாள்
மாலையே தவிர்த்தருள் புரிவாய்
சூழுமா லிகையால் சூழுமா துயரால்
சூழுமா(று) ஒன்றையும் உணராள்
சூதுவா(து) அறியாள் சூதமே னியினாள்
சூதுநேர் முலையின்மீ(து) அணைவாய்
வேழமா மலையே வேழஈ ருரியாய்
வேழமா மதனைவென் றவனே
வேலையா ரமுதே வேலைநேர் விழியார்
வேலையே தவிரவாழ்(வு) அருள்வாய்
ஆழிமால் கடலே ஆழிமால் பரவும்
ஆழிசேர் விரலுமை கணவா
அம்பலத்(து) அமுதே அம்பலத் தடம்சூழ்
அம்பலத்(து) அமரர்சே கரனே

(குறிப்புரை) *உமைகணவா—உமைக்குக் கணவனே, அமரர் சேகரனே—தேவர்கள் சூழஇருப்பவனே, மாழைமாமயில்—அழகிய சிறந்தமயில், மாழைநேர் விழியாள்—மாவடுபோன்ற கண்களை உடையவள், மாழைசேர்—பொன்போல் பசலை பூத்த, மாலைமாமதியால்—மாலையில் தோன்றும் சந்திரனால், மாலையே நிகர்வாள்—திருமால் போல் உடல் கருநிறம் பெற்றுள்ளவள்.*

*மாலையேதவிர்த்து அருள் புரிவாய்—மயக்கத்தைப் போக்கி அருள்வீராக, மாலிகை—மாலை, மாதுயர்—மிக்க துன்பம், சூதுவாதறியாள்—வஞ்சனை அறியாதவள், சூதமேனியினாள்—மாந்தளிர் போன்றமேனியுடையவள், சூதுநேர் முலையின் மீது அணைவாய்—சூதாடுகருவி போன்ற தனங்களின் மேல் அணைவாயாக, வேழமாமலையே—யானை நிறைந்த பெரியமலை போன்றவனே, வேழஈருரியாய்—யானைத் தோலைப் போர்த்தவனே, வேழமா மதனை வென்றவனே—கரும்பு வில்லையுடைய மன்மதனை வெற்றிகொண்டவனே.*

வேலையாரமுதே—கடலில் தோன்றிய அமுதம் போன்றவனே, வேலைநேர்—வேல்போன்ற, விழியார்—கண்களையுடைய மகளிர், வேலையேதவிர—செயல் நீங்க, வாழ்வு அருளாய்—வாழ்க்கையை அருள்வீராக, மாழை—பொன், மாவடு, பசலைநிறம், மாலை—மாலை நேரம், திருமால், மயக்கம், சூழும்—சூழ்ந்திருக்கும், ஆராயும், சூதம்—மாந்தளிர் சூது—வஞ்சனை, சூதாடு கருவி, வேழம்—யானை, கரும்பு, வேலை—கடல், வேல், செயல், ஆழி—கடல், சக்கரம், மோதிரம். 94

(95) நேரிசைவெண்பா

கரத்தால் தொழுதிடினும் கண்(டு) இறைஞ்சி னாலும்
சிரத்தால் வணக்கம் செயினும்—உரைத்திடினும்
தில்லைக்கப் பால்நின்று சேவித்தா லும்சனனம்
எல்லைக்கப் பால்நிற்கு மே.

(குறிப்புரை) (நடராசரைக்) கரத்தால் தொழுதிடினும்—கைகளால் தொழுதாலும், கண்டு இறைஞ்சினாலும்—தெரிசித்துத் துதித்தாலும், சிரத்தால் வணக்கம் செயினும்—தலையால் வணங்கினாலும், உரைத்திடினும்—நடராசர் புகழைக் கூறினாலும், தில்லைக்கப்பால் நின்று—தில்லை நகருக்கு வெளியே இருந்து, சேவித்தாலும்—தொழுதாலும், சனனம்—பிறவி, எல்லைக்கு அப்பால்நிற்கும்—எல்லை கடந்து நின்றுவிடும். [வீடுபேறு அடையலாம்] 95

(96) அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்

எல்லைக்கோ புரநான்கும் கொடிமுழங்க நிதிவழங்கும்
இறைவீர் எங்கள்
தில்லைக்கோ விந்தர்தொழும் அம்பலவர் திருநாடா
செம்பொன் வேண்டேம்
கொல்லைக்கோ மழவிடையின் கொழுந்துமட மணிமார்பில்
குளித்த பின்பு

**முல்லைக்கோ வின்மடந்தை முலையாளைக் கோடீண்டு**
**முழங்குந் தானே**

*(குறிப்புரை) எல்லைக்கோபுரம்நான்கும்—நான்கு எல்லைகளிலும் உள்ள கோபுரங்களில், கொடிமுழங்க—கொடிகட்டித் தானமுரசு அறைந்து, நிதிவழங்கும் இறைவீர்—தானம் புரியும் தலைவரே, திருநாடா-அழகிய நாட்டை உடையவரே, பொன் வேண்டேம்—(மகளை மணஞ்செய்து கொடுக்க) நாங்கள் பொருளைவிரும்ப வில்லை, மழவிடையின் கொழுந்து—இளங் காளையின் கொம்பு, மார்பில் குளித்த பின்பு—வீரனின் மார்பில் பாய்ந்த பின்னர், முல்லைக்கோவின்மடந்தை—முல்லை நிலத் தலைவன் மகள், கோடு ஈண்டு முழங்கும்—மணத்திற் குரிய வாத்தியம் இங்கு ஒலிக்கும்.*

*ஏறுதழுவினால் மகளை மணக்கலாம் என்பது கருத்து.* **96**

*(97) கட்டளைக்கலித்துறை*

**தான விலங்கைத் தழைகொண்(டு)எய் தேனென்பர் தானவரங்(கு)**
**ஆன விலங்கை அழித்தவர் போல்நிற்பர் ஆதலினால்**
**ஈன விலங்கை விடுத்தாள் பவர்தில்லை ஈசர்வெற்பில்**
**வான விலங்கை வளைத்தெய்(கு) வாரிந்த மன்னவரே**

*(குறிப்புரை) இந்த மன்னவர்—இங்கு வந்துள்ள தலைவர், தான விலங்கை-மதயானையை, தழைகொண்டு எய்தேன் என்பர்-தழையால் தாக்கினேன் என்பார், தான அரங்கான இலங்கையை—அசுரர்க்கு இடமான இலங்கை நகரை, அழித்தவர் போல் நிற்பர்—அழித்த இராமனைப் போலநிற்பார், வானவில்—இந்திரவில்லை, இவர் வளைத்து எய்குவார்—இந்த மன்னர் தமதுகையாலேயே வளைத்து எய்வார் போலும்.* **97**

**(98) கலிவிருத்தம்**

**மன்னோஎன் பிறப்பறுக்க வல்லவருண்(டு) எனிலடியேன்**
**என்னாலெம் பிறப்பறுக்கக் கடவேன்காண் எம்பெருமான்**

உன்னாலும் பிறப்பறுத்தற்(கு) அரிதெனிலோன் புலியூரா
பின்னால்மற்(று) அனைவோரும் கொடிக்காளம் பிடிப்போரே

(குறிப்புரை) புலியூரா-சிதம்பர நடராசனே, பிறப்பு அறுக்கவல்லவர் உண்டெனில்—பிறவியை நீக்க வல்லவர் இருந்தால், எம்பிறப்புஅறுக்கக்கடவேன்-எமது பிறவியை நீக்கிக் கொள்வேன், உன்னாலும்பிறப்புஅறுத்தற்குஅரிது எனில்—உம்மாலும் என் பிறவியை நீக்கியருள இயலாதென்றால், அனைவோரும்—யாவரும், பிறப்பிற்குகொடிக் காளம்பிடிப்போரே—கொடியும் காளமும் பிடிப்பவர் தான். மன், ஓ—அசை. 98

(99) எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

போரு வானவர் சூழ்ந்தசிற் றம்பலம்
புலிப தஞ்சலி போற்றுசிற் றம்பலம்
பாரு ளோர்கள பரவுசிற் றம்பலம்
பரமன் நாடகம் ஆடுசிற் றம்பலம்
ஏரு லாவுசிற் றம்பலம் செம்பொனால்
எழுதி மேய்ந்தசிற் றம்பலம் எம்பிரான்
சீரு லாமுறை பாடுசிற் றம்பலம்
செம்பொன் அம்பலம் தில்லைச்சிற் றம்பலம்

(குறிப்புரை) வானவர்சூழ்ந்த—தேவர்கள் நெருங்கியுள்ள, புலிபதஞ்சலி—புலிக்கால் முனிவரும் பதஞ்சலி முனிவரும், பாருளோர்கள்பரவு—உலகமக்கள் துதிக்கின்ற பரமன்நாடகமாடு—இறைவன் நடனம் புரிகின்ற, ஏருலாவு—அழகு பொருந்திய, சீருலாம்முறை—சிறப்பான திருமுறைப் பாடல்கள், பாடுசிற்றம்பலம்—பாடப்படும் சிற்றம்பலம், செம்பொன்அம்பலம்—பொன்னால் வேயப் பட்ட அம்பலம். தில்லைச்சிற்றம்பலமாகும். 99

### உயிர் வருக்க மோனை

#### ஆசிரியப்பா

அம்பலக் கூத்தன் ஆரூர் மானவன்
இடைமரு(து) ஈசன் ஈங்கோய் மலையினன்
உறையூர் எந்தை ஊறல்மா நகரினன்
எறும்பிமா மலையினன் ஏடகத்(து) உறைவோன்
ஐயா(று) அமர்ந்த அமரர்கள் பெருமான்
ஒற்றியூர் இறையோன் ஓமாம் புலியூர்ச்
சிற்றம் பலவன் சீர்பர வுதுமே

(குறிப்புரை) ஆரூர்—திருவாரூர், இடைமருது—திருவிடைமருதூர், ஊறல்—திருவூறல், ஏடகம்—திருவேடகம், ஐயாறு—திருவையாறு, ஒற்றியூர் திருவொற்றியூர், சீர்பரவுதும்—சிறப்பினைப் போற்று—கின்றோம்.

இப்பாடலில் ஒவ்வோரடியின் முதற்சீர் மூன்றாம் சீர்களில் உயிரெழுத்துக்கள் வரிசையாக வருமாறு அமைத்திருப்பது போற்றுதற்குரியது பரவுதும் என்பதில் ஔ(அவு) என்ற ஒலியும் வருதல் காண்க. 100

தில்லைக் கலம்பகம் முற்றிற்று.

## தில்லைக்கலம்பகம்

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி

### செய்யுள் எண்

செய்யுள் முதற் குறிப்பு அகராதி முற்றிற்று.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருவாமாத்தூர்க்கலம்பகம்

## காப்பு

*அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்*

**தஞ்சமென்(று) அமரர் கெஞ்சத்**
**தானவர் அதனின் விஞ்ச**
**அஞ்சவே வருநஞ் சுண்ட**
**அழகர்ஆ மாதை யார்க்கு**
**மஞ்சுசேர் பொழில்சூழ் பம்பை**
**மால்துய ரந்தீர்த் தானைக்**
**கஞ்சநாண் மலர்கொண் டேத்திக்**
**கலம்பகம் செய்வோம் யாமே**

*(குறிப்புரை) தஞ்சமென்றுஅமரர்கெஞ்ச—அடைக்கல மென்றுதேவர்கள்வேண்ட, தானவர்—அசுரர், விஞ்ச—மிக, அஞ்சவருநஞ்சு—ஆலகாலவிடம், ஆமாதையார்—திருவாமாத்தூர் அழகியநாதர், பொழில்சூழ்—சோலை சூழ்ந்த, மால்துயர்தீர்த்தானை—திருமால்துயரம்தீர்த்த கணபதியை, கஞ்சமலர்கொண்டுஏத்தி—தாமரைமலர் கொண்டுதுதித்து, கலம்பகம்செய்வோம்—கலம்பகம்என்ற நூலைச்செய்யத்தொடங்குவோம்.*

## நூல்

### (1) *மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா*

பூமேவு சதுர்முகத்துப் பொலிமறையோன் சடங்கியற்ற
மாமேவு பசுந்துளவ மாயனுத கம்பொழிய
ஈராறு விளக்கெறிப்ப இமையவர்பல் லாண் (டு) இசைப்பப்
பாரேழு பாலிகையுள் பல்லுயிரும் அங்குரிப்பக்
குலகிரிகால் பகிரண்ட கூடநெருங் காவணத் தே
உலகனைத்தும் ஈன்றாளை உயர்மணம் செய்தருளினையே

*தாழிசை*

அப்போது மணக்கோலத்(து) அபிராமம் கண்டன்றோ
இப்போதும் வானவர் கண் இமையாமல் இருந்தனரே

பைப்போது புயங்கேசர் பாதாளம் போயுமுய
ரப்போயும் ஈண்டிருவர் காணா தறிந்திலரே

குறையறுத்த செங்காட்டாங் குடியம்மை சட்டுவத்தே
முறையமைத்த கருங்கலத்தே முடித்தொண்டர் பெருங்கலத்தே

பறையறுத்த பரிகலத்தே பகிர்ந்தகறி யமுதினைமீண்(டு)
இறையழைக்கச சொனனபோ(து) இமயபுரம் என்படுமே

மோகமுறும் ஆயிரமா முகக்கங்கை ஒருபாதி
பாகமுறும் செந்துவர்வாய்ப் பசுங்கிள்ளை ஒருபாதி

சாகைமறை ஒருபாதி தண்டுளவோன் ஒருபாதி
ஆகவகை போயன்றோ அருவுருவ மாயினையே

*அராகம்*

மிடல்தரு மொழிசின விடையொறு விடையினை
கடலிடர்படவொரு கணைவிடு கணையிணை

மலரயன் வினவுறும் மறைதரு மறையினை
பலபடி பலவுயிர் பறைதரு பறையினை

ஒருவரும் இருவர்முன் ஒளிசெயும் ஒளியினை
தருமறை பதமொடு சடைஅடர் சடையினை

*தாழிசை*

ஆனிழல் வடுப்படினும் ஆகாயம் வடுப்படுமோ
மாநிழல் இருந்தன்றோ வடுப்பட்ட(து) உன்மேனி

இராமனார் காரணமோ எரிபொன்மலை வளைத்திளைத்தோ
பராபரமாய் வீற்றிருந்தாய் பம்பைநதிக் கரைதனிலே

அணிப்புலவர் பெருமிதமோ அல்லதுநின் தமிழறிவோ
மணிப்பலகைக் கீழ்நின்றாய் மறைகிடந்து முறையிடவே

அச்சமற்ற விடமன்றோ அமுதாய்ப்பின் அமரருக்(கு)உண்
எச்சிலிட்ட(து) அல்லவோ வேடனெச்சில் விரும்பியதே

செம்பூத மாகியுனைச் சேவிப்ப(து) அருமறையே
ஐம்பூதந் திருமேனி ஆரோஉன் அளவறிவார்

*அம்போதரங்கம்*

தேமாத்தூர் பொருந்தினை
தீயாத்தூர் முனிந்தனை
ஆனாத்தூர் அடங்கினை
ஆமாத்தூர் அமர்ந்தனை

1 *உலகுயிர்த்தனை*
2 *உலகளித்தனை*
3 *உலகெடுத்தனை*
4 *மலைவளைத்தனை*
5 *கடல்கொளுத்தினை*
6 *மழுவலத்தினை*
7 *மானெடுத்தனை*
8 *மானிடத்தினை*

*எனவாங்கு—(தனிச்சொல்)*

*சுரிதகம்*

ஆமா தையினுறை அழகிய காதநின்
தேமா மலரடி சிந்தைவைத்(து) இறைஞ்சு தூஉம்
எம்பா வங்கெட இடர்கெட இராப்பகல்

பம்பா நதிப்புனல் படிகுதும் யாமே
ஓடினும் ஆடினும் உறங்கினும் விழிப்பினும்
பாடினும் திருப்புகழ் பாடிக்
கூடினும் திருவடி கூட்டுங்கோ எனவே

(குறிப்புரை) பூமேவுமறையோன்சடங்கியற்ற—தாமரைமலரிலுள்ள பிரமன் திருமணச் சடங்குகளைச் செய்ய, மாயன்உதகம்பொழிய—திருமால் தாரைவார்க்க, ஈராறுவிளக்கெறிப்ப-பன்னிரு சூரியர்ஒளிசெய்ய, பாரேழு பாலிகை—ஏழுலகமாகிய முளைப்பாலிகையுள், பல்லுயிரும் அங்குரிப்ப—பலவுயிர்களும் தோன்ற, குலகிரிகால்—அஷ்ட குலபருவதங்களைக் காலாகக்கொண்ட, நெடுங் காவணத்தே—நீண்டபந்தலில், உலகனைத்தும் ஈன்றாளை—உலகிலுள்ள எல்லா உயிர்களையும்அளித்தமலைமகளை, மணஞ்செய்தருளினை-திருமணம்செய்தருளினீர், அப்போது—அந்நாளில், மணக்கோலத்து அபிராமம் கண்டு—திருமணக் கோலத்தின் அழகைக்கண்டு, வானவர்—தேவர்கள், இப்போதும்—இந்தநாளிலும், கண் இமையாது இருந்தனர்—கண்ணை இமையாமல் விழித்திருக்கின்றனர். இது தற்குறிப்பேற்ற அணி.

இருவர்—திருமாலும்பிரமனும், பாதாளம்போயும்—அடியைத்தேடிப்பாதாளம்வரைசென்றும், உயரப்போயும்—முடியைத்தேடிவானளவுசென்றும், அறிந்திலர்—அடியையும் முடியையும் அறிந்தாரல்லர்.

அடிமுடி தேடிய வரலாறு அருணாசலப் புராணத்துட் காண்க.

செங்காட்டங்குடிஅம்மை— சிறுதொண்டநயானார் மனைவி, முடித்தொண்டர்பெருங்கலத்து—அடியாரதுஉண்கலத்தில், பகிர்ந்தகறிஅமுதினை—இட்ட பிள்ளைக்கறிஉணவை, இறைஅழைக்க—இறைவன் (பிள்ளையாக வரும்படி)அழைக்க, இயமபுரம்—இயமனுலகம், என்படும்—என்னவாகும்.

கங்கை ஒரு பாதியும், பார்வதி ஒரு பாதியும், வேதம் ஒரு பாதியும் திருமால் ஒருபாதியும் கொண்டதால் நீ அருவுருவமாயினை துளவோன்—திருமால்.

அராகம்

மிடல்—வலிமை, விடையினை—இடபத்தைஉடையை, கடல்இடர்பட—கடல்வற்றும்படி, ஒருகணை—ஒப்பற்ற கணையைஏவிய(இராமனை)திருமாலை, கணையினை அம்பாகஉடையை, மலரயன்—பிரமன், பலவுயிர்—பல வுயிர்களை, பறையினை—தமருகத்தினைஉடையை (பறை —தமருகம், ஒருவரும்இருவர்—ஒப்பற்றஇருவர் (அரி அயன்), மறைபதம்—வேதத்தின் அடி, சடையினை— சடையைஉடையை.

தாழிசை

ஆல்நீழல்—கல்லாலின்நிழலில், மாநீழல்—மாமரத் தின்நிழலில், உன்மேனிவடுபட்டது—உமதுதிருமேனி யில்வடுவுண்டாயிற்று(தழுவக்குழைந்தது), இராமனார் காரணமோ—இராமன்பூசிப்பதற்கோ, எரிபொன்மலை வளைத்தோ—தீபோன்றமேருமலையைவளைத்த இளைப் புத்தீரவோ, (பம்பை நதிக்கரையில்) பராபாமாய்வீற்றிருந் தாய்—கடவுளாக அமர்ந்தாய், ஐவர்க்கும் வினோதமாய்— பஞ்சபூதங்களுக்கும்விளையாட்டாக, மண் சுமந்தாய்— வைகைநதிமண்ணைச்சுமந்தாய், கங்கைஎன்செயும்— கங்கைஎன்னசெய்வாள், அணிப்புலவர்—சங்கப்புலவர், மணிப்பலகை—சங்கப்பலகை, விடம்—நஞ்சு, அமுதாய் —அமுதமாகி, அமரருக்கு—தேவர்களுக்கு, உன்எச்சில்— நீர்உண்டுமிகுந்தஅமுதை, வேடன் எச்சில்விரும்பியது— வேடன்(கண்ணப்பன்)எச்சிலைவிரும்பிஉண்டது, உனைச் சேவிப்பதுஅருமறையே—உம்மை வழிபடுவது அரிய வேதமே, ஐம்பூதத்திருமேனி—நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐம்பூதங்களாலான உடல்.

அம்போதரங்கம்

தேமாத்தூர்—இனியமாவடிவில், பொருந்தினை—அமர்ந்தாய், தீயாத்து-தீயைஉண்டாக்கி, ஊர்முனிந்தனை—திரிபுரத்தைஅழித்தாய், ஆமாத்தூர்அமர்ந்தனை—திருவாமாத்தூரில்எழுந்தருளினை, உலகுஉயிர்த்தனை—உலகைஉண்டாக்கினாய், உலகுஅளித்தனை—உலகைக் காத்தருளினை, மலைவளைத்தனை—மேருமலையைவில் லாகவளைத்தாய், கடல்கொளுத்தினை—கடலைவற்றச் செய்தாய், கடல்சுவறவேல்விட்ட திருவிளையாடல், மழு—மழுப்படை, மான்—மான்கன்று. மானிடத்தனை—உமையைஇடப்பாகம் உடையை.

எனவாங்கு— (இது தனிச்சொல்)

ஆமாதையின் உறை—திருமாத்தூரில்எழுந்தருளியுள்ள, அழகியநாத—அழகியநாதரே, மலரடி—தாமரைமலர் போன்றஉமது திருவடியை, இறைஞ்சுதூஉம்—வணங்கு கின்றோம், எம்பாவம்கெடஇடர்கெட—எங்கள்பாவமும் துன்பமும் நீங்க, பம்பாநதிபுனல்—பம்பைநதிநீரில், படிகுதும்—மூழ்குவோம், திருப்புகழ்பாடி—உமதுபுகழைப் பாடி, திருவடிகூட்டுங்கோஎன—உமதுதிருவடியில்சேர்த் தருள் தலைவனே என்று. 1

நேரிசைவெண்பா

2 எனையளிக்கும் ஆமாதை ஈசர்க்(கு) அனங்கா
உனைஅழிக்கும் வாள்நயனம் ஒன்று— பனியின்
செருவழிக்கும் வாள்நயனம் ஒன்றுசேர் மாதர்
உருவழிக்கும் வாள்நயனம் ஒன்று

(குறிப்புரை) வலக்கண்சூரியன்—இடக்கண்-சந்திரன் நெற்றிக்கண்—அக்கினி, அனங்கா—மன்மதனே, ஆமாதை ஈசர்க்கு—திருவாமாத்தூர் இறைவருக்கு, உனை அழிக்கும் வாள்நயனம்ஒன்று—உன்னைஅழிக்கின்ற ஒளிபொருந்திய கண் ஒன்று, மாதர்உருஅழிக்கும்—மகளிர் உருவை அழிக்

கின்ற, நெற்றிக்கண் மன்மதனை அழிக்கும், வலக்கண் பனியின் செருக்கை அழிக்கும் இடக்கண் மகளிர் அழகை அழிக்கும் என்க. நயனம்—கண் 2

கட்டளைக்கலித்துறை

ஒன்றா யிரண்டுரு வாயுயர் மூவர்க்கும் உற்பத்தியாய்க்
குன்றாத மாதைப் பரஞ்சுட ரேகொண்ட தண்டமிழ்நூல்
நன்றாக வோவெனின் நின்றுரை யாப்புன்சொல் நன்மையென்றால்
பொன்றா எருக்கணிந் தாயது போலுமென் புன்சொலுமே

(குறிப்புரை) ஒன்றாய், ஒப்பற்றவராய், இரண்டுருவாய்—மாதொருபாகர்வடிவாய், மூவர்—பிரமன், விஷ்ணு, உருத்திரன், ஆமாத்தூர்பரஞ்சுடரே—திருவாமாத்தூர் சோதியே, பொன்றா—கெடாத, எருக்கு—எருக்கமலர், அதுபோலும்—அதுபோலவே, என்புன்சொலும், எருக்கமலர்போல என்புன்சொல்லும், உமக்கு இன்பந்தரும் என்க. 3

கலிவிருத்தம்

4 சொல்லாடிய வேதங்கள் துதிக்கும்பல பூதம்
எல்லாமுறை பலவண்டமும் இடுநூபுர அடியார்
அல்லார்பொழில் ஆமாதையில் ஐயன்தனி உறையும்
கல்லால்நிழல் எங்கேஅது கண்டார்சிலர் உண்டோ

(குறிப்புரை) வேதங்கள் துதிக்கும்-வேதங்கள்போற்றுகின்ற, பூதம்எல்லாம்முறை—பூதங்கள்யாவும் முறையிடுகின்ற, நூபுரஅடி—சிலம்பணிந்ததிருவடி, அல்லார்பொழில்—இருள் நிறைந்த அடர்ந்தசோலை, ஆமாதையில் ஐயன்—ஆமாத்தூர்அழகியநாதர்உறையும், கல்லால்நிழல்எங்கே—எழுந்தருளியுள்ள கல்லால மரநிழல் எங்குளது, அதுகண்டார்சிலர்உண்டு—அதனைக்கண்டவர் சிலர் உண்டு (சனகாதி முனிவர்) ஓ—அசை. 4

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

5 உண்டிலம் துவர்வாய் உற்றிலம் திரள்தோள்
உறவுயிர்த் திலமால் ஓதியின் மணமும்
கண்டிலம் தமியேம் கலவியின் சமயம்
கனிவழங் குவதும் கனவிலும் கேளோம்
வண்டினம் புரளும் கொன்றையந் தொடையார்
மங்கைபங் குடையார் மாதையம் பதியில்
அண்டர்பைந் தொடிபால் என்பெறுங் கொடியேம்
அறிவில்நெஞ் சகமே ஐம்புலன் களுமே

(குறிப்புரை) இப்பாடல் தலைவியைப் புணர்ந்த தலைமகன் புணர்ச்சியால் வந்த வேட்கை மிகுதியால் கூறியது.

கொன்றையம்தொடையார்—கொன்றை மாலையை அணிந்தவர், மங்கைபங்குடையார்— மாதொருபாகர், மாதையம்பதியில்—ஆமாத்தூரில், அண்டர்பைந்தொடி பால்—தெய்வமகளிடம், துவர்வாய்உண்டிலம்—சிவந்த வாய்நீர் உண்ணவில்லை, உற்றிலம்திரள்தோள்—திரண்ட தோள்களைத்தழுவவில்லை, ஓதியின்மணம்உயிர்த்திலம் —கூந்தலின் நறுமணத்தை நுகரவில்லை, அறிவில் நெஞ்சகமே—அறிவில்லாதநெஞ்சமே, ஐம்புலன்களும் என்பெறும்—ஐம்புலன்களும்என்னபயனை அடைந்தன.

பாலொடு தேன்கலந்தற்றே பணிமொழி,
வாலெயி றூறிய நீர் குறள் (1121)

கண்டுகேட்(டு) உண்டுயிர்த்(து) உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள (குறள் 1101)

என்ற குறட்பாக்களின் கருத்தை இப்பாடல் விளக்கு கின்றது. 5

கட்டளைக்கலித்துறை

6 புலம்போல் நெறிசெலும் மீகாம னால்ஐம் பொறிகலங்கிக்
கலம்போல் உடைந்துமுன் கங்குரம் சாய்ந்திடக் காய்ந்தமழு

வலம்போது மாதையைப் பாலித்த நாள்வந்து மாணிக்கப்பூஞ்
சிலம்போடு சேர்த்தனை யோகரை சாரத் திருக்கண்வைத்தே

(குறிப்புரை) புலம்போல்—மனம்போனபோக்கில், மீகாமன்-கப்பலோட்டுபவன்(மாலுமி), கலம்—மரக்கலம், நங்குரம்—மரக்கலம்நிறுத்தப்பயன்படும்கருவி, மாதை—ஆமாத்தூர், பாலித்தநாள்—காத்தருளியநாளில், திருக்கண்வைத்து—கருணைகூர்ந்து, கரைசார—நாங்கள் ஈடேற, சிலம்போடுசேர்த்தனை—சிலம்பணிந்ததிருவடியில் சேர்த்தருளினை. 6

கோவை. கவியரசு. வித்வான். திரு. கு. நடேசக் கவுண்டர் அவர்கள் இப்பாடலின் இறுதி இரண்டடிகள் ஏடு பெயர்த்து எழுதியவரால் பிழை நேர்ந்திருக்குமோ என ஐயுறுகின்றார். அவர் கருத்துப்படி

வலம்போது மாதையப் பாஅந்த நாள்வந்து மாணிக்கப்பூஞ்
சிலம்போடு சேர்க்குதி யோகரை சாரத் திருக்கண்வைத்தே

என இருந்தால் பொருள் சிறக்கும் என்கிறார்.

புயவகுப்பு ஆசிரியச்சந்தவிருத்தம்

தனனா தாத்தா தன தன தானன
தனதன தனனத் தனனத் தனந்தன

7 கடல்வாய் தாக்கா முகடுசுடாஎழு
கறுவிய கரளக் கடுவைக் கவர்ந்தன
கழுநீர் ஆற்றா விழிஉமை யாள்இரு
கனதன முகுளக் கலவிக்(கு) இசைந்தன
கரையார் காட்டார் பழுதுப டாதொரு
கடுபடு வலையக் கலையைப் புனைந்தன
கனல்வாய் தோற்றா வருமத சீகர
கரமலை உரியைத் தெரியப்பிளந்தன

படர்மா லாற்றா அரிவையர் ஆருயிர்
    பரிவொடு மெலியப் பலியைப் பயின்றன
பறைமோ தாற்றா வயிரவ ராகிய
    பரிபுர அரவப் பவனிக்(கு) அமைந்தன
படிவாய் கேட்டார் செவிகள் பொறாதொரு
    படுகொலை மதலைக் கறியைப் பகிர்ந்தன
பகலே போய்த்தா மதுரையில் நாவலர்
    பலகையின் உறையப் படிபுக்(கு) உயர்ந்தன.

புடைசூழ் மாத்தூர் முதுகண நாதர்கள்
    புரிகுழல் புகலப் புகழிற் பொலிந்தன
பொடிமீ தூட்டா மறையுணர் தாமரை
    புலிபணி பரவப் பொதுவிற் புரிந்தன
புரிநூல் சாற்றா அருவிவி டாதிழி
    புரையறு பவளக் கிரியில் திரண்டன
புரைதீர் வாக்கால் உரைதரு மூவர்கள்
    புதியன கவிதைத் தொடையிற் புணர்ந்தன

செடைகூர் பாட்டால் உயர்மறை வேதியர்
    திருமுக முளரிக்(கு) ஒளியைப் புரிந்தன
திருமால் காற்றாம் ஒருகணையா லெழு
    திரிபுரம் எரியச் சிலைதொட்டு வென்றன
செகமேழ் காப்பார் திருமக னார்தலை
    திருகிய மகரத்(து) அருகிற் கிடந்தன
திருவா மாத்தூர் அழகிய நாயகர்
    செறிதரு தவளப் பவளப் புயங்களே

*குறிப்புரை: கடல்வாய்—கடலில், சுடாஎழு-கொதித்தெழுந்த, கரளக்கடுவை, ஆலகாலவிடத்தை, கழுநீர்—குவளைமலர், கனதனம்—பருத்தநகில்கள், கரையார் நாட்டார்—கரையிலுள்ளநாட்டவர், வலையக்கலை—வலைஞர்க்குரியஉடை, கனல்வாய்த்தோற்றா—யாகத்தில் தோற்றுவித்த, கரமலைஉரி—யாணைத்தோல், கரமலை—யானை.*

2 மால் ஆற்றா—காமமயக்கத்தைத்தாங்கமுடியாத, அரிவையர்—தாருகவனத்துமுனிவர்பத்தினிமார், பரிபுர அரவம்—சிலம்பொலி. படிலாய்—பூமியில் மதலைக்கறி—பிள்ளைக்கறியை (சிறுத்தொண்டர் வரலாறு) நாவலர்பலகை—சங்கப்பலகை, படிபுக்கு—இறையனாராகப்பூவுலகில்வந்து, உயர்ந்தன-உயர்வுற்றன. புலிபணிபரவ—புலிக்கால்முனிவரும் பதஞ்சலிமுனிவரும்துதிக்க, பொதுவில்—தில்லையம்பலத்தில், புரிந்தன—நடனம்புரிந்தன.

3 புரிநூல்சாற்றா—முப்புரிநூலணிந்து, அருவிஇழி—அருவிநீர்பெருகுகின்ற, பவளக்கிரியின்—பவளமலைபோல, திரண்டன—திரட்சியுற்றன, மூவாகள்—ஞானசம்பந்தர்முதலியமூவரது, கவிதைத்தொடை—தேவாரத்திருப்பாடல்களாகிய மாலை.

4 வேதியர்திருமுகமுளரிக்கு—அந்தணரது முகத்தாமரைக்கு, செகமேழ்காப்பார்—திருமால், மகனார் தலை—பிரமனதுதலையை, திருகிய—திருகிஎடுத்த, தருக்கிற்கிடந்தன—செருக்கினால்இருந்தன, அழகிய நாயகர் பவளப்புயங்கள்—அழகியநாயகரதுபவளம்போன்றபுயங்கள். (தோள்கள்) 7

தலைவன் குறை நயந்துரைத்தல்

கட்டளைக்கலித்துறை

8 புயத்தள வான புயங்கத்த னார்பொற் புயங்கத்தனார்
வயத்தலை மான்மமு வார்மாதை நாதர் மலரடிநேர்
இயத்தமிழ் வல்லிதன் பால்வந்த காலம் எனைவினவ
அயர்த்தன ராயினும் சொல்லும் எல் லீர்களும் அனனங்களே

குறிப்புரை: புயங்கத்தனார்—பாம்பை அணிந்தவர், பொற்புயங்கத்தனார்—அழகிய தோள்களையுடையவர், ஆமாதை-திருவாமாத்தூர், வல்லி—தலைவி, எனைவினவ அயர்த்தனராயினும்—என்னைக் கேட்பதற்குமறந்தாலும், அன்னங்களே—அன்னப்பறவைகளே, எல்லீரும் சொல்லுங்கள்—நீங்கள்யாவரும்கூறுங்கள்

தலைவன் வறும்புனங்கண்டு மறுகல்
அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

9 அனத்தில் திரிவார் காண்பரியார்
ஆமாத் தூரில் அழகியனார்
இனத்தைச் சேரா தவர்போல
என்னெஞ் சுருகு(து) என்செய்கேன்
புனத்திற் காணேன் விளையாடும்
பூந்தண் சுனையின் புறங்காணேன்
வனத்திற் காணேன் வரக்காணேன்
மடமா னெங்கே கடமானே

குறிப்புரை: அனைத்தில்திரிவார்—அன்னவாகன முடையபிரமன், காண்பரியார்-காணமுடியாதவர், இனம்—துணை, புனத்தில்காணேன்—தினைப்புனத்தில்காண வில்லை, சுனை—நீர்ச்சுனை, வனம்—காடு, கடமானே—விளி, மடமான்—இளம்பெண், எங்கே—எங்குள்ளாள் 9

கழிக்கரைப்புலம்பல் கலிநிலைத்துறை

10 மானே கிளியே மயிலே குயிலே வரிவண்டே
கானே சுனையே கழியே வழையே கான்யாறே
ஆனே(று) உடையார் ஆமாத் தூர்சென்(று) அடையார்போல்
ஊனே வருமே உயிரோ எனுமே உய்யாதே

குறிப்புரை: கான்—காடு, கழி—உப்பங்கழி, வழை—சுரபுன்னை, ஆனேறு—இடபம், ஊனேவரும்—தலைவர் வருவார், உய்யாது—தப்பாது, உயிரோஎனும்—உயிர் போன்றதலைவி எங்கேஎன ஏங்குவார் தலைவனும்தலைவியும், உடலும் உயிரும்போன்றவர் என்பதை இப்பாடல் அறிவிக்கின்றது. 10

தலைவி அருந்தவர் வாய்மை வற்புறுத்தல்
கலிநிலைத்துறை

11 உய்யாத விடைகொண்டு தவறாத மொழிதந்(து)
ஒளித்(து) ஏகினும்

பெய்யாத முகில்கொண்டு வந்தார் எமக்கொன்று
பேசா திரார்
மையாடு மொருகண்டர் மகிழ்வாகி வளர்கின்ற
மாமாதை போல்
ஐயாவுன் மொழிகொண்டு மொழியாய மொழியான(து)
அவர்வாய் மையே

*குறிப்புரை: உய்யாதவிடைகொண்டு—உய்தற்கு ஏதுவாகாதவிடைகொண்டு(விடைபெறாமலே) பெய்யாத முகில்-மால்(காமம்), மை—கருமை, கண்டர்—நீலகண்டர், எமக்கு-எம்மிடம், மாதை—ஆமாத்தூர், அவர்வாய்மை—தலைவருடையசொல், மொழியாயமொழியானது—பொய்ம்மொழிஆனது.* 11

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்*

12 வாரண முரிசெய் தாரும் மாதையின் வைகி நஞ்சைப்
பாரணம் பண்ணி னாரும் பாப்பலங் கார னாரும்
நாரணன் தேடி னாரும நான்முகன் தேடி னாரும்
ஆரணம் பாடி னாரும் அழகிய நாத னாரே

*குறிப்புரை: வாரணம்உரிசெய்தார்—யானையை உரித்தவர், நஞ்சைபாரணம்பண்ணினார்—விடத்தைஉண்டருளியவர், பாப்பலங்காரனார்—பாம்பைஅலங்காரமாக அணிந்தவர், பாம்பு—பாப்புஎனவலித்தல்விகாரம்பெற்றது, ஆரணம் பாடினார்—வேதங்களால்புகழப்பெற்றவர், நாரணன்—திருமால், நான்முகன்—பிரமன், அழகிய நாதனாரே—ஆமாத்தூர்அழகியநாதரே.* 12

*தலைவிபுள்ளொடுகிளத்தல்*

*வஞ்சிவிருத்தம்*

13 அழகிய நாயகர் ஆமாதைத்
தழைகெழு சோலைத் தாராவே

பொழிபுய லோ(டு) உவர் போனாரோ
விழியக லாதவர் மீள்வாரோ

குறிப்புரை: ஆமாதை—திருவாமாத்தூர், சோலைத் தாராவே—சோலையிலுள்ளபெருநாரையே, உவர்—(தலைவர்)சுட்டுப்பெயர், விழியகலாதவர்—என்கண்ணை விட்டு நீங்காதவர், பொழிபுயலோடுபோனார்—கார் காலம்நீங்கியதும்பிரிந்துசென்றவர், மீள்வாரோ-விரைவில் மீண்டு வருவாரோ? 13

கட்டளைக்கலித்துறை

14 மீளார் பிறப்பினில் வீழார் நரகினில் வேறொருநூல்
கேளார் உயிர்க்கொரு கேடுசெய் யார்கிளர் தீவினையின்
மூளார் திருநுதல் நீறிக ழார்பின்னை முத்தியல்ல(து)
ஆளார்தென் மாதை அழகிய நாதர் அடியவரே

குறிப்புரை : மாதை—ஆமாத்தூர், நீறு—விபூதி (திருநீறு), அழகியநாதர்அடியவர், நரகில் வீழார், வேறு நூல் கேளார், உயிர்க்குத் தீங்குசெய்யார், தீவினையின் மூளார், திருநீறு இகழார். ஆதலால் முத்தியடைவர். அழகிய நாதர் அடியவர் முத்தியே அடைவர் என்பது கருத்து. 14

பருவங்கண்டு பெருமகள் புலம்பல்

எழுசீர்ச்சந்தவிருத்தம்

தனதான தந்த தனதான தந்த தனதான தந்த தனனா

15 அடியார் பவங்கள் அறநீ றணிந்த அரனார் முடிந்த பரனார்
வடிவாய இந்து முடியார் இருந்த வயல்மாதை தங்கு குயிலே
முடியாத கங்குல் உறவாகி நின்று முதிராத கொண்ட லதிரா
இடியாத கொண்டல் கடுவே தகைத்த(து) இனிவேறு தஞ்ச மிலையே

குறிப்புரை: அடியார்பவங்கள்அற—அடியவர்பிறவிகள்நீங்க, இந்துமுடியார்—பிறைமதியைமுடியில்அணிந்தவர், மாதைதங்குகுயிலே—விளி, முடியாதகங்குல்—நீங்காதஇரவு, முதிராதகொண்டல்—நீரைக்கொள்ளாதமேகம், அதிரா—அதிர்ந்துமுழங்கி, இடியாதகொண்டல்—இடிக்காதமேகம், அதிரா—செய்யாஎன்னும்வாய்பாட்டு வினைஎச்சம், நடுவேதகைந்தது—இடையில் தடுக்கின்றது, இனிவேறுதஞ்சமிலை—இப்போதுஎனக்குவேறுயாரும் ஆதரவுஇல்லை. கார்காலத்தில் வருவதாகக் கூறிச்சென்ற தலைவர் கார்காலம் வந்தும் வரவில்லையே எனத் தலைவி வருந்தியது. 15

தலைவிஆற்றாததன்மைகூறல்

கலித்தாழிசை

16 தஞ்சமில்லவர் ஆவிகோலிய சாபமுழ்கிய சாயகம்
அஞ்சும்வல்லவர் ஆடுபூசலின் அளவுகாண அடுக்குமோ
மஞ்சுபுலலிய மாடமாளிகை மாதைமேவிய நாதனார்
நஞ்சமேஅமு தாகஉண்டருள் நாதனார்நுதல் நயனமே

குறிப்புரை: தஞ்சமில்லவர்ஆவிகோலிய—ஆதரவற்றவர்கள்உயிரைக்கவர, சாபம்முழ்கிய—வில்லில்தொடுத்த, சாயகம்—அம்பு, மஞ்சுபுல்லிய—மேகம்தங்கியுள்ள, மாதை—ஆமாத்தூர், நாதனார்நுதல்நயனம்—இறைவனது நெற்றிக்கண், வல்லவர்ஆடுபூசலின்—வலியமன்மதன் செய்யும்போரில், அளவுகாண அடுக்குமோ—அவன் கொல்லும்அம்பு எய்யும்வரை பொறுத்திருத்தல் தகுமோ, (தகாது) சாபம்—வில்.

மன்மதன்அம்பின்குணம்

நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ
அனைத்துணவும் நீக்கும் அசோகு—வனத்திலுறு

முல்லைக்(கு) இடைகாட்டும் மாதே முழுநீலம்
கொல்லுமதன் அம்பின் குணம்

—இரத்தினச்சுருக்கம்-11 16

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

நயனந காயுதர் அழகிய நாயகர் நதிபொரு மாதையுளார்
பயனுடை மூவர்தம் மனவிய லாகிய பாவகம் ஆரறிவார்
உயர்நெறி வேரற உலகமே லோகமொ(டு) ஒருவெளி ஆய்விடுநாள்
அயன்முடி மாலைகொ(டு) அரிமுடி மாலைகொ(டு)ஆடுவர் பாடுவரே

குறிப்புரை: நயனநகாயுதர்—கண்ணையும்நகத்தை யும்ஆயுதமாகக்கொண்டவர், நயனம்—கண், நெற்றிக் கண்ணால்மன்மதனைஎரித்தார், நகத்தால்பிரமன்தலை யைக்கிள்ளிஎடுத்தார், மாதையுளார்—ஆமாத்தூரில்எழுந் தருளியுள்ளவர், பாவகம்ஆரறிவார்—இயல்பைஅறிபவர் யாவர்? உலகம்மேல்லோகமொடுஒருவெளியாய்விடுநாள்- யுகாந்தகாலத்தில், அயன்முடிஅரிமுடி—பிரமன்தலையை யும்திருமால்தலையையும்மாலையாக அணிந்துகொண்டு, ஆடுவர்பாடுவர்—ஆனந்தக்கூத்தாடிக்கொண்டு பாடுவார்.

மன்மதனை எரிக்க நெற்றிக்கண்ணையும் பிரமன்தலை கொய்யக் கைந்நகத்தையும் பயன்படுத்தினார் என்பது புராண வரலாறு. 17

மெய்தொட்டுப்பயிறல்

வஞ்சிவிருத்தம்

18 பாடுவை ஆடுவை பணியோதிக்
காடிடை மூழ்குவை களிவண்டே
ஆடக வில்லிதன் ஆமாதைப்
பீடுடை மானிடை பிழைகாணே

குறிப்புரை: தலைமகளின் கூந்தலில் மொய்க்கும் வண்டுகளை விரட்டுவதுபோலத் தலைமகன் தலைவியை நெருங்கிப் பழகுதல்.

களிவண்டே—களிப்பையுடையவண்டே, ஓதிக் காடிடைமூழ்குவை—கூந்தலாகியகாட்டில்நுழைந்து மகிழ்வாய், ஆடகவில்லி—பொன்மலையைவில்லாகஉடையவர், பீடுடைமான்—பெருமைமிக்கதலைவியின், இடைபிழை காண்—இடைக்குநேரும் இடையூற்றைக் காண்பாயாக, நீங்கள் கூட்டமாக அமர்ந்தால் அவள் நுண்ணிய இடை முறியும் என்பது கருத்து. 18

தலைவன் பிரிவு பாங்கி அறிந்து தன்மனத்து அழுங்கல்

எழுசீர்ச்சந்தவிருத்தம்

19 பிழைத்த புரங்கள் நெருப்பெழ நின்றவர்
பெற்றவ ரன்பொடு பேசாதே
அழைத்து விருந்து சமைத்த உடம்பை
அழைத்தவர் தங்கிய ஆமாதைக்
கழைக்குள மறிந்து குழைக்குள அடர்ந்து
கறுத்து மடங்கிரு கண்ணாறு
செழித்து வளர்ந்து சுழித்தெழும் நண்பர்
செலுத்துவர் இனறுயர் திண்தேரே

குறிப்புரை: புரங்கள்நெருப்பெழ-திரிபுரம்எரியும்படி, சமைத்தஉடம்பைஅழைத்தவர்—கறிசமைத்தசீராளன் உடம்பைப்பிள்ளையாகவரச்செய்தவர், கழை—மூங்கில் (புருவம்) குழை—காதணி, கண்ஆறு—கண்களாகியஆறு, சுழித்தெழும்—நீர்சுழன்றுஎழுகின்றது, நண்பர்திண்தேர் செலுத்துவர்-தலைவர்வலியதேரைச்செலுத்திச் செல்வார். (என்செய்வது) 19

தலைவி கார்காலங்கண்டுஇரங்கல்

கலிவிருத்தம்

20 தேர்வந்தமை கண்டீர்எழு திரைவாரி, முழங்கிக்
கார்வந்தமை கண்டீர்கிலை கண்டீர்வரி வண்டீர்
வார்செஞ்சடை முடியார்உறை மாமாதை மருங்கே
ஆர்வந்தென் அரும்பாவிதன் அளவேஇர(வு) அளவே

குறிப்புரை : வரிவண்டீர்—கீற்றையுடையவளையணிந்ததோழியரே, வரிப்பாட்டிசைக்கும்வண்டுகளே எனவும்கொள்ளலாம், தேர்வந்தமை—மன்மதன்தேராகிய தென்றல்வீசுவதை, எழுதிரை—எழுகின்றஅலை, வாரிமுழங்கி—கடல்போலஆரவாரித்து, கார்—மேகம், வார்—நீண்ட, மாதைமருங்கு—ஆமாத்தூர்அருகே, ஆர்வந்தென்—யார்வந்தாலென்ன, பாவிதன்அளவேஇரவுஅளவு—பாவியாகியநான் இறக்குமளவும் இரவுவிடியாதுபோலும் எழுதிரை—வினைத்தொகை, வாரிமுழங்கி—உவமத்தொகை. 20

எண்சீர்ச்சந்தவிருத்தம்

21 அளவி லாதோ ரறிவி னாலும் அரிய யோகப் பெருமை யாலும்
எளிய ராயும் அரிய ராயும் யாரு மெய்யே சேரு வாரே
ஒளிகொள் மாதைப் பதியி னூடே உருவு தங்கும் அருவு தன்னை
தெளிவி லாதார் அன்ன மாயும் பனறி யாயும் சேர்கி லாரே

குறிப்புரை: அளவிலாஅறிவு—பேரறிவு, யோகப்பெருமை—யோகப்பயிற்சி, மாதைப்பதி—ஆமாத்தூர், அருவுதன்னை—அருவமானஇறைவனை, யாரும்—அன்போடுவழிபடும்யாவரும், சேருவர்—அடைவார்கள், தெளிவிலாதார்—தெளிந்தஅறிவில்லாததிருமாலும் பிரமனும், சேர்கிலார்—அடியையும்முடியையும்தேடியும் அடைந்தாரில்லை, சோதிவடிவானஇறைவனைத்திருமால் பன்றியாகஅடியைத்தேடியும், பிரமன்அன்னமாகமுடியைத் தேடியும்காணமுடியவில்லைஎன்பதுபுராணவரலாறு. 21

கட்டளைக்கலித்துறை

22 சேர்ந்தெமை யாளும் செமுகிலப் பாகமும் செவ்வியருள்
கூர்ந்தெழு பச்சைத் திருமேனி யுங்கொண்டு குன்றமொன்றை
வார்ந்தவில் லாக வளைத்தார் விளங்கிய மாதையிலே
போந்தவர் போந்தில ரேல்என் படாதெழு பூதலமே

குறிப்புரை: வலப்பால்செம்மை—வலப்பக்கம்சிவந்த நிறம், இடப்பால்பசுமை—இடப்பக்கம் பச்சைத்திருமேனி, (இரண்டும்சேர்ந்தமாதொருபாகர்) மாதை—ஆமாத்தூர், போந்தவர்—அம்மையப்பராக எழுந்தருளிய அழகிய நாதர், போந்திலரேல்—வாராதிருந்தால், எழுபூதலம்—ஏழுலகமும், என்படாது—என்னபாடுபடாது, இறைவன் மாதொருபாகராக இருந்து இன்பம் நுகர்வதால்தான் மக்கள் இன்புற்றுவாழ்கிறார்கள் என்பது கருத்து. **22**

கலிவிருத்தம்

*23* பூண்ட மால்பணி யாய்புகழ் மாதையாய்
ஆண்ட நாயக னேஅழ லாடியே
வேண்டு வேனிது வேவிடு காலதூது
ஈண்டு போதருள் வாயிது போதுமே

குறிப்புரை: பூண்டமால்பணியாய்—பெரியபாம்பை அணிந்தவனே, மாதையாய்—ஆமாத்தூர்ஐயனே, காலதூது—எமதூதர் என்னை அணுகும்போது, ஈண்டு போதருள்வாய்—இவ்விடத்து வந்தருள்வீராக, வேண்டு வேனிது—இதனையே நான்வேண்டுகின்றேன். அழலாடி—சர்வசங்காரகாலத்தில் பிரளயாக்கினி மத்தியில் நின்று ஆடுபவனே. **23**

தலைவன்மேகமொடுபுலம்பல்

எழுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

*24* போதி ரண்டுவிழி யான எந்தையிறை
புங்கவன் தெரிவை பங்கினன்
மாதை யம்பதியில் வாரி யுண்டநெடு
வான்வ ளைந்துவரு மஞ்சுகாள்
ஆத ரம்புதிய அம்பு கொண்டெழுதும்
அதனின் மையெழுதி அவரையும்
சோதி கொண்டகருள் ஓலை அங்கைகொடு
சுரர் விடுக்கவரு தூதரே

குறிப்புரை : போதிரண்டுவிழி-பொழுதைக்காட்டும் கதிரவன் மதியம்இரண்டையும் இருவிழிகளாகக்கொண்ட, புங்கவன்—கடவுள், தெரிவைபங்கினன்—மாதொருபாகன், வாரியுண்டு—கடல்நீரைமுகந்து, வருமஞ்சுகாள்—வரும் மேகங்களே, சுருள்ஓலை அங்கைகொடு—ஓலைச்சுருளைக் கையிலேதாங்கி, சுரர்—தேவர், விடுக்கவருதூதரே—அனுப்பவந்ததூதரே, (அகம்+கை = அங்கை), கொடு என்பது கொண்டு என்பதன் இடைக்குறை, பொழுது—போது என வந்துளது. 24

## தலைமகள் செக்கர் கண்டிரங்கல்
### கட்டளைக்கலித்துறை

25 தூது நெருக்கும் இதழியந் தாரினும் தோகையர்தம்
காதல் நெருப்புக்கு நீரல வேகமு காடவிசூழ்
மாதை நகர்ச்சிறந் தாரடி யார்தம் மனத்திருந்தார்
கோதை யிடத்தமர்ந் தார்திரு மேனிக் குடதிசையே

குறிப்புரை: குடதிசையே—மேற்றிசையிலுள்ள செவ்வானமே, இதழியந்தாரினும்—கொன்றைமாலையைவிட, தோகையர் தம்—மகளிரது, காதல் நெருப்புக்கு—காதலாகியதீக்கு, நீரலவே—தணிக்கும்தண்ணீரல்லவே நீ, கமுகாடவி—பாக்குமரக்காடு, கோதை—உமாதேவி, இறைவன் அணிந்துள்ள கொன்றைமாலையே மகளிர்காமத் தீயைத்தணிக்கும்என்பதுகருத்து. செக்கர்—செவ்வானம். 25

## தலைமகள் நிலவுகண்டிரங்கல்
### கலிவிருத்தம்

26 குடக்குமீ(து) ஒன்றுபோய்க் குணக்கெழா(து) அலால்
அடுக்கவான் ஒன்றுவந்(து) அனலை வீசுமால்
மடக்கலா மஞ்ஞைசேர் மாதை காதனார்க்கு
இடக்கணேன் வலக்கணேன் இரண்டும் தீக்கணே

குறிப்புரை: குடக்குமீது ஒன்றுபோய்—மேற்கில் மறைந்தகதிரவன், குணக்கெழாது—கிழக்கில்தோன்ற வில்லை, (இரவுநீட்டிக்கிறது), அடுக்கவான்ஒன்றுவந்து—அடுத்துவந்தசந்திரன், அனலைவீசும்—நெருப்பைக்கக்கு கிறது மாதைநாதனார்க்கு—ஆமாத்தூர் இறைவருக்கு, இடக்கண்வலக்கண், இடக்கண்சந்திரன், வலக்கண் சூரியன், இரண்டும்தீக்கணே—இருகண்களும்தீயைக்கக்கும் கண்களாகவேஉள்ளன. குளிர்ந்த நிலவைப் பொழிய வேண்டிய சந்திரன் காமத்தீயை உண்டாக்கியதால் இரண்டும் தீக்கண்ணே என்றாள் தலைவி. 26

கட்டளைக்கலித்துறை

27 கம்பத் துறையுறை நீலமும் மாதைக் கடிநகர்சூழ்
பம்பைத் துறையில் உறையும் பவளமும் பாற்கடல்சூழ்
செம்பொற் சிகரத்(து) இமையத்தி லேவந்து சேர்ந்திலரேல்
உம்பர்க்கு வாழவிலை யேயிலை யேபுவிக்(கு) உற்பத்தியே

குறிப்புரை: கம்பத்...நீலம்—காஞ்சியில்கம்பைநதித் துறையிலுள்ள அம்மையும், பம்பை...பவளம்-பம்பைநதித் துறையிலுள்ள இறைவனும், பாற்கடல்...சேர்ந்திலரேல்—பாற்கடல்போல்வெண்ணிறமுடையஇமயத்திலேவந்து சேர்ந்திலரானால், உம்பர்க்குவாழ்விலை—தேவர்கட்கு அரம்பையரோடுதுய்க்குப்போகம்இல்லை, புவிக்கு—மண்ணுலகத்தார்க்கு, உற்பத்திஇல்லை—பிறவிஇல்லையாகும். இறைவனும்இறைவியும்கூடிவாழ்வதால்தான்போகமும் படைப்பும்நிகழ்கின்றன. நீலம்,பவளம் ஆகுபெயர்கள் 27

வலைச்சியார்

எழுசீர்ச்சந்தவிருத்தம்

தத்ததன தனதான தத்ததன தனதான
தத்ததன தனதான தனனா

28 பத்திபடு முதுபேய்கள தொக்கதிரு நடனாதர்
பச்சைமயில் இடமான பெருமான்

முத்தரழ கியகாதர் அத்தருறை புகழ்மாதை
முத்துதிரை வலைவாணர் மகளார்
செய்த்ததுவ ரிதழுறும் புத்தஅமு தினைவாரி
நித்தமிவர் கயல்கூறி வரவே
அத்தருல(கு) இதுவாகி இத்தரணி அதுவாகி
அப்பொழுது புவிமாறு படுமே

குறிப்புரை: பேய்கள்தொக்கதிருநடனாதர்—பேய்களோடுநடனமாடுபவர், பச்சைமயில்...பெருமான்—பார்வதியைஇடப்பாகமுடையவர், மாதை—ஆமாத்தூர், வலைவாணர்மகளார்—வலைச்சியார், துவர்இதழ்ஊறு—சிவந்தஇதழிலே(வாயிலே) ஊறுகின்ற, அமுதினைவாரி—அமுதத்தைஎடுத்து, (சொல்லும்ஆம்) கயல்கூறிவர—மீன் விற்றுவந்ததால், அத்தருலகுஇதுவாகி—இதுதேவருலகமாகி, இத்தரணிஅதுவாகி—இம்மண்ணுலகுதேவருலகாகி, புவிமாறுபடும்—உலகம்மாறுபட்டுத்தோன்றும்

வலைச்சியாரது சொல்லமுதை விரும்பித் தேவர் மண்ணுலகு அடைந்தனர். மண்ணுலகத்தவர் வலைச்சியார் அழகை இமையாது நோக்குதலாலும், சொல்லமுதைப்பருகுவதாலும் தேவராயினர். 28

தலைவன்வருந்தியமைபாங்கிதலைவிக்குஉணர்த்தல்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

29 மாறுபட வைகைக்கு மண்சுமந்தார் மாதைவரி வண்டு பாடச்
சோறுவிரி தாழையிடைச் சுரபுன்னை பந்தரெலாம் சுரிசங் கார்ப்பக்
கூறுபடு காலலவன் பேடையுடன் குழையுமணங் குறியா தோங்கி
ஆறுமழை மின்காட்ட அரையிரவில் தடுமாறும் ஆவி தானே

குறிப்புரை: மாறுபட—பிரம்படிபட, மண்சுமந்தார்—வைகைநதி மண்ணைச்சுமந்தவர், சோறுவிரி—இதழ்விரிந்த, தாழையிடை—தாழைமலரில், சங்குஆர்ப்ப—சங்கு ஒலிக்க, அலவன்—நண்டு, பேடையொடுகுழையும்—பெண்

நண்டோடு புணர்ந்துவாழும், குறியாது—தலைவர் இதனைக்கண்டும்மனங்கொள்ளாது. ஆறுமழை—தணிந்த மழை, மின்காட்ட—மின்னல்வீச ஆவி—உயிர் போன்ற தலைவர், தடுமாறும்—தடுமாற்றம்அடைவார். வரைதல் வேட்கையின் தலைவி இவ்வாறு கூறினாள். 29

தலைவிகையாறெய்திடுகிளவி

கலிநிலைத்துறை

30 ஆவிதளர்ந்தாய் மேனிபசந்தாய் அலரானாய்
ஏவிலுழன்றே நாணுமிழந்தாய் என்செய்தாய்
வாவுகடும்போ ரேறுபுரிந்தார் மாமாதைக்
காவலருன்பால் மேவியதுண்டோ கழுநீரே

குறிப்புரை: கழுநீர்—குவளைமலர், ஆவி—உயிர், மேனி—உடம்பு, அலர்—மலர், (பழிச்சொல்) ஏ—அம்பு, வாவு-தாவிச்செல்லும், பசந்தாய்-பசலைநிறம்பெற்றாய், நாண்—நாணம், வில்லின்நாண். கழுநீரே, நீ ஆவி தளர்ந்தாய், மேனிபசந்தாய், அலரானாய், ஏவி லுழன்றாய், நாணுமிழந்தாய், ஆதலால் மாதைக் காவலர் உன்பால் மேவியதுண்டோ என வினவினாள் தலைவி. 30

தலைவியை முன்னிலையாக்கல்

கலிவிருத்தம்

31 கழுநீர் கண்ணாகில் தண்ணளி காணேனோ
பழிநீர் விடமாகிப் பாவிப தைப்பேனோ
வழிநீர் பிறைநாறும் மாமுடி ஆமாதைச்
செழுநீர் பொருபம்பைத் திருநதி குடைவீரே

குறிப்புரை: நதிகுடைவீர்—பம்பைநதியில் மூழ்கு பவரே, கழுநீர்—குவளைமலர் பழி—பழித்துப்பேசும் சொல், வழிநீர்—சடையிலிருந்துவழியும்நீர், பிறைநாறும் —பிறைமதிபோல்ஒளிவிடும், தண்ணளி—கருணை, பதைப்பேன்-வருந்துவேன். இது தலைவியை முன்னிலைப் படுத்திக் கூறியது. 31

### தலைவன்குறிப்புவேறாக நெறிபடக்கூறல்

அறுசீர்ச்சந்தவிருத்தம்

தனதன தான தானன தனதன தான தானன

32 குடியொரு பாதி யானவர் குறைமதி சூடும் வேணியர்
அடியவர் ஏவல் போனவர் அழகிய நாதர் மாதைவாய்
வடகிரி ஏறு மாமயில் வரைமட லூரும ஓதிமம்
நடைபெறு மாத ரோடெழும் நதிபல ஓடும் ஆடுமே

குறிப்புரை: குடி—உமாதேவி, வேணியர்—சடையை யுடையவர், ஏவல்போனவர்—பரவையாரிடம்தூது சென்றவர், மாதைவாய்—ஆமாத்தூரில், வடகிரிஏறு—இமயத்தில்வாழும்சிங்கம்போன்றதலைவர், மாதரோடு—பெண் உருவம்எழுதியபடத்தோடு, நதிபலஓடும்—நீர்த் துறைபலவற்றுக்கும்செல்லுவர், ஆடும்—நதியில் மூழ்கு வராம். தலைவர் மடலேறுவர் என்பது. 32

### தலைவி வலம்புரிகேட்டு உளமகிழ்தல்

கட்டளைக்கலித்துறை

33 ஆடக் கொடியிட்ட தாமரைப் பாதர் அழகர்வைகும்
மாடக் கொடிமதில் மாதையன் னீர்மல ரிற்பிறந்தாள்
தோடுற்ற ஓதி முடித்தசங் கோமலர்த் தோகையுடன
கூடப் பிறந்தசங் கோஇன்று தேர்முன குறித்தசங்கே

குறிப்புரை: குறித்தசங்கு—தேர்முன் கேட்ட சங்கொலி, மலரிற்பிறந்தாள்—இலக்குமிபோன்ற திரௌபதியின், ஓதிமுடித்தசங்கோ—கூந்தலைமுடித்த கண்ண பிரான் கைச்சங்கோ, இலக்குமியுடன் பாற்கடலில் தோன்றிய சங்கோ, எந்தச் சங்கொலி இப்போது கேட்டது. 33

### தலைவன்நீடத்தலைவிவருந்துதல்

எழுசீர்ச்சந்தவிருத்தம்

34 சங்குதுயில் கின்ற வெண்கமல மொன்று
தண்கலை மடந்தை தகுமாதைப்

புங்கவன் விளங்கு பம்பைநதி வந்து
புந்திமகிழ் கின்ற புள்ளீரே
எங்களுயி ரென்றும் உங்களுயி ரென்றும்
இங்கினி இரண்டில் எண்ணாரே
செங்கயல் புரண்டு வெண்தாள பந்தி
சிந்தவும் மறந்து சென்றாரே

*குறிப்புரை: சங்குதுயில்கின்றவெண்கமலம்—வெண் தாமரைமலரில் சங்குஉறங்குவது, தண்கலைமடந்தை ஒன்று—சரசுவதிபோலக்காட்சியளிக்கும், மாதை—ஆமாத் தூர், புந்திமகிழ்கின்ற—உள்ளம்மகிழ்கின்ற, புள்ளீரே—பறவைகளே, செங்கயல்புரண்டு—கயல்போன்ற கண்கள் கலங்கி, தரளபந்திசிந்தவும்—முத்துப்போல் நீர்த்துளிசிந்த வும், மறந்துசென்றாரே—என்னைமறந்துதலைவர்சென்று விட்டாரே, கயல், தரளம்—உவமஆகுபெயர்கள். 34*

*கட்டளைக்கலித்துறை*

35 சென்றார் பரவைதன் பால்இருந் தார்திகழ் மாதையிலே
நின்றார் பணிபவர் நெஞ்சகத் தேசைவ நீறணிவார்
மன்றா டுவரென்பு சூடுவர் ஏற்றின் வருவர்நஞ்சை
ஒன்றாக உண்பர் இவராம் எவரினும் உத்தமரே

*குறிப்புரை: ஆமாத்தூர்அழகியநாதர்பரவையாரிடம் தூதுசென்றார், ஆமாத்தூரிலேஇருந்தார், நினைப்பவர் நெஞ்சில்நின்றார், திருநீறணிவார், அம்பலத்தில் ஆடுவார், எலும்பை ஆபரணமாக அணிவார், இடபத்தின்மேல் ஏறிவருவார், நஞ்சை உண்பார் ஆதலால் இவர் எவரினும் (உத்தமர்) மேலானவர். 35*

*தலைவன்பாங்கனொடுஉற்றதுரைத்தல்*

*எழுசீர்ச்சந்தவிருத்தம்*

36 உத்தமன் முத்தா னத்தில் நடித்தோன்
உற்பவ மற்றோன் உயர்மாதை
வித்தகன் எத்தா னத்திலும் நிற்போன்
வெற்பு நெறிக்கே மீள்வாரே

சித்ர முலைக்கே முத்து நகைக்கே
செற்ற முகிற்கே திருவான
பத்தி விழிக்கே நெய்த்த கவிர்க்கே
பட்ட நுதற்கே பட்டேனே

*குறிப்புரை: முத்தானம் (மூன்று+தானம்) தானம்—இடம், முத்தானத்தில்நடித்தோன்—தில்லை, மதுரை, திருவாலங்காடுஎன்னும் மூன்றிடங்களிலும் நடித்தவன், உற்பவமற்றோன்—பிறப்பில்லாதவன், எத்தானத்திலும் நிற்போன்—எங்கும்நிறைந்தவன், வெற்புநெறி—மலை வழியில், மீள்வார்—மீண்டுவரும்தலைமகளின், சித்ர முலைக்கு—அழகியதனங்களுக்கும், முத்துநகைக்கு-முத்துப் போன்றபற்களுக்கும்முகிற்கு-மேகம்போன்றகூந்தலுக்கும், கவிர்க்கு-முள்முருக்கம் பூப்போன்ற சிவந்தஉதடுகளுக்கும், நுதற்கு—நெற்றிக்கும், பட்டேன்—அகப்பட்டு அறிவிழந்தேன், நெறிக்கு—வழியில், நெறிக்கு—வேற்றுமைமயக்கம்.*

**36**

*எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்*

37 பட்ட யானையின் உரிவை ஆடையும்
பவள மேனியும் தவள தூளமும்
எட்டு வாகுவும் இடுபு யங்கமும்
இனிது கண்டவர்க்கு இமைபொ ருந்துமோ
மட்டு லாவுதண் கொன்றை வேணியார்
மங்கை பங்கனார் மாதை நாதனார்
கட்டு மாசுணப் பாத சூடமும்
கண்ட கண்களே அண்டர்கண்களே

*குறிப்புரை: பட்டயானை—இறந்தயானை, பட்ட மணிந்தயானையும் ஆம், உரிவை—தோல், பவளமேனி—பவளம்போல்சிவந்ததிருமேனி, தவளதூளம்—வெண்ணிற விபூதி, எட்டுவாகு—எட்டுத்தோள்கள், புயங்கம்—பாம்பு, இனிதுகண்டவர்க்கு— இனிமையாகப்பார்த்தவர்களுக்கு, இமைபொருந்துமோ—உறக்கம்வருமோ? (வாராது) மட்டு-தேன், கொன்றைவேணியார்—கொன்றைமாலையணிந்த*

சடையையுடையவர், மாசுணம்—பாம்பு, பாதகூடம்—திரு வடியும் திருமுடியும், கண்டகண்கள்—தரிசித்தகண்கள், அண்டர்கண்கள்—தேவர்கண்களுக்கு ஒப்பாகும், எப்போதும் விழித்திருக்கும் எனவும் கொள்ளலாம். 37

காமமிக்கசழிபடர்கிளவி

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

38 கண்ண னார்தே(டு) அண்ண லார்எம்
கண்ணி லுள்ளார் மண்ணி லுள்ளார்
உண்ணி லாதார் மாதை மூதூர்
ஓதி மங்காள் சாத கங்காள்
வண்ண நீல வாவி தோறும்
மலையு மாரங் கடலு மாரம்
தண்ணி லாவே வெண்ணி லாவே
தனியி ராகவே இனியி ராவே

குறிப்புரை: கண்ணனார்தேடுஅண்ணலார்-திருமால் தேடும்பெருமையுடையவர், மண்ணில்—மண்ணுலகில், உள்ளார்உள்—நினையாதவர்உள்ளத்தில், நிலாதார்—நில்லாதவர், (உள்+நிலாதார் = உண்ணிலாதார்). ஓதி மங்காள்—அன்னப்பறவைகளே, சாதகம்—ஒருவகைப்புள், வாவி-குளம், நீலவாவி-நீலோற்பனமலர்நிறைந்ததடாகம், மலையுமாரம்—மலையில்தோன்றியசந்தனமும், கடலு மாரம்—கடலில்எடுத்தமுத்தும், தண்இலாவே—குளிர்ச்சி இல்லையாயின, தண்நிலாவே-குளிர்ந்தசந்திரனோஎனில், தனிஇரா-தனித்தில்லாமல்ஒன்றுகூடிவருத்துகின்றது. 38

தலைவன் தலைவியைப் புகழ்தல்

நேரிசைவெண்பா

39 இருந்தவிட மெல்லாம் இளநீர் தருவார்
அருந்தும் அமுதளிப்பா ரானார் பரந்தபுனல்
ஆமாதை ஐயரிடத்(து) அம்மைஅறச் சாலையின்பம்
வாயா புகுந்தனவோ வந்து

குறிப்புரை: இருந்தஇடம்எல்லாம்—தனித்திருக்கும் இடங்களில், இளநீர் தருவார்-பருத்தநகில்களை அளிப்பார். அமுதளிப்பார்—வாயமுதைத்தருவார், அறச்சாலை இன்பம்—காஞ்சிமாநகரின் அறம்வளர்த்தஉமாதேவியின் அறச்சாலையின்பம், வாயாபுகுந்தனவோ—வாய்ப்புடைய தாக வந்துசேர்ந்தனவோ, தலைவி தாகந்தணியஇளநீர் தருவார், அமுதளிப்பார். அறச்சாலைஇன்பம்தலைவி வழியாகவந்ததுஎன்பதும்கொள்க.

''பாலொடு தேன்கலந்தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்'' என்ற குறட்பாவின் கருத்து இங்கே நினைவு கூறத்தக்கது 39

தலைவி கலவிநலம் நினைந்துவருந்துதல்
கட்டளைக்கலித்துறை

40 வந்திப் பவர்தம் மனக்கோயில் கொண்டவர் மாதையுள்ளார்
கந்தர்ப் பனைவென்ற கண்ணுத லார்கயி லைக்கருகே
இந்தச் சுனைமருங் கேஅன்பர் வாழ்வித்த இன்பமெல்லாம்
சிந்திக் கினும்கொண்டல் காள்அண்டர் வானமும் தீப்படுமே

குறிப்புரை: கொண்டல்காள்—மேகங்களே, கயிலைக் கருகே—கயிலைமலைக்கு அருகில், சுனைமருங்கு—சுனை யின்பக்கம், அன்பர்...இன்பம்—தலைவர் அளித்தஇன்பம், சிந்திக்கினும்—நினைத்தாலும், வானமும்தீப்படும்— வானுலக(சுவர்க்க)இன்பமும்வெறுப்பைத்தரும். தலைவர் தந்த இன்பம் சுவர்க்க இன்பத்தினும் மேலாயிருந்தது என்பது கருத்து. 40

தலைவிகையாறெய்திடுகிளவி
எழுசீர்ச்சந்தவிருத்தம்

41 தனதன தனந்த தனதன தனந்த
தனதன தனந்த தானானா

படமுது புயங்கள் உடல்மிசை நடஞ்செய்
பதயுக சுயம்பு பயில்மாதை

புடைபெரு குபம்பை நதிவளை சொரிந்த
புதுமணல் விழைந்த போதாவே
இடைய னெறிகின்ற மரமென இருந்த
எமதள வுநொந்து பாராயே
தடமலி குடம்பை மலரணை புகுந்து
தமபெடை மணந்த தாராவே

*குறிப்புரை: உடல்மிசை—உடலின்மேல், முதுபுயங்கன் நடஞ்செய்—பெரியபாம்புகளை அணிந்து நடனமாடுகின்ற, சுயம்பு—தானேதோன்றிய இறைவன், மாதை—ஆமாத் தூர், பம்பை—பம்பைநதியில், வளைசொரிந்த—சங்குகள் ஈன்ற, புதுமணல்—முத்துக்கள், தடமலிகுடம்பை—இட மகன்றகூட்டில், தமபெடைமணந்ததாராவே—தம்பெடை யோடுமகிழ்ந்திருக்கும்பெருநாரையே, எமதளவுபாராய்— எம்வருத்தத்தின்அளவைக்காண்பாய், இடையனெறிகின்ற மரம்என்றஉவமை, அம்மரம் தளிர்க்கவும்முடியாமல், முழுதும் உலர்ந்தும் போகாமல் இருப்பது போல நான் தலைவன் பிரிவால் வாழவும் முடியாமல், சாவவும் முடியாமல் இருக்கின்றேன் என்பதை விளக்கியது.* **41**

*கட்டளைக்கலித்துறை*

**42** தாரமன் ஆவுடை யார்மாதை மேவிய சங்கரனார்
பேரொளி மேனி பவளமென் பார்எமைப் பேணுமடி
நாரண னார்அறி யார்அறி யார்முடி நான்முகனார்
ஆரறி வார்பின்னை இன்னமும் தேடும் அருமறையே

*குறிப்புரை: தாரமன்ஆவுடையார்-உமையைத்தம்திரு மேனியில்நிலையாகஉடையவர், மாதைமேவிய—ஆமாத் தூரில்எழுந்தருளியுள்ள, பேரொளிமேனி—மிக்கஒளியை யுடையதிருமேனி, பேணும்அடி—எம்மைப்பாதுகாக்கும் திருவடியை. நாரணனார்அறியார்—திருமால்அறிய வில்லை. முடிநான்முகனார்அறியார்—திருமுடியைப் பிரமன்அறியவில்லை. (பின்னைஆரறிவார்—வேறுயார் அறிவார்கள்), அருமறைஇன்னமும்தேடும்—அரியவேதங் கள்இன்னமும்தேடுகின்றன. ஏ-அசை.* **42**

எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

43 அருமறைகட்(கு) எட்டாத ஆதி யார்கம்
ஐயனார் ஆமாத்தூர் அழக னார்தம்
திருவடித்தா மரைமலர்கள் சிவக்க ஆடும்
தித்தித்த கூத்திங்கே தில்லை இங்கே
விரிசடைசேர் பழமுனிகாள் ஓடி வாரீர்
வியாதனார் மதுச்சுனையின் மிதிக்கின் றீரோ
இருதலைக்கொள் ளியைக்கொணடே சுள்ளென் றெம்மை
இட்டவா பாவமெலாங் கெட்ட வாவே!

குறிப்புரை: அருமறைகட்குஎட்டாத—அரியவேதங்களும் எட்டமுடியாத, அழகனார்—அழகியநாதரது, தித்தித்தகூத்து—இனியநடனம், தில்லைஇங்கே—தில்லைப் பதியும்இங்கேஉளது, பழமுனிகாள்—பழையமுனிவர்களே, மதுச்சுனை—இன்பச்சுனை, இருதலைக்கொள்ளி—இரு பக்கமும்நெருப்புள்ளகொள்ளி, பாவமெலாம்கெட்டவா—பாவங்கள்யாவும்நீங்கின, திருவடித்தாமரை—உருவகம், சிவக்க ஆடும் கூத்து—பாதங்கள்சிவக்கும்படிஆடுகின்ற நடனம், தில்லை இங்கே, தில்லைநடனமும்இங்கேகாணலாம், ஆதலால்முனிவர்களேஓடிவாருங்கள் ஏ—அசை.
43

தலைமகன் இறைமகள்திறம்நோக்கிஅழுங்கல்

44 கெட்டோர் உறவு கிளையினும் இல்லை கிளையுருவச்
சுட்டோர் உறவுபின சொல்லவுண் டோசுரும் போடரும்பி
மட்டோ(டு) அவிழ்ந்த இதழியந் தாரையர் மாதைசுற்றும்
நெட்டோ டையிலனங் காளுற வாயிங்ஙன் நிற்கின்றதே

குறிப்புரை: சுரும்பு—வண்டு, அரும்பி—மலர்ந்து, மட்டு—தேன், இதழி—கொன்றை, மாதைசுற்றும்—ஆமாத்தூரைச்சூழ்ந்துள்ள, நெட்டோடை—நீண்ட நீரோடை, அனங்காள்—அன்னங்களே, கெட்டோருறவு கிளையினுமில்லை—வறியவரைச் சுற்றத்தாரும் மதியார்,

கிளையுருவ—உறவினர்உள்ளத்தில்பதியும்படி, சுட்டோர்—சுடுசொல்சொன்னவர். அன்னங்களே இங்கு உறவாக நிற்கின்றன. அவற்றால் என்ன பயன்? 44

தலைவி மாலைகண்டிரங்கல்

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

45 நின்றுறங்கு முடையாயர் நிரையழைக்குங் குழலோசை
நெடுங்கொம் போசை
குன்றிருந்த வரிவேங்கை கொலைமறந்து செவிஏற்கும்
குறும்புன் மாலை
மன்றுறைந்த நடநாதர் மதிகரந்தை முடிநாதர்
மாதை மூதூர்
அன்றுசென்ற கடுந்திண்தேர் அமர்புலத்தும் உண்டோகண்(டு)
அழைக்கு மோதை

குறிப்புரை: ஆயர்—இடையர், நிரைஅழைக்கும்—மாலையில்பசுக்கூட்டங்களை அழைக்கின்ற, குழலோசை—வேய்ங் குழலோசை, கொம்புஓசை—கொம்பின் இசை, கொம்பு—ஒருவகை வாத்தியம், வேங்கை—வேங்கைப் புலி, செவிஏற்கும்—தன்காதால்உற்றுக்கேட்கும், புன் மாலை—அந்திநேரம், அமர்புலம்—போர்க்களம், திண் தேர்—வலியதேர், மதிகரந்தை—பிறைமதியும் கரந்தை மாலையும். (அமர் புலத்திலும் மாலைப் பொழுது உண்டோ எனத் தலைவி வினவியது இது. இருந்தால் தலைவர் வாராதிரார் என்பது கருத்து. 45

சம்பிரதம்

கட்டளைக்கலித்துறை

46 மேலம ரேசரில் நாரா யணரில் விதிகளில்தம்
காலமெ லாமுடி யுங்கடை நாளில் களங்கறுக்க
ஆலமெ லாமுண்ட ஆமாதை ஐயர் அடியவர்கைச்
சூலமெ டாதவர் ஆர்பர வாதிகள் சொல்லுமினே

குறிப்புரை: ஊழிக்காலத்தில் சிவன் ஒருவனே அழியாதிருப்பன் மற்றவர் யாவரும் அழிவர் என்பதை இப்பாடல் அறிவிக்கிறது.

அமரேசரில்—இந்திரர்களில், நாராயணரில்—திருமால் களில், விதிகளில்—பிரமர்களில், கடைநாளில்—உலகம் முடியுநாளில், ஆலம்—நஞ்சு, ஆமாதை—ஆமாத்தூர், பரவாதிகள்-பிறசமயத்தவர், சூலமெடாதவர் ஆர்—சூலப் படை தாங்காதவர் யாவர், எவருமில்லை என்பது. 46

மருட்பா

47 சொல்லுமின் ஒன்றுநீர் சொல்லும் சொலிவிடா
நில்லுமின் மானிடங்காள் நில்லுமினோ—தொல்லை
மாதையங் கடவுளும் கடவுள்
சேதிமங் கெழுமு தேவரும் சிலரே

குறிப்புரை: தொல்லை—பழமையான, மாதையங் கடவுளும்கடவுள்-ஆமாத்தூர்ச்கடவுளேகடவுள், சேதிமங் கெழுமு—தேவர்கோயிலை அடைகின்ற, தேவரும்சிலர்—தேவர்களும்சிலரே ஆவர், மானிடங்காள்—மனிதர்களே, சொல்லுமின் ஒன்று—ஒன்றுகூறுங்கள். 47

பொய்பாராட்டல்

நேரிசைஆசிரியப்பா

48 சில்லிதழ் மலிந்த தெய்வத் தாமரை
முட்டாட்(கு) அடியற(வு) உண்டோ? மட்டவிழ்
இதழி யந்தொடை அழகிய காதர்
மாதையங் கிரியின் மானார்
சூதடு கொங்கை சுமந்தநுண் ணுசுப்பே

குறிப்புரை: சில்இதழ்—சில இதழ்களையுடைய, தாமரை முள்தாள்கு—முள்ளையுடைய தாமரைத் தண்டுக்கு, அடி அறவு—அடிஅற்றுப்போதல், மட்டவிழ்-தேன்பொருந்திய, உண்டோ—இல்லையே, அதுபோல, இதழியந்தொடை—கொன்றைமலர்மாலை, மாதை—ஆமாத்தூர், மானார்—

மான்போன்றதலைவியின், நுண்நுசுப்பு-நுண்ணியஇடை, சூதுஅடு—சூதாடு கருவிபோன்ற, கொங்கைசுமந்த—தனங் களைச்சுமந்தது.

மெலிவு ஏற்படுமோ எனின் ஏற்படாது. தாமரைத் தண்டு அதன் அரும்புகளைத் தாங்குவதுபோல நுண்ணிய இடை தலைவியின் தனங்களைச் சுமக்கும் என்பது. 48

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

49 நுண்ணறிவு பறிபோய் நெறிபோய்
நுவல்மதுர மொழிபோய் விழிபோய்
உண்மணிகள் ஒளிபோய் விடுநாள்
உள்ளபடி விடைமேல் வருவீர்
பெண்ணமுதம் இடமா னவரே
பேய்மருவும் இடமா னவரே
வண்ணமதி முடிநா யகரே
மாதையழ கியநா யகரே

குறிப்புரை: பெண்ணமுதம்இடமானவர்—உமை யம்மையை இடப்பாகம் உடையவர், பேய்மருவும் இட மானவர்—பேய்கள்வாழும் சுடுகாட்டை இடமாகவுடை யவர், மாதைஅழகியநாயகரே-ஆமாத்தூரிலுள்ள அழகிய நாதரே, அறிவுபறிபோய்—அறிவுமயங்கி, மதுரமொழி போய்விழிபோய்—இனிய சொல்லும் கண்ணொளியும் நீங்கி, (வருந்தும்போது) விடைமேல்வருவீர்—இடப வாகனத்தில் வந்து ஆட்கொள்வீராக.

அறிவுமயங்கி, நெறிதவறி, பேச்சடங்கி, பார்வை இழந்து வருந்தும்போது வந்து அருள் செய்வீராக. 49

தலைவியைப்புகழ்தல்

வஞ்சித்துறை

50 அழகிய நாயகர்
பழகிய மாதையர்
குழைகெழு சாபமே
மழைகெழு சாபமே

குறிப்புரை: மாதையர்—ஆமாத்தூர் தலைவியினுடைய, குழைகெழுசாபம்—காதளவு நீண்டபுருவம், மழைகெழுசாபம்—இந்திரவில்போன்றதாகும், சாபம்—புருவம், இந்திரவில். 50

மடக்கு

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

51 பண்ணி லறுமிரு தாளரே பாவ மறுமிரு தாளரே
கண்ணி லமர்தரு மானரே களிறு குரகத மானரே
எண்ணில் பலவுக பாலரே யாரும் வெருவுக பாலரே
வண்ணம் அழகிய நாதரே மாதை அழகிய நாதரே

குறிப்புரை: பண்ணிலறும்—இசைக்கு ஏற்பநடிக்கும, இருதாளர்—இருதிருவடிகளையுடையவர், பாவமறும்—பாவங்கள் நீங்கும், இருதாளர்—இருபாதங்களையுடையவர், கண்ணில் அமர்தருமானர்—கண்ணில் பொருந்திய பெருமையுடையவர், களிறு—யானை, குரகதம்—குதிரை, மான்—மான்கன்று இவற்றையுடையவர், களிறு குரகத மானர்—யானையும் குதிரையுமாக இடபத்தையே உடையவர் எனவும் கொள்ளலாம், பலவுகபாலர்—பலயுகங்கள் பரிபாலிப்பவர், யாரும்வெருவு—யாவரும் அஞ்சுகின்ற, கபாலர்—பிரமகபாலத்தையுடையவர், மாதை—ஆமாத்தூர். 51

தலைவன் புள்ளொடுகிளத்தல்

கட்டளைக்கலித்துறை

52 நாதர்க்கு நாதர் அழகிய நாதர் நயந்துறையும்
மாதைப் புரத்து மடஅன்றில் காளுங்கள் வஞ்சிஅஞ்சில்
கோதைக்(கு) அறருசெய் கோதையெல் லாமென் குரகதத்தின்
பாதைப் பெருவழி யாமழி யாவிடம் பார்த்திருமே

குறிப்புரை: நாதர்க்குநாதர்—தேவதேவர், அழகிய நாதர்நயந்துறையும்—அழகியநாதர் விரும்பி எழுந்தருளியுள்ள, மாதைப்புரத்து-ஆமாத்தூரிலுள்ள, அன்றில்காள்-

அன்றிற்பறவைகளே, வஞ்சி—தலைவி, அஞ்சில்கோதை—அழகியசிலவாகியகூந்தல், கோதை—பெண்மயிர், மாலையும் ஆம், கோதையெல்லாம்—மாலைகள் யாவும், பாதைப் பெருவழி—பாதையாகியபெரியவழியை, அழியா இடம் பார்த்திரும்—அழியாதவாறுபார்த்துக்கொள்ளுங்கள், குரகதம்—குதிரை, அன்றில்—பனைமரத்தில்கூடுகட்டி வாழும்ஒருவகைப்பறவை.

அன்றில்களே, வஞ்சிமாநகரிலுள்ள சில சேர மன்னர்க்கு அழகு செய்கின்ற மாலையாகிய பனை எல்லாம் என் மடற் குதிரை செல்லும் பொருட்டு (வெட்டப்படும்) ஆதலால் நீங்கள் பாதுகாவலான இடம் பார்த்து இரும் எனவும் கொள்ளலாம். 52

குறம்

எழுசீர்ச்சந்தவிருத்தம்

53 இருந்த குறிஇனிது எழுந்த கருமம(து)
இயம்பும் ஒருகுறம் என்குறம்
அரந்தை யொடுதவ முயன்ற பொழுதஃ(து)
அறிந்த(து) ஒருகுறம் அம்மைகேள்
மருந்து பிறருண எழுந்த கடுவிடம்
மகிழ்ந்து புதிதுணும் மாதையார்
பொருந்து தொறுமெனை மகிழ்ந்து நினைஇது
பொய்க்கில் மறைமொழி பொய்க்குமே

குறிப்புரை: அரந்தை—மனவூக்கம், மருந்துபிறருண—அமுதம்தேவர்கள்உண்ணும்படி, கடுவிடம்—கடுமையானநஞ்சை, மகிழ்ந்துணும்—விரும்பிஉண்டருளிய, மாதையார்—ஆமாத்தூர்த்தலைவர், பொருந்துதொறும்—உன்னைக்கூடுந்தோறும், எனைநினை—என்னை நினைப்பாயாக, இதுபொய்க்கின்—நான்கூறியஇக்குறி பொய்யானால், மறைமொழி பொய்க்கும். வேத வாக்கியமே பொய்யாகும். ஏ—அசை. 53

## இடைச்சியார்

*எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்*

**54** பொய்யி டைச்சியே மெய்ம்மு டைச்சியே
புதுவ ளைச்சியே பொதுவர் பாவையே
மெய்வி லைத்திறம் விழியு ரைக்குமே
மென்சொல் கொண்டுநீர் விற்க வேண்டுமோ
மையெ றித்தசெங் கந்த ரத்தனார்
மாது பாகனார் மாதை வீதியில்
ஐயர் விற்றுவா என்று விட்டபால்
அமுதி டச்சொனா ரல்ல வல்லியே

*குறிப்புரை: பொய்யிடைச்சி—நுண்ணியஇடையை யுடையவள், மெய்முடைச்சி—உடல்முடைநாற்ற முடையவள், புதுவளைச்சி—புதியவளையலணிந்தவள், பொதுவர்பாவை—இடைக்குலமகள், மெய்விலைத்திறம் —உண்மைவிலையை, உடம்பின்விலையும்ஆம், விழி யுரைக்கும்—கண்களே அறிவிக்கும், மென்சொல்—இனிய சொல், மை—கருமை, கந்தரம்—கழுத்து, மாது—உமை யவள், மாதை—ஆமாத்தூர் (தயிர்விற்கும்இடைச்சியைக் காமுற்ற ஓர் இளைஞன் கூறியது இது)* **54**

## தலைவிசிறைப்புறங்கூறல்

*கட்டளைக்கலித்துறை*

வல்லிக் கிடந்தந்த மாமாதை நாயகர் வண்டின்கையில்
கொல்லைப் பசுங்கொன்றைத் தாருந்தந் தாரில்லை கோலிவைத்த
முல்லைக் கொடியையும் தேமாவை யும்விட்டு மொய்குழலீர்
அல்லிக் கடுக்கையை வைத்தில மேகம் அறிவின்மையே

*குறிப்புரை: மொய்குழலீர்—செறிந்தகூந்தலையுடைய தோழிகளே, மாதைநாயகர்—ஆமாத்தூர்இறைவர், வண்டின் கையில்—வண்டினிடம், தாருந்தந்தாரில்லை— கொன்றைமாலையும்தரவில்லை, முல்லைக்...விட்டு— நாம்வைத்தமுல்லைக்கொடி, மா இவற்றைவிட்டு, கடுக்கை*

வைத்திலம்—கொன்றையைவைக்கவில்லை, நம்அறி வின்மை இது—இதுநமதுஅறியாமையாலாகும்.

நாம் வைத்த முல்லையும் மாவும் மன்மதனுக்கு அம்பாகி நம்மையே வருத்துகின்றன என்பது கருத்து 55

மறம்

கலித்தாழிசை

56 வில்ல டுங்கொம்பு பல்லியங் கொம்பு
வினையடுங் குன்ற வில்லிகாள்
சொல்லழிந் துங்கள் மன்ன வன்முன்பு
சொன்ன சம்பந்தம் என்னடா
வல்லிதன் பங்கன் மைபொ ருங்கண்டன்
மாதை யம்சம்பு மரபிலெம்
இல்லில் வந்தன்று கொண்ட தொன்றன்றி
இல்லை சம்பந்தம் இல்லையே

குறிப்புரை: மறம்—மன்னன்மறக்குலமகளைமணக்க விரும்பிமணம்பேசத்தூதனைஅனுப்ப, மறவன் அவனைச் சினந்து மறுத்துக் கூறுவதாகச் செய்யுள் செய்வது.

குறிப்புரை: குன்றவில்லிகாள்—மலைபோன்றபெரிய வில்லையுடையவர்களே, அடுங்கொம்புவில்—கொல்லுங் கருவிவில், இயம்—வாத்தியம், கொம்பு—ஒருவாத்தியம், உங்கள்மன்னவன்—உங்கள் அரசன், சொல்லழிந்து— சொன்னசொல்லைமீறி, சொன்னசம்பந்தம்என்ன—கூறிய சம்பந்தம்யாது? கண்டன்—நீலகண்டன், சம்பு—சிவ பெருமான், இல்லில்வந்தன்று—எமதுஇல்லத்துக்குவந்து அந்நாளில், கொண்டதொன்றன்றி-முருகனுக்கு வள்ளியை மணந்துகொண்டதல்லாமல், இல்லைசம்பந்தம்—வேறு சம்பந்தம்இல்லையே. 56

தலைவன்நீடத் தலைவி வருந்தல்

கலிவிருத்தம்

57 இல்லை யான இருபிறப் பாளனார
மல்லல் மாதை மகிழ்நர் பிரிந்தநாள்

எல்லை போகியும் ஏகா எனக்கிது
நல்ல காண்இற்றை நாளென்ற யாமமே

குறிப்புரை: இல்லை......பாளனார்—பிறப்புஇறப்பு இல்லாத அழகியநாதரது, மல்லல்மாதை—வளமிக்க ஆமாத்தூர், மகிழ்நர்—தலைவர், எல்லைபோகியும்-கூறிச் சென்றநாள்கடந்தும், ஏகாஎனதுயிர்—என்உயிர்நீங்க வில்லை, இற்றைநாள்—இன்றையநாளின், யாமம்நல்ல—யாமம்எனக்குநல்லதாயிற்று. 57

நேரிசை வெண்பா

58 யாமாழி மாலை இடபமென வெட்கினீர்
ஆமாதை நாதர்க்(கு) அறிவிலிகாள்— தேமாலைப்
போரே(று) எனுநாமம் பொய்யன்றே நாங்களோ
நீரோ மொழிந்தீர் நிலத்து

குறிப்புரை: ஆமாத்தூர் நாதருக்கு—ஆமாத்தூர் அழகியநாதருக்கு, ஆழி மாலை—சக்கராயுதமுடைய திருமாலை, இடபம்என-இடபவாகனம்என்றுகூறுவதற்கு. வெட்கினீர்—வெட்கப்பட்டீர், போரேறெனுநாமம்—அவருக்குப்போரேறுஎன்றபெயர், பொய்யன்றே—பொய் அல்லவே, நிலத்து—இந்நிலவுலகில், நாங்களோநீரோ மொழிந்தீர்—கூறியது நாங்களா நீங்களா கூறுங்கள். (நீங்களே உங்கள் பிரபந்தத்தில் கூறியுள்ளீர்கள் என்றவாறு.) 58

காமமிக்ககழிபடர்கிளவி

சந்தவிருத்தம்

59 நிலவும் பணியும்தேன் நிறைகொன் றையும்ஆறும்
நீரும் பேரென்பும் நிறைசெஞ் சடையார்தம்
அலையும் பணிலம்போய் அணிவீ தியிலேறும்
ஆமா தையில்வாழும் ஆழிப் புள்ளீரே
உலவும் பொங்கழல்போ லியான்உளகொக் தழிகின்றேன்
உறவும் பாராதே இரவுக் தேராதே

**மலையும் கடலும்போய் வைகிப் பெடையோடே**
**வாரும் சிறுகாலே ஊரும் சிறுகாலே**

*குறிப்புரை: நிலவும்பணியும்—பிறைமதியும்பாம்பும், தேனிறைகொன்றை—தேன்பொருந்திய கொன்றைமாலை, ஆரும்நீரும்—ஆத்திமாலையும் கங்கைநீரும், பணிலம்—சங்கு, அணிவீதியிலேறும்—அழகியவீதியில் ஊர்ந்து செல்லும், ஆழிப்புள்ளீரே—சக்கரவாகப்பறவைகளே, அழல்—நெருப்பு, உளம்வெந்துஅழிகின்றேன்—நான்மனம் கொதித்துவருந்துகின்றேன், சிறுகாலேவாரும்—விரைவில் வாருங்கள், ஊரும்சிறுகால்—தென்றற்காற்றுவரும், சிறு கால்—விரைவு, தென்றற்காற்று, ஆழிப்புள்—சக்ரவாளப் பறவை.*

*மாலையால் காமநோய் மலர்ந்து நின்ற தலைவி தனக்கு யாதொருஆதரவும் கூறாமல் தத்தம் பெடையுடன் கூடித் தம் இடம் நோக்கிச் செல்லும் சக்கரவாளப் பறவை களை நோக்கி வருந்தி இவ்வாறு கூறினாள். 59*

*சந்தக்கலிநிலைத்துறை*

**காலத்தின் உயிர்கொள்ள எதிர்கொள்ளும் யமதூதர் கரசூலமும்**
**ஆலித்து வீசும் கொடும்பாச மும்என்னை அமராடுமோ**
**மாலத்தி மெய்க்கொண்டு மகனத்தி கைக்கொண்ட மாமாதையார்**
**சூலத்தை மாறாத பாசத்தினூடே எதிர்த்தாலுமே**

*குறிப்புரை: மால்அத்தி—திருமாலின்எலும்பு, மகன் அத்தி—பிரமகபாலம், மெய்—உடம்பு, யமதூதர்—கால தூதர்கள், ஆலித்து—ஆரவாரத்தோடு, வீசும்கொடும் பாசம்—வீசுகின்ற கொடிய பாசக்கயிறு, அமராடுமோ— என்னைப்போரிட்டுக்கொல்லுமோ? (கொல்லாது) தூதர் கரசூலம்—எமதூதர்கையிலுள்ள சூலப்படை. 60*

*கட்டளைக்கலித்துறை*

*61* **ஆற்குழை யோஅர வோஆயர் பாடி அருமனையோ**
**பாற்கட லோதிங்க ளோதங்கும் ஆவம் பலபலவாம்**

மார்க்கமு மாகிநின் றார்மாதை நாதர் வலங்கொள்பம்பை
மேற்கரை கோயில்கொண் டார்புரம் சீறிய வெங்கணைக்கே

குறிப்புரை: பம்பைமேற்கரை-பம்பைநதியின்மேற்குக் கரையில், கோயில் கொண்டார்—கோயில்கொண்டுள்ள அழகியநாதருக்கு, புரம்—திரிபுரம், வெங்கணைக்கு—அம்பாகஇருந்த (திருமாலுக்கு) ஆவம்—அம்பறாத்தூணி, (பலவாகும்) ஆலிலை, அரவணை, ஆயர்பாடிமனை, பாற்கடல், சந்திர மண்டலம் ஆகியவை திருமால் தங்கும் இடமாகும்.

திரிபுரம் எரித்த நாளில் திருமால் சிவனுக்கு அம்பாக இருந்தார் என்பது புராணவரலாறு. 61

தலைவன்முறுவற்குறிப்புணர்தல்

இன்னிசைவெண்பா

62 வெங்காள முண்டு விபுதர்க்(கு) அமுதீந்த
கங்காளர் மாதைக் கடுக்கைச் சடைமுடியார்
மங்கா விடைமேல் வருவார் திருநகையோ
நங்காவில் வாழ்வார் நகை

குறிப்புரை: வெங்காளம்உண்டு-கொடியவிடத்தைப் பருகி, விபுதர்—தேவர், கங்காளன்—சிவபெருமான், விடை—இடபம், வருவார்திருநகையோ—வரும் சிவனுடைய புன்முறுவலோ, நம்காவில் வாழ்வார்நகை—நமது சோலையிலுள்ள தலைவியின் புன்முறுவல், சிவபெருமான் முறுவல் திரிபுரத்தை அழித்தது, அவ்வாறன்றித் தலைவியின் முறுவல் இன்பந்தரும் என்பது கருத்து. 62

இறைவன்தனக்குக்குறைநேர்பாங்கி

இறையோற்கண்டமைகூறல்

எழுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

63 நகைய முற்கொடு புரமெ ரித்தவர் நாதர் வித்தகர் மாதையார்
இகல்மு கப்படை இறைவர் வெற்பினில் யாமி தற்கினி என்
செய்யகோம்

அகமி ழற்றிய கிளிக ளைத்துவள் அளிக ளைப்பெயர் விளவியே
மகநெ ருப்பெழ நெடிது யிர்ப்பொடு வருவர் இப்பொழு(து)
ஒருவரே

குறிப்புரை: நகைஅழல்-புன்முறுவல், இகல்முகப்படை—சூலப்படை, வெற்பு—மலை, அகமிழற்றியகிளிகளை—இல்லத்தில்பேசிய கிளிகளை, மகநெருப்பெழ—யாகத்தீப் போல் நெருப்புவீச, நெடிதுயிர்ப்பு—பெருமூச்சு, வருவர் ஒருவர்—ஒப்பற்றதலைவர் வருகின்றார், என்செய்கோம்—நாம்இப்போது என்ன செய்வது, அளிகள்—வண்டுகள்.
63

கட்டளைக்கலித்துறை

64 வருக்கைத் தடம்பொழில் மாமாதை ஐயர்க்கு மாசொன்றில்லா
முருக்கொத்த மேனி அழகிய நாதர்க்கு மூச்சரவத்
திருக்கைக கமல அரனார்க்(கு) அரிதிருத தேவியன்றேல்
அரிக்குப் பொருளுரை யீர்கெடு வீரும அறிவின்மையே

குறிப்புரை: வருக்கைத்தடம்பொழில்—பெரியபலா மரச்சோலை, முருக்கொத்தமேனி—சிவந்ததிருமேனி, அரனார்க்கு—சிவபெருமானுக்கு, அரி—திருமால், தேவி யன்றேல்—மனைவியாகஇல்லையென்றால், அரிக்குப் பொருள் உரையீர்—அரிஎன்றசொல்லுக்குப்பொருள் கூறுங்கள், நும்அறிவின்மையால்—உமதுஅறியாமையால், கெடுவீர்—அழிவீர்கள், அரன்—ஆண்பால், அரி—பெண் பால். அரியலால் தேவி இல்லை ஐயன் ஐயாறனார்க்கே, என்பது அப்பர் தேவாரம் 4—40
64

அறுசீர்ச்சந்தவிருத்தம்

65 அறிவழி யுங்குடி கொண்டகோய் அன்னைமருந்தினி லாறுமோ
உறுவது மாதை யிடத்திலே உறைவது பம்பை மருங்கிலே
பறையு மருந்தொரு பாதியும் பச்சை பழுத்த புறத்திலே
கறுவிய தீக்கொடி கண்ணியே கட்டி விடிலது பட்டதே

குறிப்புரை: குடிகொண்டநோய்—எனக்குள்ள காமநோய், அன்னைமருந்தினிலாறுமோ—தாய்கூறும் மருந்தால் தணியுமோ, உறுவதுமாதையிடத்தில்—அடைவதுஆமாத்தூரில், உறைவதுபம்பைமருங்கு—வாழ்வதுபம்பைநதிப்பக்கம், கண்ணி—மாலை, பச்சை பழுத்தபுறம்—பார்வதிதங்கியுள்ளஇடம், தீக்கொடி—கொன்றை, கட்டிவிடில்அதுபட்டது—கொன்றைமாலையைக்கட்டினால்அந்தக்காமநோய்நீங்கும். 65

நேரிசைவெண்பா

66 பம்பா நதிக்கே பழனமா தைப்பதிக்கே
நம்பா இருந்தனையே நாங்காணக்— கொம்பார்
புதுமுகமாய் அன்னமாய்ப் பொன்முடித்தாள் காணார்
சதுர்முகனார் தந்தையார் தாம்

குறிப்புரை: பழனம்—வயல், மாதைப்பதி—ஆமாத்தூர், நம்பா—சிவனே, நாங்காண இருந்தனை—நாங்கள்காணும்படிஇருந்தாய், கொம்பார்—கொம்புகள் பொருந்திய, புதுமுகம்—பன்றி, அன்னம்—அன்னப் பறவை, சதுர்முகனார்தந்தையார்—நான்முகனும்திருமாலும், சதுர்முகனார்தந்தையார்—உம்மைத்தொகை. இறுதி இரண்டடிகள் எதிர் நிரல் நிரை அணி. 66

அம்மானை

இடைமடக்காய் ஈற்றடி மிக்குவந்த கலித்தாழிசை

67 தந்தை பிடித்தரியத் தாயா னவள்சமைக்க
வெந்த விடக்குய்ந்து மீண்டதுகா ணம்மானை
வெந்த விடக்குய்ந்து மீண்டதுவே ஆமாயின்
மைந்தன் உறுப்பு மணத்ததோ அம்மானை
மாதையார் வல்லபத்தால் மணத்ததுகா ணம்மானை

குறிப்புரை: அம்மானை—ஒருவகைமகளிர் விளையாட்டு, தந்தை—சிறுத்தொண்டர், தாய்—வெண்காட்டுநங்கை, வெந்தவிடக்கு—வெந்தஇறைச்சி, உய்ந்து

—பிழைத்து, மைந்தன்உறுப்பு—சிறுத்தொண்டர்மகன் தசை, மணத்ததோ—மணம்வீசியதோ, மாதையார் வல்லபத்தால்—அழகியநாதர்வல்லமையால், மணத்தது—மணம்வீசியது. (சீராளனாக வந்தது) 67

இதுவுமது

68 ஆரத் தடவயல்சூழ் ஆமாதை வாழழகர்
தாரொத்த மேனி தழலொத்த(து) அம்மானை
தாரொத்த மேனி தழலொத்த(து) ஆமாயின்
ஈரக்கங் காநதியாள இருப்பதேன் அம்மானை
ஈரம் பெருநெருப்புக்(கு) இல்லையே அம்மானை

(குறிப்புரை) தடவயல்சூழ்—பெரியவயல்கள்சூழ்ந்த, ஆமாதை—ஆமாத்தூர், தாரொத்தமேனி—கொன்றை மலர்போன்றதிருமேனி, தழலொத்தது—நெருப்புப் போலாயிற்று, ஈரக்கங்காநதி—குளிர்ந்தகங்கைநதி, இருப்பதுஏன்—இருப்பதுஎதற்காக. பெரு நெருப்புக்கு ஈரம் இல்லையே. 68

தலைவன் முன்னிலையாக்கல்

அறுசீர்ச்சந்தவிருத்தம்

அம்மனை பந்தா அரிய கழங்கா அங்கையில் அணையேனோ
மென்மலர் வண்டாய் விரிகழுநீராய் மென்குழல் தோயேனோ
கைம்மறி கொண்டார் கங்கைபு னைந்தார் கந்தரம் வந்தாரும்
மைம்முகில் நஞ்சார் மங்கையொர் பங்கார் மாதையில் வருவீரே

குறிப்புரை: மாதையில் வருவீர்—ஆமாத்தூரில் வருபவரே, மறி—மான்கன்று, கங்கை—கங்கைநதி, கந்தரம்—கழுத்து. மங்கை—உமாதேவி, கழங்கு—ஒருவகை விளையாட்டு, விரிகழுநீர்—மலர்ந்தகுவளைமலர், அகம்+கை=அங்கை.

நான் பந்தாகவும் கழங்காகவும் கையில் அணையேனோ. வண்டாகவும் குவளை மலராகவும் கூந்தலில் படியேனோ எனக்கூறித் தலைவன் தலைவியை முன்னிலைப்படுத்தினான். 69

தலைவர் வறுங்களம்நாடிவருந்தல்
அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்

70 வருங்கட களிற்றினை உரித்தபெரு மான்பழன
மாதைநகர் வந்தபெருமான்
பொரும்புரம் நெருப்பெழ நகைத்தபெரு மான்மதன்
பொடிபட விழித்த பெருமான்
பெருங்கணை அரக்கரை அறுத்தகள மோமணி
பிறங்கிய மணிப்பொடிவிடு
வருங்கடு விடம்புதியது உண்டகள மோதினையொ(டு)
அரியஅவர் சென்றபுலமே

*குறிப்புரை: கடகளிறு—மதயானை, மாதைநகர்—ஆமாத்தூர், புரம்—திரிபுரம், மதன்பொடிபட—மன்மதன் சாம்பலாகும்படி, அரக்கர்—அசுரர், கடுவிடம்—ஆலகால விடம், உண்டகளமோ—உண்டுநிறுத்திய களமோ, தினையொடு—தினைக்கதிரோடு, அரியஅவர்சென்றஇடம் —அரியதலைவிசென்றஇடம், தலைவன் தினைப்புனத்தில் தலைவியைக் காணாது வருந்திக் கூறியது. 70*

குறளடிவஞ்சிப்பா

71 புலங்குலைந்து மலங்குலைய
நவத்துளையங் தவிர்ந்தொரீஇ
அறிவழிந்து நெறிபாழ்பட்டு
ஐமலிந்து மலிந்துகை
மொழித்தமர்கூடி அமராடும்
கழிபிறப்பில் அழிகுவமோ
உழையேந்தி மழஆனே(று)
ஊர்திநீ றணிந்தோன்
தாமரைப் பெருந்தகைத்
திருந்தடி இருந்தநம்
இதயபங் கயத்தே

*குறிப்புரை: புலம்—அறிவு, மலம்—மும்மலம், (ஆணவம், மாயை, காமியம்) ஒரீஇ—நீங்கி, ஐமலிந்து—*

கோழைநிறைந்து, கை—ஒழுக்கம், தமர்கூடி—உறவினர் ஒன்றுசேர்ந்து, அமராடும்—உயிருக்குப்போராடும், கழி பிறப்பில்—மிக்கபிறவித்துன்பத்தில், உழை—மான்கன்று, ஆனேறுஊர்தி—இடபவாகனன், ஆமாதைமுதல்வன்—ஆமாத்தூர்இறைவனது, அடி—திருவடிகள், நம்இதய பங்கயத்தேஇருந்த—நம துஉள்ளத்தாமரையில்இருந்தன, ஆதலால்அழிகுவமோ—அழிவோமோ (அழியோம்) 71

தலைவன்நீடத் தலைவிவருந்தல்

கலிவிருத்தம்

72 தேவிதிரு மார்பிலுறை தேவிமண வாளர்
வாவிபுனல் மாதைதனின் வாவிமலர் காளே
ஆவிசரு(கு) ஆவதுமுன் ஆவிஅருளாதோ
பாவிமன மேபெருகு பாவிநிலை பாரீர்

குறிப்புரை: வாவிமலர்காள்—குளத்தில்மலர்ந்துள்ள மலர்களே, தேவி—முன்னது இலக்குமி, பின்னதுதிருமால், வாவி—தடாகம், ஆவி—உயிர், தலைவர், உயிர்நீங்கு வதற்குமுன்தலைவர்வாராரோ? ஆவிஅருளாதோ—உயிர் போன்றதலைவர்அருள்செய்யாரோ, பாவிமனம்—பாவி யாகியமனம், பாவிநிலை—எனதுநிலையை, (வாவிமலர் களேஎனதுநிலையைப்பாருங்கள்.) 72

கழிக்கரைப் புலம்பல்

எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

73 பாராரும் பிடரும் பகுவாயும் பணமும்
பலபத்திச் சிகையும் குலத்துத்தித் தொகையோ(டு)
ஆராரும் புனைவார் ஆமாதைப் பதிசூழ்
ஆழித்தண் புனலுண்(டு) ஆலிக்குங் காரே
காராரும் பொழிலே பொழில்சூழுங் கழியே
கழியோடுங் கயலே கயலுண்தா ராவே
நீராருந் துறையே துறையாருந் தடமே
நிதமாடுங் குருகே கேயர்செயற்(கு) உருகே

குறிப்புரை: பார்ஆரும்பிடர்—பூமியைத்தாங்கும் பிடரி, பகுவாய்—பிளந்தவாய், பணம்—படம், ஆர்ஆரும் புனைவார்—நிறைந்தஆத்திமாலையும்அணிபவர், தண் புனலே—குளிர்ந்தநீரே, ஆலிக்கும்காரே—ஆரவாரிக்கும் மேகமே, கழி—உப்பங்கழி, தடம்—தடாகம், தாரா, குருகு—பறவை, நேயர்செயற்குஉருகு—அன்பர் (தலைவர்) செயலுக்குஉள்ளம்உருகுவாய். 73

தலைவிகுருகொடுகையாறெய்திடுகிளவி

எழுசீர்ச்சந்தவிருத்தம்

74 தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தானனா.

குரு(கு)அணை குருகொடு குளிர்சிறை சிறையொடு
குளிர்தலை தலையொடு கூடியே
கரு(து)அல(கு) அலகொடு கவரடி அடியொடு
கருவிழி விழியொடு மூழ்கியே
வருகரி யுரியவர் மறைகமழ் அடியினர்
மதிபுனை சடையினர் மாதையார்
ஒருகுரு(கு) எனவுயிர் உடல்பிறி(து) இலைஎன
உறுபிணி அறிகிலர் ஊரரே

குறிப்புரை: குருகுஅணைகுருகு—இளம் பேடையை அணைக்கும் ஆண்குருகு, சிறைசிறையோடு—சிறகுசிற கோடும், தலைதலையொடு—தலைதலையோடு, கூடி— சேர்ந்து, அலகுஅலகொடு, அடிஅடியொடு, விழி விழி யோடுமூழ்கி, ஒருகுருகென—ஒரேபறவைபோல, உயிர் உடல்—உயிரும் உடலும், பிறிதிலைஎன—வேறு இல்லை எனும்படி (இருப்பதை) ஊரர்அறிகிலர்—தலைவர் அறிய வில்லை, (நான் அடையும்மிக்கதுன்பத்தையும் அவர் அறியவில்லை) வருகரியுரியவர்—எதிர்த்துவந்த யானைத் தோலை உரித்துப்போர்த்தவர், மறைகமழ்—வேதம் கமழும். 74

*கலித்தாழிசை*

75 ஊருமாசுணம் ஊர்வபோலுகள் ஒளிசெய்மின்னுடன் ஓடியே
வாரிவாரி விசும்பெலாமிக மஞ்சனஞ்செயும் மஞ்செலாம்
மேருமால்வரை வில்லியார் உயர் வேதமாதையின் நாதனார்
சேரும்வாள்விழி கடவுதேர்அவர் சென்றதேரொடு சென்றதே

குறிப்புரை: மாசுணம்ஊர்வபோல்—பாம்பு ஊர்ந்து செல்வதுபோல. உகள்—திரிகின்ற, வாரிவாரி—கடலை முகந்து, மஞ்சனம்செயும்—நீராட்டும், மஞ்சு—மேகம், வரைவில்லியார்—மேரு மலையை வில்லாகவுடையவர், மாதையின்நாதனார்—ஆமாத்தூர் நாதர், வாள்விழி—ஒளிபொருந்திய கண்ணாகியகதிரவன், கடவுதேர்—செலுத்தும்தேர், அவர்சென்றதேரொடு—தலைவர்சென்ற தேரோடு, சென்றது—நீங்கியது.

(மாலைநேரத்தில் தலைவர் சென்றார் என்று உணர்த்தியவாறு) 75

நேரிசைவெண்பா

76 தேங்கமலம் நாறுவன தீந்துழாய் நாறுவன
ஓங்கிதழி மாலைதனக்(கு) உள்மாலை— பூங்கடுக்கைத்
தெய்வப் பெருமான் திருவாமாத் தூருறையும்
சைவப் பெருமான் சடை

குறிப்புரை: தேங்கமலம்-தேன்பொருந்திய தாமரை, தீந்துழாய்—இனிய துளசி, நாறுவன—நறுமணம்வீசுவன, இதழி—கொன்றை, சைவப்பெருமான்சடை—சிவபெருமான் திருச்சடையில்-ஒருபாதியில் தாமரையும் கொன்றையும், மற்றொருபாதியில் துளசியும் மணம் வீசின, இறந்த பிரமவிஷ்ணுக்கள் தலைகளை மாலையாக அணிந்திருப்பதால் கொன்றையோடு தாமரை மலரும் துளசியும் மணம் வீசின என்றார். 76

கொற்றியார்

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

77 சடைமௌலி முடிவேந்தர் ஆபிசாரத்
தழலின்வரு கரியுரித்த தம்பிரானார்
அடல்மகுடப் புயங்கனார் திருவாமாத்தூர்
ஆதியார் அருவமாய் உருவமானார்
விடைபொருத விடைக்கொம்பைத் தோளிலிட்டார்
மெய்யம்பின் கையம்பை விழியிற் கொண்டார்
உடையமுத லடியளந்த விடங்களெல்லாம்
ஒற்றியா யிடவந்த கொற்றியாரே

குறிப்புரை: கொற்றியார்—வைணவவேடம்பூண்ட பெண், சடைமௌலி—சடைமுடி, ஆபிசாரத்தழல்—அழிவுக்காகச்செய்யும்வேள்வி, கரி—யானை, மகுடப் புயங்கனார்—முடியில்பாம்பைஅணிந்தவர், அருவம்—உருவின்மை, விடைபொருதவிடை—எருதோடுபோர் செய்துவென்றவிடை, மெய்யம்பு—உண்மையானஅன்பை, விழியிற்கொண்டார்—கண்களிற்பெற்றார். (கொற்றியார் அம்பு போன்ற கூர்மையான கண்பார்வையுடையவர்) 77

கலிவிருத்தம்

78 கொற்ற மாதையிற் கொற்றவ னைத்துழாய்ப்
பெற்றம் ஊரும் பிரமக பாலியை
உற்ற மூவர்க்(கு) ஒருவரென் றோதுவார்
மற்ற நாவும் மனங்களும் வாழியே

குறிப்புரை: துழாய்ப்பெற்றம்—துளசிமாலையணிந்த திருமாலாகியஎருது, பிரமகபாலி—பிரமகபாலத்தை உடையசிவன், கொற்றவன்-வெற்றியுடையவன், மூவர்க்கு—அயன், அரி, அரன் என்றமூவருக்கும், ஒருவனென்று ஓதுவார்—ஒப்பற்றதலைவன்என்றுகூறுபவர், நாவும் மனமும்வாழி—நாக்கும்மனமும்வாழ்க. ஏ—அசை. 78

தலைவி நெஞ்சொடு வருந்தல்
கலித்தாழிசை

தான தனந்தன தானதனந்தன
தானதனந்தனனா

79 வாழி தணந்தவர் வாழி கடும்பரி வாழி மறைந்தொளி தேர்
வாழி குறுந்துளி வாழி மதங்கயம் வாழி வளைந்தெழுகார்
காழியில் வந்தவர் பாழிய மண்பகை காதுசெ யும்பெருமான்
ஆழிவிடந்தரர் ஆழி யுகம்பயில் மாதை மருங்கருகே

குறிப்புரை: வாழிதணந்தவர்-பிரிந்துசென்றதலைவர் வாழ்க, கடும்பரி—விரைந்துசெல்லும்குதிரை, குறுந்துளி —சிறுதூரல், மதங்கயம்—மதயானை, காழியில்வந்தவர்— ஞானசம்பந்தர், அமண்பகை—நாவுக்கரசர், பெருமான்— சுந்தரர் ஆகிய மூவர்க்கும அருள்செய்தவர், மாதை— ஆமாத்தூர். 79

தலைவன் தலைவியைமுன்னிலையாக்கல்

கட்டளைக்கலித்துறை

80 அருங்கான கத்தில் திருவோடை உந்திகொண் டங்குநின்றீர்
கருங்காவ ணங்கொண்டு முற்பட்ட வாறென் கடல்கொடுத்த
வருங்காள முண்டபி ரான்திரு மாதையின் வல்வினையேன்
பெருங்காதல் வெள்ளம் தரும்கட லூடு பிறந்தவரே

குறிப்புரை: வல்வினையேன்......பிறந்தவரே—வலிய வினையையுடைய எனதுகாதல்கடலுள்தோன்றியவரே, காளம்—நஞ்சு, மாதை—ஆமாத்தூர், அருங்கானகத்தில்— அரியசுரத்திலே, உந்திஓடை—கொப்பூழாகியஓடை அங்குநின்றீர்—அவ்விடத்திருந்தீர், கருங்காவணம்—கரிய கூந்தல், முற்பட்டவாறென்—முன்னேவந்ததுஎதற்காக, சுரத்தில்உருவெளித்தோற்றம்கண்டதலைவன் இங்குநேரில் கண்டுவினாவியது. 80

### யோகினியார்

#### பன்னிருசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

81 பிறப்பி லாதொரு குழகனார் பேணு மாதையி லழகனார்
பேயொ டாடிய நாதனார் பெற்ற மேறிய பெற்றியார்
இறப்பி லாதொரு தலைமையும் யார்கொ லோசிலர் கூறுவார்
இந்த யோகினி பெருமையும் எங்ங னேபிறர் எண்ணுவார்
அறுத்த தாழ்வட அளவெலாம் அரிய சங்கில் அழுந்தவே
அயில்நி றம்புனை கஞ்சுகம் அமர்ந்த வூதிய மாகவே
வெறுத்த காலர்கள் சூலமே மெய்யில் வைத்தருள் சூலமே
விண்ட கண்டக பாலமே கொண்ட கொண்டக பாலமே

*குறிப்புரை: யோகினி—சத்திஉபாசிகை, மாதையில் அழகனார்—ஆமாத்தூரிலுள்ள அழகியநாதர், குழகனார்-இளமையுடையவர், மாதை—ஆமாத்தூர், பெற்றி—தன்மை, பெற்றம்—எருது—அயில்நிறம்—அழகியநிறம், தாழ்வடம்—மாலை, கஞ்சுகம்—சட்டை, காலர்கள்சூலம்—எமதூதர்சூலப்படை, கண்டகபாலம்—தலைமண்டையோடு, கொண்டகபாலம்—கையிற்கொண்டபிரமகபாலம்* 81

#### கட்டளைக்கலித்துறை

82 கொண்டக பாலம் அயனார் சிரமரிக் கூர்மம்விண்ட
கண்டக பாலம் மணித்திருக் கோலம் சதுர்முகனார்
கண்டக பாலமெல் லாநெற்றி மாலைக்(கு) அழகுசென்னி
அண்டக பாலம் பெறுந்திரு மாதை அழகருக்கே

*குறிப்புரை: கொண்டகபாலம்—கையிற்கொண்ட பிரமகபாலம், சதுர்முகன்—பிரமன், கூர்மம்விண்ட—திருமாலிடமிருந்துநீங்கிய, கண்டகபாலமெல்லாம்—தலைமாலைகள்யாவும், சென்னி—முடி, அண்டகபாலம்—ஆகாயத்தைக்கபாலமாகக்கொண்ட—மாதை அழகர்—ஆமாத்தூர் அழகியநாதர்.* 82

கலித்தாழிசை

83 அழகர் மாதையுளார் அணியும்நா ராயணரே
குழையும்வா னோர்புடைசூழ் குடியும்நா ராயணரே
தழையும்நீ ருர்சடையார் சடையும்நா ராயணரே
விழியின்மேல் ஓர்விழியார் விடையும்நா ராயணரே

குறிப்புரை: அணியும்—அழகும், நாராயணர்—சந்திரன், வானோர்புடைசூழ்—தேவர்கள் பக்கங்களில் சூழவுள்ள, குடி—மனைவி, நாராயணரே—திருமாலே விழியின்மேல்விழியார்—நெற்றிக் கண்ணையுடையவர், நீருர்சடை—நீர்பெருகும்சடை, நாராயணரே—கங்கையே விடையும்நாராயணரே—ஊர்ந்து செல்லும் எருதும் திருமாலே

நாராயணன் என்பது சந்திரன், திருமால், கங்கை ஆகியபொருளைக் குறிக்கும். 83

நேரிசைவெண்பா

84 நாரா யணரறியா நாட்கமலம் நாங்காண
வாரா(து) எதிர்நிற்க வல்லீரோ—சீராரும்
பூமாத்தூர் அத்தரே பொற்பணியூர் அத்தரே
ஆமாத்தூர் அத்தரே அன்று

குறிப்புரை: அன்று-அந்நாளில், நாராயணர்அறியா-திருமால்காணமுடியாத, கமலம்—திருவடித்தாமரை, நாங்காண—நாங்கள் காணும்படி, பொற்பணி—அழகிய பாம்பு, ஆமாத்தூர் அத்தரே—ஆமாத்தூர் தலைவரே, வாராது எதிர் நிற்கவல்லீரோ—எங்கள் எதிரில் வாராதிருக்கவல்லவரோ? வல்லவரல்லர் என்பது கருத்து. 84

கலிவிருத்தம்

85 அன்றுபே ருமுவைமுன் ஆரணம் பாடவே
மன்றுளா டும்பிரான் மாதைவாழ் எம்பிரான்
என்றும்நீ டும்பதம் இடைவிடா(து) ஏத்தினால்
ஒன்றுதான் அணுகுமோ உங்கள்பா வங்களே

குறிப்புரை: உழுவைமுன்—புலிக்கால் முனிவருக்கு முன்னே, ஆரணம்பாட—வேதங்கள் துதிக்க, ஆடும்பிரான் நடனம்புரியும் நடராசர், மாதை...பதம்—ஆமாத்தூரி லுள்ள அழகியநாதர் திருவடிகளை, ஏத்தினால்—துதித் தால், பாவங்கள்—நீங்கள் செய்தபாவங்கள், அணுகுமோ —உங்களை நெருங்குமோ (நெருங்காது) 85

நேரிசைவெண்பா

86 பாவ வினைக்குறும்பு பற்றறுக்கும் கொற்றத்தாள்
தேவர் கபாடந் திறக்குந்தாள்— ஆவிவிடாப்
பூமாத்தூர் ஆற்றுப் பொதிசோறும் தண்ணீரும்
ஆமாத்தூர் அத்தர் அடி

குறிப்புரை: பாவக்குறும்பு—பாவமலை, கொற்றத் தாள்—வெற்றியுடையதிருவடி, தேவர்கதவு-சுவர்க்கத்தின் கதவு, திறக்கும்தாள்—திறக்கும்திருவடி, ஆறு—வழி. (ஆமாத்தூர் அத்தர் திருவடி பாவங்களைப் போக்கும் சுவர்க்க இன்பத்தை அளிக்கும்) 86

காமமிக்ககழிபடர்கிளவி

கலிவிருத்தம்

87 அடியில் இந்துவை அமுது செய்திடாய்
கொடிய தென்றலே கொண்டு வாழ்வியால்
மடிவில் கொன்றையார் மாதை நாதனார்
விடையில் மொய்ம்பனார் வேணி நாகமே

குறிப்புரை: வேணிநாகமே—இறைவன் திருச்சடையி லுள்ள நாகமே, அடியில்இந்துவை—உன் அடிக்கீழுள்ள பிறைச்சந்திரனை, அமுதுசெய்திடாய்—உண்கின்றா யல்லை, தென்றலேகொண்டுவாழ்வி-தென்றற்காற்றையே உண்டுவாழ்கின்றாய், மாதை—ஆமாத்தூர், மொய்ம்பு— வலிமை. நாகம் காற்றை உட்கொண்டு வாழும் இயல் புடையது, "காலேமிகவுண்டுகாலேயிலாதகணபணத்தின் மேலேதுயில்கொள்ளும்மாலோன்" என்பது கந்தரலங்

காரம்—41 கால்—காற்று, தலைவி இறைவன் முடி மீதுள்ள நாகமே நீ சந்திரனை உணவாகக் கொண்டால் என் காமத் தீ தணியும் என்றாள். 87

சித்து

கட்டளைக்கலித்துறை

88 வேணி முடிப்பான் மாதையப் பாலிந்த வேர்கொளுத்தத்
தாணு வெடுத்த தனுவைப்பொன் னாகத் தருங்குளிகை
காணி உருக்க ஒருகோடி செம்பொன கடுகவொரு
பாணி முதற்கொண்டு வாகொண்டு வாசொன்ன பச்சிலையே

குறிப்புரை: சித்து—இரசவாதஞ்செய்யும்சித்தர்தம் திறமையைக்கூறுவது, தாணு—சிவன், தனுவை—வில்லை (மேருமலையை) பொன்னாகத்தரும்குளிகை—பொன்னாக ஆக்கும்குளிகை—இந்தவேர்கொளுத்த— நான்கொடுக்கும் இந்தவேரைக்கொளுத்தினால், காணிஉருக்க-காணி அளவு செம்பைஉருக்கினால், ஒருகோடிசெம்பொன்—ஒருகோடி பொன்னாகும், சொன்னபச்சிலை—நான்கூறிய பச்சிலையை (மூலிகை)பாணிமுதல்கொண்டுவா—ஒருகை நிறைபஎடுத்துவா, வேணி—சடை, கடுக—விரைவாக, பாணி—கை, தாணுஎடுத்ததனு—சிவபிரான்வில்லாக எடுத்தமேருமலையை, பொன்னாகத்தருங்குளிகை— பொன்னாக மாற்றும் குளிகைஎனத் தம்திறமை தோன்றக் கூறினார். 88

இதுவுமது

அறுசீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

89 பச்சிலை பத்திலோர் பத்ம பதத்தொடு
பக்கம் எரித்திடவே
இச்சரி கைப்பொதி கற்ப மிருக்கும்
எனக்கிது வித்தைகளோ
மைச்செறி பொற்பொழில் மாதை யொருத்தர்
மணிப்பவ ளத்துறையும்

**அச்ச விடத்தினை மற்றிரு வர்க்கும்**
**அருத்தி இருத்துவனே**

*குறிப்புரை:* பச்சிலைபத்தில்—செய்பில் இந்தப்பச்சிலை பத்துசேர்த்து, பத்மபதம்—கமலாக்கினியாக, பக்கம் எரித்திட—பதினைந்துநாள்எரிக்கஅதுபொன்னாகமாறும், சரிகைப்பொதி—உடல், கற்பமிருக்கும்—கற்பகாலம்வரை அழியாதிருக்கும். பத்மபதம்—தாமரை அரும்பு அளவு சிறு தீயாக எரித்தல், இதுவித்தைகளோ—இதுமட்டுமாவித்தை —மாதைஒருத்தர்—ஆமாத்தூரர் இறைவர், மணிப்பவளத் துறையும்—நீலகண்டத்திலுள்ள விடத்தினை—நஞ்சை, இருவர்க்கும் அருத்தி—திருமால் பிரமன் இருவருக்கும் உண்பித்து. இருத்துவன்—அவர்களை உயிரோடிருக்கச் செய்வேன், தீபாக்கினி, கமலாக்கினி, காடாக்கினி எனத் தீ மூவகைப்டும் என, யருத்துவநூலார் கூறுவர். பத்ம பதம்—கமலாக்கினி. 89

கட்டளைக்கலித்துறை

90 **இருந்தாய் திருமுடி மேல் வளர்ந் தாயெம் பிரானிடத்தே**
**மருந்தாய் அவதரித் தாயொரு மாதிடம் மாதைஐயர்**
**பிரிந்தார் இருந்தே அரும்பாவி நின்னைப் பிழைத்த துண்டோ**
**குருந்தா யெழுந்தஅன் றேதழ லாய்நின்ற கோள்மதியே**

*குறிப்புரை:* கோள்மதியே-நவகோள்களுள்ஒன்றான சந்திரனே, எழுந்தஅன்றே—நீதோன்றியபொழுதே, தழல் —நெருப்பு, மதி—சந்திரன், நின்னைப்பிழைத்தது உண்டோ—உனக்கு நான்தீங்குசெய்தேனோ, நீ இறைவன் முடிமீதிருந்தாய் அங்கேயேவளர்ந்தாய் அமுதத்தோடும் திருமகளோடும் தோன்றினாய், என்னை வருத்துகின்றாய், இந்தக் குணம் உனக்கு எவ்வாறு உண்டாயிற்று? 90

நேரிசைவெண்பா

91 **கோளரவு கண்டும் குறையாம் பிறையணிந்த**
**காளவிடம் உண்டிருண்ட கண்டரூர்— பாளைகமழ்**

தூரும் பொழிலும் துறையும் துறைவெண்சங்(கு)
ஊரும் திருவாமாத் தூர்

குறிப்புரை: அரவு—பாம்பு, பிறை—பிறைச்சந்திரன், காளவிடம்—ஆலகாலவிடம், தூர்—வேர், பொழில்—சோலை, துறை—நீர்த்துறை, சங்குஊரும்—சங்குகள் ஊர்ந்து செல்லும், இருண்டகண்டர்ஊர்—திருவாமாத்தூர். 91

சலிவிருத்தம்

92 ஆமாத் தூரில் அழகிய நாயகர்
தேமாத் தூரிற் சிறந்தே வருகிலர்
தாமாத் தூரிற் தழுவக் குழையவே
வாம பாகம் இடைவடு வானதே

குறிப்புரை: ஆமாத்தூர் அழகியநாதர் தாம்மாத்தூரில்வருகிலர். தாம்—இறைவன், மாத்தூரில்—மாவடியில், தழுவக்குழைய—அம்மையார் தழுவியதால் மனம் குழைய, வாமபாகம்—இடப்பாகம், வடுவானது—வளைத் தழும்பும் முலைத்தழும்பும் பெற்றது. 92

தலைவன்மேகமொடுசொல்லல்

கட்டளைக்கலிப்பா

93 ஆன கயலிடை மருவு கமலமும்
அஞ்சனக் கமல மளவு கமலமும்
பானல் முடிய அமுத கமலமும்
பரவிய பசலை முகுளித கமலமும்
வானவர் தலைவர் அழகர் மாதைசூழ்
மருவிய கமல மனையில் வளர்வதோர்
தூநகை திருமுன் முகில்கள் செல்லுமே
துரகத இரத வரவு சொல்லுமே

குறிப்புரை: கயல்மருவுகமலம்—கயல்மீன் பொருந்திய தாமரை, பானல்—கருங்குவளை, அஞ்சனக்கமலம்-மகளிர் கண்கள், பசலைமுகுளிதகமலம்—பசலைசூழ்ந்த தனங்கள்,

*கமலமனை—தாமரைவீடு, தூநகை—தூயபற்களை யுடைய தலைவி, முகில்கள்செல்லும்-மேகங்களேசெல்லுங் கள், துரகதஇரதவரவு—குதிரை பூட்டியதேர் வருவதை, சொல்லும்—சொல்லுங்கள், மேகங்களே தேர்வருவதைத் தலைவிக்கு அறிவியுங்கள்* **93**

*தலைவன்உருவெளித்தோற்றம்கண்டுஉளமறுகல்*

*அறுசீர்ச்சந்தவிருத்தம்*

**94** சொல்லுவ போலொரு சொல்லாடீர்
தோய்வது போலிரு தோள்தோயீர்
நல்குவ போலிதழ் நல்கீர்முன்
நகுவது போலொரு நகைதாரீர்
மல்விடை ஊர்பவன் மழுவாளி
மாதையின் வீதியில் வருவிர்நீர்
அல்லகொ லோஅய லாமோநீர்
அருவழி போயின(து) அறியேனே

*குறிப்புரை: மாதையின்வீதியில்வருவீர்—ஆமாத்தூர் வீதியில் வருபவரே, சொல்லாடீர்—என்னோடுபேச வில்லை, தோள்தோயீர்—தோள்களைத்தழுவவில்லை, இதழ்நல்கீர்—வாயமுதம்தரவில்லை, நகைதாரீர்—புன் முறுவல்செய்யவில்லை, வருவீர்நீரல்லகொலோ—வருபவர் நீரல்லவோ, நீர்அருவழிபோனதுஅறியேன்—நீர்சென்ற அரியவழியைநான்அறியவில்லை, விடை—இடபம், மழு வாளி—மழுப்படையுடையவன்* **94**

*காலம்*

*எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்*

**95** அயன்மாத்தூர் அழகரங்கன் அழலாக் காலம்
ஆமாத்தூர் அழகரங்கன் அழலுங் காலம்
மயலாற்றூர் மணியரங்க மாறுங் காலம்
மனமாத்தூர் அணிஅரங்க மாறாக் காலம்
கயலாற்றூர் மணிமுத்தம் கவருங் காலம்
கடலாற்றூர் மணிமுத்தம் கவராக் காலம்

**இயலமாட்டேர் எம்மிறையின் இசைக்குங் காலம்**
**இயல்மாட்டேர் எம்மிறையின் இசையாக் காலம்**

இளவேனிற்காலம்

குறிப்புரை:

1. அயல்மாதூர் அழகர் அரங்கண் அழலாக்காலம்—பக்கங்களிலுள்ள மாஞ்சோலையின் அழகு நெருப்பைச் செய்யாதகாலம்.
2. ஆமாத்தூர்...... அழலுங்காலம் அழகியநாயகர் கண்களாகிய சூரியனும் சந்திரனும் பகலிலும் இரவிலும் அழலுங்காலம்
3. காமநோயை ஆற்றிக்கொண்ட (துணைபிரியாத) காரிகையர்களுடம்பு வெப்பு அடங்குங்காலம்.
4. காதலரைப் பிரிந்த காரிகையார் உடல்வெப்பு தணியாத காலம்.
5. கயல்பொருந்திய ஆற்றில்வந்த முத்தையும் மணியையும் எடுக்குங்காலம்.
6. கடலிலும் ஆற்றிலும் வந்த மணிமுத்துக்களைக் காமமுடையவர் விரும்பாத காலம்.
7. எம்தலைவர் பால் மனத்தைச் செலுத்துங்காலம்.
8. வளை முதலிய அணிகள் கையில்நில்லாதகாலம். 95

ஊசல்

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

96 **காலன்விழும் படியுதைத்த கழலும் காலும்**
**கண்ணனிடு பலிஏற்ற கையும் ஓடும்**
**சாலமதன் படவிழித்த நுதலும் கண்ணும்**
**தடம்புரங்கள் தீமூட்டு தனுவும் தோளும்**
**சேல்கயல்கள் விளையாடும் பம்பை யாறும்**
**செந்தமிழைத் தடுத்தாண்ட தெய்வ நாடும்**
**ஆலமயின்(று) அமு(து)ஈந்த அழகர் சீரும்**
**ஆமாத்தூ ரும்பாடி ஆடீர் ஊசல்**

குறிப்புரை: காலன்—இயமன், கழலும்காலும்—வீரக் கழலணிந்ததிருவடியும், கண்ணன்—திருமால், கையும்ஓடும் —பிரமகபாலத்தை ஏந்தியகையும், மதன்பட—மன்மதன் அழியும்படி, நுதலும்கண்ணும்—நெற்றிக்கண்ணும், புரம் —திரிபுரம், தனு—வில், தெய்வநாடு—கடவுள்நம்பிக்கை யுள்ள தமிழ்நாடு சேல்—ஒருவகைமீன், ஆலம்—நஞ்சு, அழகர் சீரும்பாடி—அழகிய நாதர் பெருமையும்பாடி, ஆடீர் ஊசல்—ஊசலாடுவீராக. 96

மதங்கியார்

அறுசீர்ச்சந்தவிருத்தம்

சதந்தரு வந்தென வண்டெழு மாதவி தாதவிழ் மாதையின்வாய்
கதஞ்செய் புரங்கள் முனிந்த பெருந்தகை கமலப தமபரவா
விதங்கொள நடம்புரி அங்கைச ரந்தொறும் வீழும னங்கசரம்
மதங்கி தருந்தனு மண்டல மெங்கும் மதன்தரு மண்டலமே

குறிப்புரை: மதங்கியார்—இருகைகளிலும்வாளேந்தி வீசிப்பாடிஆடும்மதங்கர்குலப்பெண், சதந்தரு—கற்பக மரம், கதம்—துன்பம், புரங்கள்—முப்புரம், மாதவி—குறுக் கத்தி, பெருந்தகை—அழகியநாதர், கமலபதம் பரவா— தாமரைமலர்போன்ற திருவடிகளைத்துதித்து, விதங் கொள்நடம்புரி—பலவிதநடனம்புரிகின்ற, அனங்கசரம்— மன்மதன்கணை, தனு—உடம்பு, மண்டலமெங்கும்—நாடு முழுதும், மதன்தருமண்டலம்—மன்மதன் அளிக்கும் மணடலம், பரவா—பரவி, பரவா—செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். 97

தழைவிருப்புரைத்தல்

கட்டளைக்கலித்துறை

98 மேதிக் குலஞ்சொரி பால்கயல் மாந்தும் விரைப்பழன
மாதைக் கடவுள் சடாடவி யோமணிப் பேரணியோ
ஆதித் தனிவிழி யோகளை யோசெங்கை அம்பினம்போ
போதுற்ற சேவடி யோஐய நீதந்த பூந்தழையே

குறிப்புரை: ஐய—ஐயனே, நீதந்தபூந்தழை—நீ அளித்ததழையுடை, மேதி—எருமை, சொரிபால்—சிந்துகின்றபாலை, கயல்மாந்தும்—கயல்மீன் உண்ணுகின்ற, பழனம்—வயல், மாதைக்கடவுள்—ஆமாத்தூர்இறைவன், சடாடவி—சடைக்காடு, ஆதி—முதல்வன், தனிவிழி—நெற்றிக்கண், போது—பூக்கும்பருவத்திலுள்ளமலர், நீதந்ததழைதலைவிக்குமகிழ்ச்சியளித்தது, என்றவாறு. 98

எழுசீர்ச்சந்தவிருத்தம்

99 தனதனந் தனந்த தனதனந் தனந்த
தனதனந் தனந்த தானனா

தழையுணர்ந் துணர்ந்து தகவழிந் தழிந்து
தனியுழன் றுழன்று சாயல போய்
வழிமறந்து சென்று விழிகுவிந்து நின்று
மனவிருந் தயின்ற கானலே
அழிவில்மங் கைகொணகர் அரியமங் கைபங்கர்
அழகரன் புகொண்ட மாதையார்
கழிசுரங் கடந்து பழியுடன படர்ந்த
கனகனை புகொண்ட காதலே

குறிப்புரை: மாதையார்—ஆமாத்தூர்த்தலைவர், தகவழிந்து—பெருமைகெட்டு, தனிஉழன்று—தனியே அலைந்து, சாயல்போய்—சாயல்கெட்டு, விழிகுவிந்து—கண்மூடி, மனவிருந்தயின்ற—மனப்பால்குடித்த, கானல்—கானல்நீர், கொணகர்—கணவர், மங்கைபங்கர்—உமையைஇடப்பாகம்உடையவர், கழிசுரம்—நீண்ட பாலைவனம், கனகன்—மன்மதன். 99

பாண்

கொச்சகக்கலிப்பா

100 காட்டகந்தோ றுந்திரிந்து கண்குழிந்து தடுமாறல்
கேட்டிலையோ இலங்கேசன் கீதத்தில் கவர்ந்ததெலாம்
தீட்டியசீ ராமாதைச் சிவலோகன் திருச்செவிகாள்
பாட்டறிவீர் படைவீடு பலிதிரியும் பாண்மகனே

*குறிப்புரை:* பலிதிரியும்பாண்கமனே—பிச்சைஏற்கத் திரிகின்றபாணனே, காடு+அகம்=காட்டகம், இலங் கேசன் கீதத்தில்—இராவணனது இசையிலே, சிவலோகன் திருச்செவி—சிவபெருமான் திருச்செவி (இன்புற்றதை) கேட்டிலையோ—நீ கேட்டதில்லையோ, (இறைவனைப் பாடாமல்) காட்டகந்தோறுந்திரிந்து—காடுகளைக்கடந்து அலைந்து, தடுமாறல்—தடுமாற்றம் அடையாதே. 100

*கலிநிலைத்துறை*

101 மகனுக்கும் மாலுக்கும் முதலான வையங்கள்
பதினா லின்வாய்
அகிலத் தெவ் வுயிருக்கும் உயிரான
ஆமாதை அழகற்குமே
நகமுற்று கடலும் கடைந்தார்கள்
உயர்நஞ்சம் உண்டார்களோ
முகமொக்க அமுதாக உண்டார்கள்
முப்பத்து முத்தேவரே

*குறிப்புரை:* மகன்—பிரமன், மால்—திருமால், வையம்—உலகம், நகம்—மலை, நகமுற்று—மந்தரமலையைக்கொண்டு, நஞ்சம்உண்டார்களோ—கடலில் தோன்றிய நஞ்சை உண்டார்களா—(உண்ணவில்லையே) சிவன்தானே உண்டருளினார், முப்பத்துமுத்தேவர்—முப்பத்துமூன்றுகோடி தேவர்களும் அமுதம் உண்டனர். வையங்கள்—உலகங்கள். 101

திருவாமாத்தூர்க்கலம்பகம் முற்றிற்று.

## திருவாமாத்தூர்க்கலம்பகம்

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி

### செய்யுள் எண்

செய்யுள் முதற் குறிப்பு அகராதி முற்றிற்று

மேற்கோள் நூல்கள் வந்துள்ள இடம்.

---

திருக்குறள் பாடல் 6
" " 39

இரத்தினச்சுருக்கம் 16

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

காஞ்சிபுரம்

# ஏகாம்பரநாதருலா

தெய்வப்புலமை இரட்டைப்புலவர்
அருளிச்செய்தது

## காப்பு

நேரிசைவெண்பா

சாற்றரிய ஆயிரக்கால் மண்டபத்தின் சார்வாக
ஏற்ற முடனே இனிதிருந்து— போற்றும்
விறல்விகட சக்ர விநாயகனை ஏத்தும்
திறல் விகட சக்ரா யுதம்

*குறிப்புரை: சாற்றரிய—சொல்லுதற்கரிய, சார்வாக—அருகில், ஏற்றமுடன்—உயர்ச்சியோடு, திறல்—வலிமை, விகடசக்ரவிநாயகன்—திருவேகம்பத்திலுள்ள விநாயகர் திருநாமம், சக்ராயுதம்—சக்கரப்படை.*

# ஏகாம்பரநாதருலா

## கலிவெண்பா

1 நிலம்போற்றும் பைந்துளப நீலப்பொருப்பும்
பொலம்போற்றும் போதிற் பொருப்பும்—நலம்
போற்றும்

2 மேருப் பொருப்பொருதன் வெள்ளிப்பொருப்பி
லிரண்(டு)
ஆரப் பொருப்புடைய அன்னமுடன்— சேர

3 இருந்து மனமகிழ்வுற்(று) எப்போதும் இன்பம்
பொருந்தி உறைகின்ற போதில்— கரந்தைஇனி(து)

4 ஏந்துமுடி யோனுடனே இன்பநகை யாடிவளைக்
காந்தளிணைக் கொண்டுதிருக் கண்புதைப்ப—வாய்ந்த

5 படியும் விசும்பும் பரிதிமதி காணா(து)
அடையும் மிடையிருளே ஆகி— நெடிதூழிக்

6 காலம் சிறிது பொழுதிற் கழிதலால்
சில முனிவர்க்கும் தேவர்க்கும்— சால

7 மறையவர்க்கும் வேதம் வகுத்ததொழி லெல்லாம்
குறைவுபட்ட(து) என்(று) இறையுட்கொண்டு—
செறியளக

---

குறிப்புரை:

1 நிலம்போற்றும் நீலப்பொருப்பு—மண்ணுலகோர் போற்றுகின்ற நீலமலைபோலும் திருமால். பொலம் போற்றும்போதிற் பொருப்பு—பொன்னுலகோர் போற்று கின்ற பிரமன், பொருப்பு—மலை, பொலம்—பொன. பொன்னென்கிளவி ஈறுகெட முறையின் முன்னர்த் தோன்றும் லகாரமகாரம். செய்யுள் மருங்கின் தொடரிய லான தொல்—புள்ளி. சூ. 357.

8 ஓவியமே நின்னால் உலக நெறிமுறைமை
யாவும் குறைவுபட்ட(து) ஈங்கதற்கு— மேவியநல்

**இறைவன் உமையவளைப் பூசை புரியப் பணித்தல்**

9 வேதாகமத்தில் விதித்தபெரும் பூசைதனைப்
போதார் குழலாய் புரிகென்ன— ஈதெமக்கு
10 வாய்த்த(து) எனவிரும்பி வானோரை நஞ்சுண்டு
காத்த பெருமான் கழலிறைஞ்சி— ஏத்தி
11 மடமாது நின்னை வழிபடுதற்(கு) ஆன
இடமாவ(து) ஏதருள்செய்(க) என்ன—விடையோனும்
12 தென்பால தான திசையில் திரைவீசும்
நன்பாலித் தண்டகநன் நாட்டகத்து— முன்பாக

---

2 இரண்டுஆரப்பொருப்புடையஅன்னமுடன்-முத்து வடம்அணிந்த இருதனங்களையுடைய உமையவளோடு, அன்னம்—உவமஆகுபெயர். 3 கரந்தைஏந்துமுடியோன் —கரந்தைமலர்மாலையணிந்த கயிலாயநாதர்.

4 வளைகாந்தளிணை—வளையலணிந்த காந்தள்மலர் போன்றஇருகைகளாலும், கண்புதைப்ப—இறைவன்திருக் கண்களை மறைக்க. ''கரதலத்தில், அன்று திருவிளையாட் டாடினாள் கண்புதைத்தது'' என்பது திருக்காளத்தி நாதருலா 441—42

. 5 படியும்விசும்பும்—மண்ணுலகும் விண்ணுலகும், பரிதிமதி—சூரியசந்திரர். 6 இறைஉட்கொண்டு— இறைவன்கருதி 7—8 செறியளகஓவியமே—விளி. 9 வேதாகமத்தில்—வேத சாத்திரங்களில், புரிகென்ன—பூசை செய்களென்றுகூறியருள.

10 கழலிறைஞ்சி—இறைவன் திருவடிகளை வணங்கி.

11 மடமாது—உமாதேவி, விடையோனும்—சிவ பெருமானும்.

12 தென்பால், தண்டகநன் நாட்டகத்து—தென் திசையில் தொண்டைநாட்டின்கண்.

13 ஓது திருநகரி ஒரேழி னுஞ்சிறந்த
ஆதி நகர்காஞ்சி அந்நகரில்— போதநலம்

14 மன்னி வளர்வதொரு மாவுண்(டு) அதன் நிழற்கீழ்
கன்னி எமையுனக்குக் காணலாம்— சொன்னபடி

15 ஆகம பூசை புரிய இனி(து) அவ்விடத்துப்
போக எனஅமரர் போற்றிசைப்ப— ஏகிப்

உமாதேவி காஞ்சி நகரை அடைதல்

16 பொருப்பரையன் ஏவலொடு போந்துபல கோடித்
திருத்தகு மாதருடன் சேர— விருப்புடனே

17 தென்திசையில் சென்று திருவாய் மலர்ந்தவுயர்
நன்றுதிகழ் காஞ்சி நகரெய்தி— வென்றியிபம்

18 ஒன்று குறுமுயலுக்(கு) ஓடும் இடம்பார்த்து
நின்றுவிடும் காஞ்சிநிழல்பார்த்துச் சென்றடைந்தோர்

19 தாம்பிறரைக் காணலாம் தம்மையவர் காணாமல்
ஆம்பரிசு நல்கும் அகம்பார்த்துக்— காம்பொன்றில்

---

13 நகரி ஒரேழினும்—முத்திதரும் நகரங்களான, காஞ்சி, காசி, அவந்தி, அயோத்தி, துவாரகை, மதுரை, மாயை என்னும் ஏழுநகரங்கள் உள்ளும். ஆதிநகர் காஞ்சி —முதன்மையான காஞ்சிநகரில்.

14 மன்னி வளர்வதொருமா உண்டு—நிலையாக வளரும்மாமரம் ஒன்றுளது. நிழற்கீழ்க்காணலாம்— அதன் அடியில் எம்மைவணங்கலாம். 15 போக என—அங்குச்செல்க என இறைவன் கூறியருள.

உமாதேவி காஞ்சி நகரை அடைதல்

16 பொருப்பரையன்—மலையரசன். 17 இபம்— யானை.

18 குறுமுயல்—சிறிய முயலுக்கு.

19 காணாமல் ஆம்பரிசு—காணமுடியாத தன்மையுடைய.

20 மூன்று முளரி முகிழ்க்கும் தடம்பார்த்துத்
தோன்றுமலர்த் தீபச் சுடர்பார்த்துத்— தான்தன்

21 இடத்து நிழல்நோக்கி யாவரும் காணாப்
படுத்தும் ஒருகிணறு பார்த்துக்— குடக்கோடிக்

22 காண அரிதாய்க் கரக்குநதி பார்த்தமரர்
பேணுலகத் துய்க்கும் பிலம்பார்த்துக்— காணரிய

23 செம்பொனிறம் நல்கும் சிலைபார்த்துத் திண்காரி
வெம்பரியூர் செண்டு வெளிபார்த்துக்— கொம்பில்

24 கடிக்கமலப் போதும் கழுநீரும் சேரப்
படைக்குமொரு பாடலமும் பார்த்து-நடுப்புகுந்தோர்

25 தோற்றம் குரங்காக்கும் தொல்லையிடம்
பார்த்ததனை
மாற்றும் கடவுள் மடுபார்த்துக்— கூற்றால்

26 இறவா இடம்பார்த்(து) இறந்தவர்பின் வந்து
பிறவா இடம்பார்த்த பின்னர்— செறிதரங்கக்

27 கம்பை நதியின் கரையணுகிக் காண்டகைய
பைம்பொழில்சூழ் எம்மருங்கும் பார்த்தருளி—
எம்பிரான்

---

20 மூன்றுமுளரிமுகிழ்க்கும்தடம்—மூன்று தாமரை மலரும் தடாகம்.

21 குடக்கோடி—மேற்கில்பாய்ந்து. 22 கரக்குநதி —மறையும்நதி, உய்க்கும்பிலம்—செலுத்தும் நிலவறை.

23 செண்டுவெளி—வையாளிவீதி. (குதிரையை நடத்தும்வீதி)

24 கடிக்கமலம்—மணம்கமழும்தாமரை, பாடலம்— பாதிரிமலர், செங்கழுநீர்—செங்குவளைமலர்.

25 கடவுள்மடு—தெய்வத்தன்மை வாய்ந்த மடு, கூற்றால்—இயமனால்.

26 செறிதரங்கம்—நெருங்கிய அலைகளையுடைய

28 யாமா தரவோ(டு) இருப்போம் எனச்சொன்ன
தேமா அடிநிழலைச் சேர்ந்தருளிக் —கோமானை

## கம்பை நதிக்கரையில் இறைவி பூசை புரிதல்

29 நாமினிது பூசிக்க நல்லஇடம் ஈதென்று
பூமருவு தெய்வப் புனலாடித்— தாமாகக்

30 கம்பை மணலைக் குவித்துக் கசிந்துள்ளம்
எம்பெரு மாட்டி இனிதிறைஞ்சித்— தம்பழைய

31 சேடியர்கள் நிற்பத் திருச்சூ டகக்கையால்
தோடவிழ்பூக் கொய்து தொடுத்தணிந்து—கூட

32 விரவுந் திருவுருவில் வெண்ணீறும் நெஞ்சில்
திருவைந் தெழுத்துந் திகழ— உரிமையுடன்

33 அந்தமில் பூசையின்மேல் ஆளுடைய நாயகிக்குச்
சிந்தை ஒருப்படவே செல்லுநாள்—இந்துநுதல்

34 ஆதிக் குலமடந்தை அன்புடைமை முன்புபோல்
சூதத் திருநிழலோன் சோதிப்ப—மோதிக்

## கம்பைநதி பெருகி வருதல்

35 கரைபொருது கம்பைநதி கற்பாந்தந் தன்னில்
விரிகடல் போல்தரங்கம் வீசி— இருசுடரும்

36 விண்ணும் பொலன்சக்ர வெற்பும் குலகிரியும்
மண்ணும் புதைய வரப்பண்ணி— எண்ணிறந்த

---

28 தேமாஅடியை—இனியமாவடியை

30 கம்பைமணலை—கம்பைநதியின்மணலை

31 சூடகம்—கைவளை, தோடவிழ்—இதழ் விரிந்த.

32 நெஞ்சில் திகழ—உள்ளத்தில் விளங்க. 34 நிழலோன்—திருவேகம்பர். சோதிப்ப-சோதிக்கும் பொருட்டு.

35 கற்பாந்தம்—உலகம் முடியும் காலம். தரங்கம் வீசி—அலைகளை வீசிக்கொண்டு. இருசுடர்—சூரியன் சந்திரன். 36 குலகிரி—அட்டகுலபருவதம்.

37 வாரிடத்தும் எவ்விடத்தும் எப்போதும் உள்ளபிரான்
ஓரிடத்துத் தாமும் ஒளித்திருப்பப்—பாரிடமும்

38 ஏனை அமர்நாடும் ஏகோ தகமாக
ஆன பெரும்பெருக்கு(க்) அஞ்சாதே—வானவர்கோன்

39 செச்சை நிகருடம்பில் செம்பாதி ஆகியதன்
பச்சை உடம்பருமை பாராதே—இச்சையுடன்

40 தேசு தரும்பழைய திவ்யாக மப்படியே
பூசை தனையொழிந்து போகாதே— மாசிலா

41 அன்புடைமை தன்னை அகன்றால் அரன்மேனி
என்படுமோ என்பதனை எண்ணியோ— தன்பழைய

42 பெண்மையோ அன்போ பிறப்போ பெருங்காதல்
திண்மையோ கற்போ தெரிகிலேம்— உண்மை

43 மறைபடைத்த மேனி வளையால் முலையால்
குறிபடுத்தி மார்பு குழைய—நறைபடைத்த

44 தாழ்ந்த புரிகுழலாள் தானாக அம்மணல்மேல்
வீழ்ந்து தழுவ வெளிப்பட்டோன்—சூழ்ந்தமரர்

---

37 பாரிடமும்—மண்ணுலகிலும், பரான்—ஏகம்ப நாதர்.

38 பெருக்குக்கு அஞ்சாது—வெள்ளப்பெருக்கத்துக்கு அஞ்சாமல்.

29 செம்பாதி—சரிபாதி, பாராது—உடலின் அருமை எண்ணாமல்.

40 தேசுதரும்—புகழ்தரக்கூடிய

41 அரன்மேனிஎன்படுமோ—இறைவன் திருமேனி என்னவாகுமோ. 42 தெரிகிலேம்—அறிந்தேமில்லை. 43 மறைபடைத்தமேனி-வேதங்களை உண்டாக்கிய திருமேனியில், வளையால்முலையால்—வளையல்களாலும், முலைகளாலும், குறிபடுத்தி-தழும்பு உண்டாக்கி, 44 வீழ்ந்து தழுவ—(உமையவள்)வீழ்ந்துதழுவிக்கொள்ள,

45 மீளா அடிமை விலையா வணங்கொடுக்கும்
தாளான் அரிபிரமர் தம்பிரான்— ஆளாய

46 தொல்லைத் திருக்குறிப்புத் தொண்டன் தலைமோதக்
கல்லிற் புறப்பட்ட கையுடையோன்— வில்லால்

47 வசையில் முடிமேல் மதியாமல் மோத
விசைய னொடுபொருத வீரன்—பசியால்

48 பதறி ஒருசிறுவன் பால்வேண்டப் பாலின்
உததி கொடுத்த உதாரன்— துதிபெருகத்

49 தேவர் நெருங்கும் திருப்பங் குனித்திருநாள்
மேவிய வேத விழாவொலியில்— தாவிக்

50 குலாவு பலபொற் கொடிவீதி எங்கும்
உலாவிவரு நாளில் ஒருநாள்— நிலாவியசீர்

51 எவ்வா னவரும் இறைஞ்சும் பெரும்பூசை
திவ்யாக மப்படியே செய்ததன்பின்—மைவானில்

52 ஆறு தொடவுயர்ந்த ஆயிரக்கால் மண்டபத்தில்
ஏறி யருளி இனிதிருந்து— சீறியெழக்

## திருவாபரணம் அணிந்தருளல்

53 காணுந் தொறுமொருதன் கண்முன் றினிலிரண்டு
நாணுந் திருக்காப்பு நாணணிந்து—சேணுலவு

---

45 விலையாவணம்—அடிமைஓலை. அரிபிரமர் தம்பிரான்—திருமாலுக்கும் பிரமனுக்கும் தலைவன். 46 தொண்டன்—திருக்குறிப்புத் தொண்ட நாயனார். 47 விசையன்—அருச்சுனன். 48 ஒருசிறுவன்—உபமன்யு முனிவருக்கு, பாலின்உததிகொடுத்த—பாற்கடலை அளித்த. உதாரன்—கொடையாளி. "பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப்பாற்கடல் ஈந்தபிரான்" திருப்பல்லாண்டு—9. 51 ஆகமப்படி—சாத்திரமுறைப்படி. 52 வானிலாறு—ஆகாய கங்கை. 53 இரண்டு—சூரியன், சந்திரன்

54 மைவாரி மேகம் வளரும் பிறைபடைத்த
செவ்வான மீது திகழ்ந்ததென—எவ்வாயும்

55 தோடு விரியிதழிச் சூழல்தனில் பல்கோடிப்
பாடல் அளிகள் படிந்ததென—நீடுமிரு

56 பாலும் வெயிலுதவு பத்மரா கக்கிரிமேல்
நீல ஒளிபோய் நிறைந்ததெனக்—கோலமுடன்

57 அன்றுதிருச் செங்காட் டணிந்ததிருச் சட்டைதனை
இன்றும் அணிந்தார் இனிதென்ன—ஒன்றாக

58 எம்மை உடையான் இருபாக மும்எங்கள்
அம்மை திருமேனி ஆனதெனத்—தம்மில்

59 முயங்கக் கிரிமான் முலைகுழைத்த மெய்யில்
தயங்கத் திருச்சாந்து சாத்தி—உயர்ந்த

60 நனைத்தண் துழாய்மௌலி நாபியில்வாழ் அன்னம்
எனைத்தும் அறியா இடத்தே—தனக்கமையச்

61 சம்பு குலத்தொருவன் சாத்துகைக்காம் என்றளித்த
செம்பொன் மணிமகுடம் சேர்வித்துத்—தம்போல்

62 நிகரற் றவரிருவர் நீங்கா இடத்தே
மகரக் குழையங்கு வைத்துத்—திகழமரர்

---

திருக்காப்பு நாண்—நாககங்கணம், 54 எவ்வாயும்—எல்லா இடத்திலும், வாய்—இடம், 55 இதழிச்சூழல் தனில்—கொன்றைமரங்கள் நிறைந்த இடத்தில், பாடல் அளிகள் படிந்ததென—ஒலிக்கும் வண்டுகள் மொய்த்தது போல, 59 கிரிமான்—மலைமகள், குழைத்தமெய்யில்—தழுவிய திருமார்பில், திருச்சாந்து—சந்தனம்

60 துழாய்மௌலி—துளசிமாலையணிந்ததிருமாலின், அன்னம்—பிரமன், அறியா இடத்தே-திருமுடியில்,

61 சம்புகுலத்தொருவன்—பல்லவ மன்னன் ஒருவன்.

62 இருவர்—தும்புரு, நாரதர், அசுவதரர் கம்பளரும் ஆம், நீங்கா இடத்தே—காதில், மகரக்குழை—மீன்வடிவாகச் செய்த காதணி.

63 சாதல் ஒழிந்ததற்குச் சான்றிருக்கும் அவ்விடத்தே
சோதிமணிக் கட்டுவடம் சூழ்வித்துப்— போதப்

64 பதும வளைத்தழும்பு பட்ட விடத்தே
புதுவயிரக் கேயூரம் பூட்டித்—திதலை

65 பரந்து வளர்கடவுள் பச்சைக் குரும்பை
இரண்டுகுறி இட்ட இடத்தே—திருந்துமுடிக்

66 காணிப் பிறைநிலவோ கங்கா நதிப்புனலோ
வேணிப் புரையிருபால் வீழ்ந்ததெனச்— சேணிற்

67 பனித்தா ரகையின் பரிசன்ன முத்தின்
தனித்தாழ் வடம்விளங்கச் சாத்திக்—குனிப்பில்

68 திருந்தும் அபிநயமும் தெய்வத் துடிப்பும்
இருங்கனலும் வாழும் இடத்தே— பொருந்தப்

69 பிறந்த இளம்பரிதி பேரழகு மட்கச்
சிறந்த கடகம் செறித்து—நுறுங்கப்

70 பிசைந்துபிசைந் துண்ணவொரு பிள்ளையறுத் தாக்க
இசைந்துபசி தோன்றும் இடத்தே—விசும்பில்

71 முதிரும் இருளை முனிபதும ராகக்
கதிருதர பந்தனமும் கட்டி— மதுரைப்

72 புரவி திகழிடத்தே பொற்பதும ராகத்
திருவுடை ஆடை திருததி— பரதவித

---

63 சான்றிருக்கும் இடத்தே நீலகண்டத்தில், 64 திதலை—தேமல்

64 வளைத்தழும்புபட்ட இடத்தே-தோளில், கேயூரம்—தோளணி.

65 பச்சைக்குரும்பை இரண்டு குறியிட்டஇடத்து—இளமுலைகள் இரண்டும் தழும்பு உண்டாக்கிய மார்பில்.

66 இருங்கனல்—மழுப்படை, வாழுமிடம்—கையில். 69 மட்க—மழுங்க, 70 பசிதோன்றுமிடத்தே-வயிற்றில். 71 உதரபந்தனம்—வயிற்றிற்கட்டும்கட்டு. 72—3 பதுமராகத்திருவுடைஆடைதிருத்தி-செந்நிறப் பட்டாடை

73 குஞ்சிப்பும் நல்லநிலைக் கூத்தும் நிகழிடத்தே
செஞ்சித்ர ரத்னச் சிலம்பணிந்து—துஞ்சிச்

74 செலவுற்ற வானோர் சிரந்தொடுக்கு மாலை
இலகிக் கிடக்கு மிடத்தே— குலவு

75 மதுமிக்க கல்லார மாலை யுடனே
இதழித் திருமாலை இட்டு— மதில்பொருத

76 செம்பொற் சிலையைத் தலைக்கொண் டனரென்னச்
செம்பொன் திருவா சிகைசேர்த்து—விம்ப

77 இரவி இடைதான் இலகுவதே என்னப்
பரவுமணிக் கண்ணாடி பார்த்துச்—சுருதியினான்

78 மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்
தேவாரம் செய்த திருப்பாட்டும்— பாவனையால்

79 போதலூர் கண்ணீர் புளகத் துடனணிந்த
வாதவூ ராளிதிரு வாசகமும்—தீதகல

80 ஏட்டென் றெழுதா இருபிறப்போர் கற்கத்தான்
பாட்டுண்ட நாலு பழங்கவியும்—கேட்டருளி

---

அணிவித்து, கூத்துநிகழிடத்து—திருவடிகளில். 74 வானோர்சிரம்—திருமால் பிரமர்களின் தலைமாலை, கிடக்குமிடம்-மார்பில். 75 கல்லாரமாலை-செங்குவளை மலர்மாலை, இதழி—கொன்றைமாலை, மதில்—திரிபுரம், 76 பொற்சிலையை—மேருமலையை, திருவாசிகை—தலையணியுட அழகிடமாலை. 77 சுருதியினான்—ஏகம்பநாதர்.

78 மூவர் முதலிகளும்—ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் அருளிய, திருப்பாட்டும்—தேவாரத்திருப்பாடல்களும், 'மூன்று முதலிகளும் தாம் புகழும்' என்பது திருகாளத்திநாதருலா 305. 79 வாதவூராளி திருவாசகமும்—மாணிக்கவாசகர் அருளிய திருவாசகமும், 80 இருபிறப்போர்கற்க—அந்தணர் கற்பதற்குரிய, நாலு பழங்கவியும்—நான்கு வேதங்களும், கேட்டருளி—ஓதக்கேட்டு.

## தரிசிக்க வருவோர்

81 ஐங்கைப் பவளநிறத்(து) ஆனைப் பெருமானும்
செங்கைச் சுடர்வடிவேற் சேவகனும்—எங்கும்

82 நிறைபூதம் சூழ நிலமெல்லாம் காப்ப
மறைஞாளி ஏறிவரு வானும்— நிறையருளால்

83 துண்ணெனத்தே வர்க்குச் சுதைபகுத்த மோகினியாம்
பெண்ணிடத்தில் வந்து பிறந்தோனும்—பண்ணுமகம்

84 மங்கும் படிக்கழற்கண் வாய்ந்திலங்கும் தம்முடைய
திங்கள் நுதல் வேர்விற் செனித்தோனும்—துங்கமுடி

85 கொண்ட கடவுள் குளிர்கொன்றைத் தாருமுடித்(து)
உண்ட பரிகலத்தில் உண்டோனும்—தண்டமிழால்

86 மண்புகழப் பாடி மறையூரில் ஆண்பனையைப்
பெண்பனை ஆக்கிய பிள்ளையும்—திண்பிடித்துப்

87 பாழி அமணரிடும் பாரச் சிலையுடனே
ஆழி தனில்மிதந்த அன்பனும்—சூழுமிருள்

88 பாதி இரவில் பரவைக்கும் சங்கிலிக்கும்
தூது நடப்பித்த தோழனும்—தீதில்

89 வழுக்கில் பெருந்துறையில் வாழ்வித்த கோலம்
கழுக்குன்றில் கண்ட கவியும்—வழுத்துநர்க்குப்

---

81 ஆனைப் பெருமான்—விநாயகர் வேற் சேவகன்—முருகப்பெருமான். 82 ஞாளி—நாய், வருவான்— வயிரவன். 83 பிறந்தோன்—அரிஅர புத்திரன், 84 வேர்வில் செனித்தோன்—வீரபத்திரன், 85 பரிகலத்தில் உண்டோன்—சண்டேசுவரர், 86 மறையூர்—திருவோத்தூர், பிள்ளை-ஞான சம்பந்தர் 87 சிலையுடன் மிதந்த அன்பன்—நாவுக்கரசர் 88 தோழன்—சுந்தரர், 89 கழுக்குன்றில்கண்டகவி—மாணிக்கவாசகர். "காணொணாத் திருக்கோலம் நீவந்து காட்டினாய் கழுக்குன்றிலே." திருவாசகம். கழுக்குன்ற—4

90 போத இனியதொரு பொன்வண்ணத் தந்தாதி
ஆதி உலாவோ(டு) அமைத்தோனும்— சோதிமணி

91 மன்றின் அருகு மலர்த்துழாய் நாறுமிடம்
கொன்றை கமழ்வித்த கொற்றவனும்—என்றும்

92 புடைமருவு தன்னிழலில் போகாத பேயை
இடைமருதில் இட்ட இறையும்— அடையத்

93 துயர்கடந்த தொண்டத் தொகையதனில் ஏனைச்
செயல்சிறந்த தொண்டத் திரளும்— கயிலைதனில்

94 தந்தாள் படாமல் தலையால் நடந்துபோய்
அந்தாதி யால்புகழ்ந்த அம்மையும்— இந்தநிலம்

95 கோட்டி வளைத்தெடுத்துக் கூட்டிக் குலைத்தடுக்கிக்
காட்டவல்ல பூத கணவரும்— ஈட்டுநலம்

96 எண்ணுமொரு நாற்பத் தெண்ணா யிரவரெனும்
புண்ணிய வேடப் புனிதரும்— நண்ணரிய

97 ஓரா யிரத்துத் தொளாயிரரென்(று) ஊழிமுதல்
பேரா நிமந்தப் பெருமையரும்— சேர

98 உரிய விதிமுறையோ(டு) உள்ளம் உருகிப்
பொருவரிய அன்புடனே போதச்— சுரரைத்

90 ஆதி உலாவோடு அமைத்தோன்—சேரமான் பெருமாள்நாயனார், 91 மன்று—சிதம்பரம், கொற்றவன்—அநபாயசோழன், 91 'சங்கம் திகிரி தணந்துமழு மானெடுக்கும் நங்கள் குற்றால நகர்பாடி' திருப்பூவண நாதருலா 300, 92 இறை—வரகுணபாண்டியன், 93 தொண்டத்திரள்—அடியார் கூட்டம், 94 அம்மை—காரைக்காலம்மையார், 95 பூதகணவர்—சிவகணங்கள், 96 புண்ணிய வேடப்புனிதர்—நாற்பத்தெண்ணாயிரம் இருடிகள், "எப்பற்றுந்தீர் நாற்பத்து எண்ணாயிரவரெனும், ஒப்பற்ற வேடத்து உயர்ந்தோரும்"—(திருப்பூவண 90,) 98 அன்புடன் போத— அன்போடு வர, சுரரை—தேவர்களை.

### நந்திதேவர் வரிசைப்படுத்தி அனுப்புதல்

99 திருவாச லில்நந்தி செங்கைப் பிரம்பால்
நிரையாக எங்கும் நிறுத்தி— வருவார்

100 கழற்சே வடிபணிந்து கண்களிப்ப முன்னே
எழச்சே வியுநீங்கள் என்ன— முழக்க

### திருவேகம்பர் தேரில் அமர்ந்து புறப்படல்

101 இருப்பதுவும் வெள்ளிமலை என்னாமல் செம்பொன்
பொருப்பிலும் ஏறினார் போல— விருப்பால்

102 வடித்தசுடர் வேற்சம்பன் வாழ்மல்லி நாதன்
கொடுத்த திருத்தேர்மேற் கொண்டு— முடித்தநதி

103 ஆடும் விசையில் அலையெழுந்து தன்மீதில்
நீடும் வகைசுழித்து நின்றதெனக்— கூட

104 இருகதிர் அஞ்ச எறிக்கும் நிலாவில்
ஒருதனி வெண்குடை ஓங்க— இருபாலும்

105 கங்கை நதியிற் கரைபுரண்ட சீகரம்போல்
மங்கையர்கள் வெண்சா மரையிரட்ட— எங்களையும்

106 இட்டாலோ பூணாக என்றுரகம் ஆடுவபோல்
பட்டால வட்டம் பணிமாற— விட்ட

107 எருதும் மராமரமும் எவ்வேழும் சாய
பொருத விடைக்கொடிமுன் போத— வருவதொரு

108 மேரு கிரிதொடரும் வெள்ளிக் கிரியென்ன
மூரிவிடை எம்பிரான் முன்போதப்— பேரிகை

---

99 நந்தி—நந்திதேவர், நிரையாக... நிறுத்தி—வரிசையாக நிற்கச்செய்து, வருவார் சேவியுங்கள் என்ன—ஏகம்பர் எழுந்தருளுவார் வணங்குங்கள் என்று கூற. 101 செம்பொன் பொருப்பிலும் ஏறினார்போல— பொன் மலையிலும் ஏறினவர்போல,

102 மல்லிநாதன்—திருவேகம்பருக்குத் தேர்செய் தளித்தவன், 104 இருகதிர்—கதிரவன், மதியம், நிலாவில் —நிலாப்போல், ஒருதனி வெண்குடை—ஒப்பற்ற வெண்

### வாத்தியங்கள் முழங்கல்

9 சல்லிகை மத்தளி தண்ணுமை பண்ணமை
பல்லியம் எங்கும் பரந்தார்ப்ப— வல்லபடி

110 வாணன் குடமுழா வாசிப்ப மாமதுர
வீணை உததி மிகவுயிர்ப்பப்—பேணும்

1 பரிசில் தமதுசெவிப் பாண்சேரி பெற்ற
இருவர் இசைபாடி ஏத்தச்— சுருதிஎழும்

2 இன்னரம்(பு) ஏழும் இசைததும்ப எம்மருங்கும்
கின்னரர் தங்கள் கிளைபாட— முன்னரிடும்

3 பேரிகை ஓசை பிறங்கமிகத் தாரையுடன்
மூரி வலம்புரி முன்முழங்க— ஆரம்

### திருச்சின்னம் ஒலித்தல்

4 குளித்த அதிபாரக் கொங்கைத் தழும்பும்
வளைத்தழும்பும் பெற்றபிரான் வந்தான்— கிளைத்த
சடை

கொற்றக்குடை, 105 சீகரம்—அலை, 106 உரகம்—பாம்பு, ஆலவட்டம்—விசிறி, 107 எருதும்... பொருத—எருதையும் மராமரத்தையும் அழிக்க, விடைக்கொடி—திருமாலாகிய இடபக்கொடி, "நெடுமாயர் போலவே... ...விரைக்கமல ஓடையாவர் புரத்தைமுனி பாணமாவர் விரித்த கொடியாவர்." அருணைக், 42, 108 மூரிவிடை முன்போத—பெரிய இடபம் முன்னேவர, 110 வாணன் குடமுழாவாசிப்ப—வாணன் தன் ஆயிரம் கைகளாலும் குடமுழாவாசிக்க, "வாணன், தூக்குநேர்பட ஆயிரங் கரங்களால் தொம்மெனமுகந்தோறும் தாக்க வேறுவேறு எழுகுடமுழவொலி தடங்கடலொலி சாய்ப்ப." திருவிளை—திருமணம், 105 வீணை...உயிர்ப்ப—வீணை கடலினும் மேலாக ஒலிக்க, 111 இருவர் இசைபாடி ஏத்த—திருநீலகண்டயாழ்ப்பாணர் மதங்கசூளாமணியார் இசை பாடித்துதிக்க, 113 வலம்புரி முன்முழங்க—வலம்புரிச் சங்கு முன்னே ஒலிக்க.

5 ஏகாம் பரநாதன் வந்தான் இகல் விடையின்
பாகாம் பழைய பரன்வந்தான்— மாகத்(து)
6 எழுமிரண்டு பேரொளியும் எப்போதும் அஞ்சி
வழிவிலங்கும் ஊருடையான் வந்தான்—சுழி
கொண்(டு)
7 அலையும் பகீரதிநின்(று) ஆர்க்கின்ற சென்னி
மலையன் திருமருகன் வந்தான்— கலைதேர்
8 பரிசிலிரு வர்க்கும் பகல்விளக்கும் கண்ணும்
வரிசை யுடனளித்தான் வந்தான்— ஒருவயிற்றில்
9 வாரா உடம்புடையான் வந்தான் எனமறுகில்
சீரார் திருச்சின்னம் சேவிப்ப— வேரிமிகத்

தேவர்கள் தத்தம் ஊர்திகளில் உடன்வரல்

120 தேங்கு மலரோன் சிறையோ திமமீதும்
ஓங்கு திருமால் உவணத்தும்— தாங்குபடை
1 வாசவன் வெள்ளை மதவா ரணமீதும்
ஈசர் பதினொருவர் ஏறிடத்தும்— தேசுதரும்

---

115 மாகத்து—ஆகாயத்தில், 116 இரண்டு பேரொளி—சூரியன், சந்திரன், 117 பகீரதி—கங்கை, மலையன் திருமருகன்—மலையரசனுக்கு மருகன், 119 வாராவுடம்புடையான்—பிறப்பில்லாதவன், மறுகில்—வீதியில், சின்னம் சேவிப்ப—சின்னம் ஒலிக்க. 120 மலரோன்—பிரமன், ஓதிமம்—அன்னம், திருமால் உவணத்தும்—திருமால் கருடன்மீதும், 121 வாசவன்—இந்திரன், வெள்ளைமதவாரணமீதும்—வெள்ளை யானைமீதும், ஈசர்பதினொருவர்—ஏகாதசருத்திரர், ஏறிடத்தும்—இடபத்தின்மீதும், 122 ஆறிருவர்—பன்னிருசூரியர், எவ்வேழ்—ஏழு ஏழு, புரவித்தேர்மீதும்—குதிரைகள் பூட்டிய தேர்களிலும், வேறிருவர்—அக்கினி தேவர், எணமர்—அட்டவசுக்கள், கூற்றுக்கடவுள்—இயமன், 123 அளகேசன்—குபேரன், 124 தழலோன்—

2 ஆறிருவர் எவ்வேழ் அடர்புரவித் தேர்மீதும்
வேறிருவர் எண்மர் விமானத்தும்— சீறியடும்

3 கூற்றுக் கடவுள் கொடிய கடாமீதும்
போற்றும் அளகேசன் புட்பகத்தும்— காற்றுறவாம்

4 வேகம் மிகுதழலோன் வெற்றித் தகர்மீதும்
வாகை வருணன் மகரத்தும்— ஆகமத்தின்

5 நீதி தெரியும் நிருதிநர வாகனத்தும்
காது பவனன் கலைமீதும்—சோதிதிகழ்

6 சீத மதிமுத்தின் தேர்மீதும் ஓரேழு
வேத முனிவர் விமானத்தும்— போதவுயர்

7 விஞ்சையர் சாரணர் சித்தர் வியன்கருடர்
செஞ்சுடிகை நாகருடன் சேவிப்ப— மஞ்சுகவித்து

8 ஆடும் கொடிகள் அருக்கன் பரிதடுக்க
மாடம் நெடிய மணிமறுகில்— நீடருளால்

குமரங்கள்

9 பொன்னான சூடகக்கைப் போதன்ன மும்புனலும்
எந்நாளும் எவ்வுயிர்க்கும் ஈந்தருளி— மன்னும்

130 அறச்சாலைப் பெண்டிர் அருகுவரக் கங்கை
புறக்காவல் பெண்டிருடன் போதச்— சிறக்கும்

---

அக்கினிதேவன், தகர்—ஆட்டுக்கிடா, 125 பவனன்—வாயுதேவன், நிருதிநரவாகனத்தும்—நிருதி சிவிகையிலும்.

126 ஓரேழு முனிவர்—ஒப்பற்ற முனிவர் எழுவரும், போத—வர, முனிவர் எழுவர்:— அத்திரி, ஆங்கீரசன், கௌதமர், சமதக்கினி, பரத்துவாசர், வசிட்டர், விசுவாமித்திரர். 127 மஞ்சு—மேகம், 128 மணிமறுகில்—அழகிய வீதியில், 129 சூடகக்கைப்போது—வளையணிந்த கைம்மலரால், அன்னமும் புனலும்—சோறும் நீரும், எவ்வுயிர்க்கும் ஈந்தருளி—எல்லாவுயிர்களுக்கும் அளித்து,

1 வரையர மாதரும் வாரா கரத்திற்
திருவுடன் வந்த திரளும்— திருவும்

2 கலையை அகலாத கன்னிமட மானும்
மலையை அகலா மயிலும்— கலைமகளும்

3 பொன்னின் உலகாளும் பூவையரும் மாநதிகள்
என்னும் மடவார் எழுவரும்— அன்னமயில்

4 சீறும் விடைகளிறு சேனம் கடாயாளி
ஏறும் மடவார் எழுவரும்—கூறும்

5 குலநாக மாதர் குழாமும் பணிந்து
பொலமாட வீதி புகுத— நிலமாதர்

6 தாணு நுதல்விழிமேல் தாவடிபோ கத்திரண்ட
பாண மலரோன் படையென்னப்— பூணரவம்

7 சூடும் தரங்கச் சுரநதியில் தோய்ந்துவிளை
யாடும் படிதிரண்ட அன்னமெனப்— பாடலினால்

8 தம்பெருமை பாடும் தழலோன் தனக்களித்த
வெம்பகலில் சேர்ந்த விளக்சென்ன— நம்பருறை

9 சூதத் தெழுந்த துணர்பல் லவப்படலம்
கோதத் திரண்ட குயிலென்னத்— தீதற்ற

---

131 திருவும்—இலச்குமியும், 132 கன்னி—துர்க்கை, மலையை அகலா மயில்—மலைமகள், 33 பொன்னின் உலகாளும் பூவையர்—தேவமாதர்கள், மாநதிகள்... எழுவர்—கங்கை, யமுனை, சரச்சுவதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி, அன்னம் மயில்—அன்னம் மயில் முதலிய ஊர்திகளில், 134 ஏறும் மடவார் எழுவரும்—ஏறிவருகின்ற மகளிர் எழுவரும், மடவார் எழுவர்— அபிராமி, இந்திராணி, காளி, கௌமாரி, நாராயணி, மகேசுவரி, வாராகி, 135 பொல மாடவீதி—பொன்மயமான மாடவீதியிலே, 136 தாணு நுதல் விழிமேல்—சிவபெருமான் நெற்றிக்கண்மீது, பாணமலரோன்—மன்மதன், 137 தரங்கம்—அலை, சுரநதி—கங்கை, அன்னமென—அன்னப்பறவை போல.

140 எந்தைபெரு மான்கரத்தில் ஏந்துமிள மான்கண்டு
வந்து திரண்டசில மானென்னச்— செந்தமிழின்
1 பாட்டுக் குழல்வோன் பசும்பாதி யின்வார்த்தை
கேட்டுத் திரண்ட கிளியென்னக்— கூட்டகிலார்
2 தாழ்ந்த சடைமுடியோன் தன்னுடம்பைக் காரென்று
வாழ்ந்து திரண்ட மயிலென்னச்— சூழ்ந்தரன்பால்
3 நன்புதிய தூதுக்கு நான்செல்வேன் நான்செல்வேன்
என்பனபோல் மென்குழல்வண்(டு) எங்குமெழ—
நின்புயமேல்
4 எங்கள் தழும்பணிந்தால் என்செய்யும் என்பனபோல்
செங்கை வளைகள் சிறந்தார்ப்பச்— சங்கரன்மேல்
5 தள்ள அரியகுறித் தாமும் இடத்தாயம்
கொள்வனபோல் கொங்கைக் குவடசைய— உள்ள
மகிழ்
6 செம்பதுமை கேள்வன் திருமல்லி நாதனுயர்
சம்புபதி நல்கும் தடந்தேர்போல்— கம்பரே
7 இத்தேரும் கண்டாலோ என்பனபோல் அல்குலெனும்
அத்தேரின் மேகலைகள் ஆர்ப்பரிப்ப— இத்தெருவில்
8 சீற்ற விடையோனைச் சேவிக்கப் பெற்றபதம்
போற்றுவபோல் பொன்னூ புரம்சிலம்ப—மேற்ககன
9 கூடம், வெளியடைத்த கோபுரத்தும் குன்றனைய
மாட நெடுமத்த வாரணத்தும்— ஓடுகதிர்

---

9 சூதத்து—மாமரத்தில், பல்லவம்—தளிர், 141 பசும்பாதி—உமாதேவி, திரண்ட கிளி என்ன—கூடிய கிளி போல, 2 காரென்று—மேகமென்று, 3 குழல்வண்டு—கூந்தலில் மொய்க்கும் வண்டுகள், 4 செங்கை வளைகள்—சிவந்த கை வளையல்கள் 5 தாயம்கொள் வனபோல்—உரிமை கொண்டாடுவனபோல, 6 சம்பு பதி—பல்லவகுலத் தலைவன், 7 ஆர்ப்பரிப்ப—ஒலிக்க, 8 நூபுரம் சிலம்ப—சிலம்பு ஒலிக்க,

150 விஞ்சு கொடிதடுக்கும் மேனிலா முற்றத்தும்
மஞ்சுதவழ் கங்கைகொண்டான் மண்டபத்தும்—
வெஞ்சமரின்

1 தத்துபரி பல்லவன் சம்பு குலப்பெருமான்
வைத்த துலாபார மண்டபத்தும்— சித்ரமணிச்

2 சூளிகையின் மீதும் சுதைநிலா முற்றத்தும்
மாளிகையின் மீதும் மறுகிடத்தும்—யாளி

3 செறியுமணித் தெற்றியிலும் செய்குன் றிடத்தும்
நிறைய எவரும் நெருங்க— இறையவனை

ஏகம்பர் தோற்றம் கண்ட மகளிர் நிலை

4 வந்து வணங்கி மதிக்கொழுந்தும் செஞ்சடையும்
சிந்தைகவர் கண்மலரும் செவ்வாயும்— எந்தை
பிரான்

5 தெய்வப் புரிநூலும் திண்தோளும் மார்பகமும்
சைவத் திருவான தாழ்வடமும்— மெய்வழியக்

6 கொண்ட திரு நீறும் குழைதுரந்த செங்கழுநீர்
மண்டு திருக்கொன்றை மாலையும்— எண்டிசையும்

7 தாவில் சுருதித் தமருகமும் தம்முடைய
தேவி அறியும் திருக்கூத்தும்— யாவையும்தம்

8 உள்ளத்தே கொள்ளா உருகாப் பெருகின்ப
வெள்ளத்தே வீழா மிகவுயிராத்— தள்ளியுறை

9 விட்டவாள் போல்விழியீர் மென்சுணங்கின் பொன்
முலைமேல்
பட்டவா பாரீர் பசப்பென்பார்— சுட்டழகன்

---

151 துலாபார மண்டபம்—சம்புவராயன் தன் எடையளவு பொன்னைத் தானம் செய்ய அமைத்த மண்டபம். 2 சூளிகை—வீட்டின் மேலிடம். 3 தெற்றி—திண்ணை, செய்குன்று—மேடை, எவரும் நெருங்க—யாவரும் நெருங்கும்படி, 4 மதிக்கொழுந்து—பிறைச்சந்திரன், எந்தைபிரான்—ஏகம்பர், 5 தாழ்வடம்—உருத்திராக்க

160 கோதையகல் மார்பங் குழைவிக்க மாட்டாதால்
ஏது படிலென் இவைஎன்பார்— போத
1 நெருக்கி அரிதிட்ட நிரைவளைக ளெல்லாம்
இருக்கை அரிதுகரத்(து) என்பார்— நிருத்தன்
2 பரிக்கும் தழும்பு படுத்தா வளைகள்
இருக்கிலென் போகிலென் என்பார்— திருக்கண்கள்
3 வையார்நம் மேலென்பார் வைப்பார் அவர்கருணை
மெய்யா னவளொருத்தி மேலென்பார்— ஐயோ
4 அருள் படைக்க வேண்டி அருமந்த கண்டம்
இருள்படைத்த(து) ஏனிங்ஙன் என்பார்— இருள்
படைத்த(து)
5 இன்றாகில் வானோர் எனும்சாதி அத்தனையும்
பொன்றாதோ என்று புகலுவார்— வென்றிமதன்
6 ஏவானோ மேலென்பார் ஏவினால் இன்னமுந்தான்
போவானோ போய்த்தோ விழியென்பார்—
மேவனிலம்
7 செல்லாதோ மீதென்பார் சென்றால் வரவிடுமோ
நல்லார் திருக்காப்பு நாணென்பார்— புல்லத்

மாலை, மெய்வழிய—உடல் முழுதும், 6 எண்டிசையும் —எட்டுத் திக்கிலும் 7 தமருகம்—உடுக்கை, 8 உள்ளத்தே கொள்ளா—மனத்திற்கொண்டு, கொள்ளா, உருகா, வீழா, உயிரா இவை செய்யா என்னும் வாய்பாட்டு வினை எச்சங்கள். 9 வாள்போல்விழியீர் —விளி, பசப்பு—பசலை நிறம். 160 போத—வர, 1 அரிதிட்ட—அரிதாக நெருக்கியிடப்பட்ட, வளை களெல்லாம்—வளையல்கள் யாவும், இருக்கை அரிது கரத்து—கைகளில் நில்லாமல் கழல்கின்றன, 2 தழும்பு படுத்தா—தழும்பை உண்டாக்காத, 4 கண்டம்— கழுத்து, 5 பொன்றாதோ—அழியாதோ, அனிலம்— தென்றற்காற்று.

8 திருக்கொன்றை மாலைபெறின் சிந்தைகுடி ஏறி
இருக்கின்ற மாலொழியும் என்பார்— ஒருத்திகுறி

9 இட்டதிவர் மார்புபிறர் எய்துவதின் மாலுழந்து
பட்ட(து) அமையும் படவென்பார்— மட்டவிழும்

170 அம்பதுமப் போதின் அயன்மா லறியாத
உம்பர் அறியா ஒருகிரியைச்—செம்பவளப்

1 பாதி உடம்பு பசப்பித்தாள் பைங்களபக்
கோதை முலையால் குழைவித்தாள்— ஆதலால்

2 உண்மை தனக்கிந்த உமையாள் பிறந்ததன்பின்
பெண்மைதனக்(கு) ஏற்றம் பெரிதென்பார்—
பெண்மைக்(கு)

3 இறையாள் இவளன்றோ என்பார் மற்றிங்ஙன்
மறுகில் எதிர்வந்த மாதர்— அறுசமய

4 அண்டருக்குந் தாயார் அறச்சாலை இப்படிப்
பெற்(று)
உண்டிருக்கும் மூதூர் உடையானே— கொண்ட
விருள்

5 காவி விழியொருத்தி கட்டிக் குறியிட்டு
மாவடியில் வைத்த வயிரமே— தேவிமுகம்

6 செவ்வி பெருகத் திருச்சூ டகக்கையால்
தவ்விப் பிடித்துச் சமைத்தன்னம்— எவ்வுயிர்க்கும்

---

7 காப்புநாண்—கங்கணமாகவுள்ள பாம்பு. 9 மட்டு —தேன், அயன்—பிரமன், 170 உம்பர் அறியா—தேவர்களால் அறியமுடியாத, ஒருகிரியை—திருவேகம்பரை, 1 கோதை முலையால்—மாலையணிந்த முலைகளாலே, 2 ஏற்றம்—உயர்வு, 4 மூதூருடையானே—விளி, 5 காவிவிழி ஒருத்தி—நீலமலர் போன்ற கண்களையுடைய உமாதேவி, கட்டிக்குறியிட்டு—கட்டித்தழுவிவடு உண்டாக்கி, 5—6 தேவிமுகம் செவ்விபெருக—உமையவள் முகம்மலரும்படி, சமைத்து அன்னம்—சோறுசமைத்து, 7 ஆரச்சொரிதரும்-உண்ணும்படி அளிக்கும், நெஞ்

7 ஆரச் சொரிதருநெல் லாட்டைக்(கு) இருநாழி
சேரப் படியளக்கும் சீமானே— மார்புபோல்

8 கண்ணும் சிலர்படைத்த காணியோ காமவேள்
பண்ணும் துயர்தீரப் பார்த்தருளீர்—வெண்ணில
வோ(டு)

9 ஈரும் இளந்தென்றல் ஈராமல் உம்முடைய
ஆரம் பசிதணித்தல் ஆகாதோ— வாரளவும்

180 வேவக் கறங்கும் விடைமணியை உம்முடைய
சேவுக்(கு) இனிதளித்தால் தீதாமோ—மேவியஇக்

1 கொக்கின் இறகுடனே கூவும் குயிற்சிறகை
ஒக்க அணியஉமக்(கு) ஒண்ணாதோ—மிக்க

2 அறஞ்செய்யும் ஊருடையீர் ஆகாது காண்நும்
மறஞ்செயல் என்று மயங்கா—நிறந்திகழும்

3 விண்ட குவளைக்கும் விள்ளாத தாமரைக்கும்
தண்டரள மும்பொன்னும் சாத்துவாள்—
ஒண்டொடியீர்

4 பாகம் பிரியாத பச்சைமயில் காணாமல்
ஏகம்பர் பார்த்தார் எமை என்பார்— ஆகமதன்

5 காதல் மலர்சொரிந்து கைசலிப்ப இவ்வண்ணம்
மாதர் பலர்மயங்க மற்றொருத்தி— பேதை,

ஆட்டைக்கு இருநாழி—ஆண்டுக்கு இருநாழி நெல்லை, 8 கண்ணும் சிலர் படைத்தகாணியோ—உமது கண்களும் சிலருக்கு உரிமையாய்விட்டனவோ (எங்களைப்பார்த்தருளுங்கள்) 9 தென்றல் ஈராமல—தென்றற்காற்று எம்மை வாட்டாமல், ஆரம்—கொன்றைமாலை, 180 கறங்கும் விடைமணியை—சுழலும் இடபத்தின் மணியை, சேவுக்கு-எருதுக்கு. தீதாமோ-தீமையாகுமோ, 2 மயங்கா-மயங்கி, 3 விண்ட—மலர்ந்த, 4 பச்சைமயில்காணாமல்—பார்வதிக்குத்தெரியாமல், 5 மாதர்பலர்மயங்க-மகளிர் பலரும் மயக்கமுற,

## பேதை வருணனை

6 திரையுதவு பேரமுதின் சிற்றரும்பு முற்றி
வருமுலைகைய தானதொரு வல்லி— சுருதியளி

7 ஊத மலரா ஒருதா மரைமுகுளம்
காதல் உதவாத காமரசம்— வேதத்(து)

8 உழையான் அகலா(து) உறைகின்ற சூதம்
குழையாத தென்றற் கொழுந்து— பழைதாகக்

9 கம்பர் உறையும் கடவுளிளஞ் சூதத்தின்
கொம்பில் உறையாக் குயிற்பிள்ளை— இன்ப

190 அலையார் அமுதத்தின் ஆரம்ப வித்து
தொலையாத காமத்தின் தோற்றம்— உலகில்

1 சிறந்தபிரான் அல்லாத தேவர்களைப் போல
இறந்து பிறக்கும் எயிற்றாள்— நிறைந்துமைப்போல்

2 முத்தாரம் பூண முலையெனக்குச் சூட்டுமென்று
கைத்தாயர் முன்நின்று கண்பிசைவாள்— சுத்த

3 இயல்பு தனையொழிய யாதும் பிறழாக்
கயலை அனையஇரு கண்ணாள்— புயல்வரினும்

4 ஆடாத தோகையதன் பிஞ்சம்போல் கூடுவதும்
கூடாது மான குழலினாள்— நீடிமிக

5 ஓங்கி வளர்தன் உரியபரி ணாமமெல்லாம்
தாங்கியவித் தன்ன தனத்தினாள்— நீங்காத

6 ஏகம்பம் என்னீர் இமவான் மகள்தழுவ
ஆகம் குழைந்த அரனென்னீர்— மாகம்பை

---

189 கம்பர்—ஏகம்பநாதர், சூதத்தின்கொம்பில்—மாமரக்கிளையில், இன்பஅலை—இன்பக்கடல், அலை—ஆகுபெயர், 191 எயிற்றாள்—பற்களையுடையவள், 2 முத்தாரம்பூண—முத்துமாலைஅணிய. கண்பிசைவாள்—அழுவாள், 4 தோகை—மயில், 5 பரிணாமம்-வேறுபாடு, 7 தம்மைப்பேசுவித்த—தனக்குக்கற்பித்த, 8 பூவை—கிளி, 200 அம்மை—உமாதேவி, கொம்பனையாள்—

7 ஆறென்னீர் அம்மை அறச்சாலை என்னீர்நம்
பேறென்னீர் என்றுதமைப் பேசுவித்த-வாறெல்லாம்
8 பாவைக்(கு) உரைத்தந்த பாவைபக ராததெல்லாம்
பூவைக்(கு) அழுது புகலுவாள்— மேவுபல
9 தீவிற் பிறந்த செழுமணியும் தம்மூரின்
வாவி பிறந்த மணிமுத்தும்— காவிவிழி
200 அம்மை முதல்நாள் அரனாரைப் பூசித்த
கம்பை மணலும் கலந்தெடுத்துக்— கொம்பனையாள்
1 ஒண்டொடி மாத ருடனே கரஞ்சிவப்ப
வண்டல் இழைத்து மகிழ்போதில்-பண்டொருநாள்
2 தெண்டிரையிற் பெற்ற திருவமுதச் செவ்வாயும்
பண்டுகிரால் கொண்ட பரிகலமும்— மண்டுமெரி
3 தாழும் சினத்துழுவை தான்கொடுத்த உட்சாத்தும்
வேழம் கொடுத்ததொரு மேற்சாத்தும்—சூழ்பனியின்
4 ஓங்கல் கொடுத்த ஒருபா கமுமுடையார்
தாங்கு மணிமறுகு சாருதலும்— ஆங்கவளும்
5 வண்டல் தனையொழிந்து வந்தணுகிச்
செந்துவர்வாய்
ஒண்டொடி மாதர் உடனிறைஞ்சி—அண்டருறை

பேதை, 1 வண்டல்—மகளிர் விளையாட்டு, 2 உகிரால் கொண்டபரிகலம்—பி ர ம க பா ல ம், உகிர்—நகம், 3 உழுவை—புலி, உட்சாத்து—கோவணம், மேற்சாத்து —போர்வை, வேழம்—யானை.

"பொன்னார்மேனியனே புலித்தோலை
யரைக்கசைத்து"— சுந்தரர் தேவாரம் திருமழபாடி.
"இசைந்த ஏறும் கரியுரி போர்வையும் எழில்நீறும்
இலங்கு நூலும் புலியதளாடையும்"— திருப்புகழ்

203—4 பனியின் ஓங்கல் கொடுத்த—இமயமலைக்கரசன் அளித்த, (மலைமகளை) ஒருபாகமுமுடையார்—திருவேகம்பர், அவளும்—பேதையும், ஆங்கு—அசை.

6 நாகம் சிலையாக நண்ணார் புரமெரித்த
ஏகம்பர் தம்பெருமை எண்ணாதே— கோகனக

7 உந்திக் கணையோன் ஒருபாக மும்சடையும்
அந்தப் புறமென்(று) அறியாதே— இந்தப்

8 பெருத்த மணக்கோலப் பிள்ளையுடன் தேர்மேல்
இருத்தும் எனைக்கொடுபோய் என்ன— ஒருத்திஇவர்

9 பூணத் தவரிருவர் பொன்முடியும் சேவடியும்
காணக் கிடையாத கம்பர்காண்— வாள்நுதலாய்

210 பாய உலகம் பதினாலையும் பரந்தொன்(று)
ஆய பெருமான் அருகிருக்கத்— தோயுமகிற்

1 பச்சைக் கிரியால் பவளத் திருமார்பில்
அச்சிட் டவர்க்கொழிந்துண் டாகுமோ— அச்ச
முடன்

2 மீதெடுத்துக் கம்பை மிகுபெருக்குக்(கு) அஞ்சாத
மாதவத்தாட்(கு) அன்றியிது வாய்க்குமோ—
மூதண்டம்

3 எல்லாம் பெறநெல் இருநாழி யால்வளர்க்க
வல்லாள் தனக்கன்றி வாய்க்குமோ—சொல்லாய்

4 குறைவில் மடமயிலே கூசாதே யாமே
இறைவரரு(கு) ஏறி இருப்போம்—மறஇதனை

---

6 நாகம் சிலையாக—மேருமலைவில்லாக, நாகம்—மலை, சிலை—வில், புரம்-திரிபுரம், 7 அந்தப்புரம்—அரசமகளிர் இருக்குமிடம், 8 பிள்ளையுடன்—திருவேகம்பரோடு, 9 இருவர்—திருமாலும் பிரமனும், 210 பாய—பரவிய 1 பச்சைக்கிரியால்—இளமுலைகளாலே, மார்பில் அச்சிட்டவர்க்கு—மார்பில்தழும்பு உண்டாக்கியவருக்கு, 2 பெருக்குக்கு அஞ்சாத—நதியின் வெள்ளத்துக்கு அஞ்சாத, மாதவத்தாட்கு அன்றி—உமையவளுக்கு அல்லாமல் 3 வல்லாள்—உமையவள், 4 மற இதனை என்ன—இதனை மறந்துவிடு என்றகூற, 6 பகர்வதன் முன்—கூறுவதற்கு முன்னே, 7 வரிசாபம் வாங்காமல்—

5 என்ன இளையாள் இருகண்கள் முத்தரும்ப
அன்னையர்தம் கையால் அணைத்தாற்றி—
மின்னேபோ(து)

6 என்று பகர்வதன்முன் ஏகம்பர் தேருடனே
தென்றலந் தேரும் தெரிவித்து— வென்றி

7 மதன்கை வரிசாபம் வாங்காமல் வாசம்
பொதிந்தகணை பூட்டாமல் போந்தான்—
பெதும்பை

பெதும்பை வருணனை

8 இவள்மற் றொருத்தி எவர்க்கும் தெரியாப்
பவளத் தமுதுதரும் பாவை— தவளத்

9 திருப்பாற் கடல்பிறந்து செந்தா மரைமேல்
இருப்பார்க்கு நேரே இளையாள்— விருப்புடனே

220 ஆர்க்கும் அளிகள் அவிழ்பதம் ஈதென்று
பார்க்குமுகை போலும் பருவத்தாள்— ஆக்கமுடன்

1 போராக்கு மாமதனன் போதும் பவனிக்குத்
தேராக்க எண்ணும் செழுந்தென றல்— வேரிநறும்

2 போது புனைவதற்கும் பூணாரம் பூண்பதற்கும்
ஆதரவு வைக்கும் அளவினாள்— ஆதிமதன்

3 பேறும் மட நாணும் பெண்மைப் பெருமிதமும்
வீறும் சிறிதரும்பும் மெய்யினாள்— சீறிஎரி

4 ஊட்ட மதில்மூன் றுழிநிகழ்ந்த வண்ணம்போல்
கூட்டி முடிக்கும் குழலினாள்— வேட்டவர்தம்

---

வில்லை வளைக்காமல், கணைபூட்டாமல்—மலரம்பு களைத் தொடுக்காமல். 9 செந்தாமரைமேல் இருப்பார்—இலக்குமி, 220 அளிகள்—வண்டுகள், அவிழ்பதம்—மலரும்பருவம், முகைபோலும்—அரும்பு போன்ற, 1 வேரிநறும்போது—தேன் பொருந்திய நல்ல மலர், 3 வீறு—பெருமை, மெய்யினாள்—உடம்பையுடையவள், 4 மதில் மூன்றுழி—திரிபுரத்தில்,

5 புந்திகவர் வஞ்சனையும் பொய்யும் கொலையுமிடம்
வந்துவந்து பார்க்கும் மதர்விழியாள்—மைந்தர்
6 உகமையழ கோடே உள்ளரும்பும் கஞ்ச
முகையின்முகை போலும் முலையாள்— இகுளையர்
தம்
7 மீளாத காதல் விழைவுரைக்கும் போததனைக்
கேளா தவர்போலக் கேட்டிருப்பாள்— கேளாய
8 மாதரும் மானும் மயிலும் பசுங்கிளியும்
ஓதிமமும் சூழ உடன்போத— மாதவிப்பூம்
9 பந்தரிட்ட நீழல் பளிக்குச் சிலாதனத்து
வந்திருப்ப வெற்றி மடமாதர்— உந்திக்
230 குவளை மலரிருகண் கொங்கைக் குறியிட்ட
பவள மலையினையும் பாடித்— தவளநகை
1 அன்னை அறஞ்செய்த அறச்சாலை யும் பாடிக்
கன்னியினி தாடு கழங்கென்னக்—கன்னிதனக்(கு)
2 ஆழி தருமுத்தம் ஆகாதென்(று) அவ்வூரில்
ஏழுநதி முத்தம் இனிதெடுத்துச்—சூழ்ந்தரின்
3 தட்டு நிகரல்குல் சங்கிலிபால் தூதுதமை
விட்டவர்பால் பெற்ற விழியொன்றும்—வட்டித்துப்
4 பாத மலர் துதித்த பட்டவா ணன் தனக்குக்
காத லுடனளித்த கையிரண்டும்—பூதத்(து)

225 புந்திகவர்—உள்ளங்கவரும், 6 கஞ்சமுகை—தாமரை அரும்பு, இகுளையர்—தோழிமார், 8 உடன் போத—உடன்வர, ஓதிமம்—அன்னம், 9 பளிக்குச் சிலாதனத்து—பளிங்கு மேடையில், 230 தவளநகை—முத்துப் போன்ற வெண்மையான பற்களையுடைய பெதும்பை. 2 ஆழிதரும்முத்தம்—கடலில் எடுத்தமுத்து, அவ்வூர்—கச்சிப்பதி, ஏழுநதி—கம்பைமுதலிய ஏழுநதிகள், 5 முகிலுறையும் தானங்கள் மூன்றும்—திருமால் எழுந்தருளியுள்ள பாடகம், ஊரகம், வெஃகா என்னும் மூன்றிடங்

5 இகலொழிய நின்றும் இருந்தும் கிடந்தும்
முகிலுறையும் தானங்கள் மூன்றும்—நகிலால்
6 இலங்கு வரிவளையால் இவ்விரண்டாய்த் தம்மேல்
நலங்கொள் தழும்பொரு நான்கும்—துலங்க
7 உமைக்கமைத்த பொற்கோயில் ஊழி முதல்நாள்
அமைத்தன கோணங்கள் ஐந்தும்—அமைத்தோள்
8 இளைக்கும் மருங்குல் இருநாழி நெற்கொண்(டு)
அளிக்கும் சமயங்கள் ஆறும்—குளிப்பார்
9 செறியும் பவக்கடலைச் சிந்தித் திரையால்
எறியும் புனிதநதி ஏழும்—பிறைநுதலாள்
240 அன்பொடுபா டிக்கழங்கை ஆடுகின்ற எல்லைக்கண்
என்பொருபெண் ஆன எழில்நகரும்— அன்பனுளம்
1 அன்றொருத்திக்(கு) உண்மை அறிவித்துத்
தாம்மகிழ்க்கீழ்ச்
சென்றொளித்து நின்ற திருநகரும்— சென்று
2 முதுககன கோளத்து முற்பட்ட கூத்தின்
பதுமம் மலர்ந்த பதியும்— கதிராழிக்

---

களையும், "ஆடவர்கள் எவ்வா றகன்றொழிவார் வெஃகாவும், பாடகமும் ஊரகமும் பஞ்சரமா—நீடியமால், நின்றான் இருந்தான் கிடந்தான் இதுவான்றோ, மன்றார் மதிற்கச்சி மாண்பு" தண்டி—சூ, 67 மேற்கோள், வெஃகா—யத்தாக்தகாரி சன்னதி, பாடகம்—பாண்டவதூதர் சன்னதி, ஊரகம்—உலகளத்த பெருமாள் சன்னதி 7 பொற்கோயில்—காமாட்சி அம்மன் ஆலயம் 8 இளைக்கும் மருங்குல்—உமாதேவி. சமயம் ஆறு—சைவம் வைணவம், சாந்தம், சௌரம், காணபத்தியம், கௌமாரம் என்பன. 9 புனிதநதிஏழு—கம்பை, பம்பை, தும்பை, பாலி, வேகவதி, சேயாறு, மஞ்சநதி. பிறைநுதலாள்—பெதும்பை. 240 எழில்நகர—மயிலாப்பூர், அன்பன்—சுந்தரர், 1 ஒருத்திக்கு—சங்கிலியாருக்கு, திருநகர்—திருவொற்றியூர்,

3 காவித் திருநிறத்தோன் கைகுவித்து நின்றெதிரே
சேவித்து நிற்கும் திருப்பதியும்—தாவுபரி
4 மல்லல் தொடைத்தொண்டை மான்கடவு தேரையொரு
முல்லைக் கொடிதடுத்த மூதூரும்— நெல்விலைக்குச்
5 சற்றளந்த நாட்புகலிச் சைவப் புலவனுக்குக்
கொற்றளந்த மாடக் கொடிநகரும்— பெற்றதொரு
6 தாயுமிலை என்னும் தமது குறையையொரு
தூய கழைதவிர்த்த தொல்நகரும்— வாய்கலசம்
7 ஆட்டி இனிமை அறிந்தவூன் எச்சில்தனை
ஊட்டிய வேடன் உறைபதியும்— நாட்டிலுள
8 எண்ணில் அமணரெலாம் ஏறக் கழுவிலொரு
பெண்ணை இயலறிந்த பேரூரும்— விண்ணவர்தம்
9 சாதல் உறைநாளும் சாகாத புள்ளிரண்டும்
தீதகல வாழும் திருமலையும்— தூதுதமை
250 ஓட்டும் திருநாவ லூராற் கிரந்திட்டுப்
பாட்டுண்ட ஊரும் படைத்துடையோன்—சூட்டு
1 வெருவும் வரியரவும் வெண்டலையும் ஆறும்
மருவும் முடிக்கம்ப வாணன்— ஒருபுத்தன்
2 செங்கல் எறிக்குச் சிவலோகம் ஈந்தபிரான்
துங்க மணிமறுகு தோன்றுதலும்— பைங்கொடியும்
3 ஆடுங் கழங்குதவிர்த்(து) ஆயத் துடன்கனக
மாட நெடுவீதி வந்தணுகிக்— கூடப்

---

243 காவித்திருநிறத்தோன்—திருமால், நிற்கும் திருப்பதி—திருமாற்பேறு, இராமேசுவரமும் ஆம். காவி—நீலமலர், 4 மூதூர்—வடதிருமுல்லைவாயில், 5 கொடி நகர்— திருவரத்துறை, 6 தொல்நகர்—திருநெல்வேலி, கழை—மூங்கில், 'எங்குமொரு, தாய்வயிறு காணாத் தருமத் திருவுடம்பை, வேய்வயிறு கண்ட வியன்பதியும்'' திருப்பூவணநாதருலா, 186—87, 7 வேடன்—கண்ணப்பர்,

4 பணிந்து பரவிப் பகுவாய் அரவும்
அணிந்த திருத்தோள் அழகும்— மணங்கமழும்

5 பொன்னான மார்பும் புனையும் புரிநூலும்
மன்னான காதல் வரநோக்கி— மின்னும்

6 திருந்திழையீர் இந்தத் திருமேனி தன்னில்
இருந்ததழும்(பு) என்னதழும்(பு) என்றாள்— புரிந்த வரும்

7 மின்னே கிளியே விளங்கிழையே அன்னமே
அன்னே இதனை அறியாயோ— தன்னருளால்

8 பாராட்டி வையம் பதினாலை யும்வளர்க்கும்
பேராட்டி மாதவத்தின் பேறுகாண்— வாரிதிசூழ்

9 வையம் முழுதறிய வாங்கும் சிலைமாரன்
எய்யும் கணைபடைத்த ஏற்றங்காண்—துய்யகுழல்

---

உறைபதி—திருக்காளத்தி. 8 பெண்ணை—பனை, பேரூர் —மதுரைநகர், 7—48, திருஞானசம்பந்தர் மங்கையர்க் கரசியார் வேண்டுகோளை ஏற்று மதுரைமாநகரை அடைந்தார், அங்குப் பாண்டியமன்னன் முன்னிலையில் சைவ சமயமே சிறந்த சமயம் என்பதை விளக்க, 'போக மார்ந்தபூண்முலையாள்' எனத் தொடங்கும் திருநள்ளாற் றுத் திருப்பதிகத்தைப் பனை ஏட்டில் எழுதித் தீயிலிட் டார், அந்த ஏடு எரிந்து சாம்பலாகாமல் பசுமையாக இருந்து சைவ சமயத்தின் மேன்மையை விளக்கியது என்பது புராண வரலாறு. 9 திருமலை—திருக்கழுக் குன்றம், 250 பாட்டுண்டஊர்—திருக்கச்சூர், 1 ஒரு புத்தன்—சாக்கிய நாயனார், 2 பிரான் தோன்றுதலும்— திருவேகம்பநாதர் வீதியில் வருதலும், பைந்தொடி— பெதும்பை 3 ஆயம்—மகளிர்க் கூட்டம் 7 அறியாயோ —நீ அதனை அறிய மாட்டாயோ, 8 வையம் பதினா லையும்—பதினான்கு உலகங்களையும், மாதவத்தின் பேறு—உமாதேவியின் பேறாகும் அது, 9 மாரன்— மன்மதன் துய்யகுழல்—தூய கூந்தலையுடைய,

260 பண்பிறந்த சொல்லாய் பலசொல்லி ஏனிந்தப்
பெண்பிறந்தார்க் கெல்லாம் பெருமைகாண்— மண்
பரவி

1 ஏத்தும் இறையாள் இருகொங்கை யால்வளையால்
சாத்திய கோலத் தழும்புகாண்— பார்த்தருளாய்

2 என்னும் அளவில் இலங்குமனத் துட்காதல்
பொன்னனைய மெய்யில் புறம்பொசியக்— கன்னி
வெயில்

3 தீண்டமலர்வதொரு செந்தா மரைமுகைபோல்
காண்டகைய செவ்விக் கவின்படைத்தாள்— மீண்ட
ரனும்

4 கோல மயிலைக் குறிப்பாற் கடைக்கணித்தாற்
போல முறுவலுடன் போயகன்றான்— மாலைமதன்

5 செங்கை வரிசிலையைச் சேரத் தொடைமடக்கி
எங்கள் பெருமானோ(டு) ஏகினான்— மங்கை

மங்கை வருணனை

6 புடையோத ஞாலமெலாம் போர்மதனன் வேதக்
கிடையோது விக்குமொரு கிள்ளை— விடமும்

7 வளருங் கொடுங்கொலையும் வஞ்சனையும்பொய்யும்
களவும் குடிபுகுதுங் கண்ணாள்— தெளிதேனும்

8 சீல உததி அமுதும் செழும்பாகும்
பாலும் உதவும் பனிமொழியாள்— மாலுதவு

---

260 மண் பரவி ஏத்தும்—மண்ணுலக மக்கள் வணங்கித் துதிக்கும், 1 இறையாள்...தழும்புகாண்—உமாதேவி உண்டாக்கிய தழும்பு, 2 கன்னிவெயில்—இளவெயில், 3 முகை—அரும்பு, கவின்—அழகு, செவ்விக்கவின்—இளமை அழகு, 4 மயில்—பெதும்பை. அரனும் போயகன்றான்—ஏகம்பர் நீங்கிச் சென்றருளினார், 6 வேதக்கிடை—வேதம் பயில்வோர் கூட்டம், கிள்ளை—கிளி, 8 உததி அமுதும்—கடலில் தோன்றிய

9 மிக்க திருவழகின் வெள்ளத்(து) எழுந்தஇரு
மொக்குள் அனைய முலையினாள்— மைக்குழலின்
270 பூவின் மிகுபொறையாள் பூணார மென்முலையாள்
நோவ அடியிட்ட நுண்ணிடையாள்—ஆவிபெற
1 ஆர்வம் உளதாக ஆடவர்தம் மேல்வைத்த
பார்வை அறியும் பருவத்தாள்—சேரச்
2 சுடருற்ற பூவளைக்கைத் தோழியரும் தானும்
நெடுமத்த வாரணத்தின் நின்று—விடையோன்பால்
3 அன்னத்தைத் தூதுவிட அங்கையிற் கொண்டனள்
போல்
பல்நித் திலநிரைத்த பந்தேந்தி—அன்னதுதான்
4 பாவை ஒருபாகன் பாலணுக மாட்டாமல்
போவதுவும் மீள்வதும் போல்தோன்ற—மேவி
5 நெறித்திருள் கொண்டை நெகிழ்ந்து ததும்ப
நறும்புழு கின்கண் நனைந்து—செறிந்து
6 சுரும்பின் இனங்கள் சுழன்று சுழன்று
நரம்பென எங்கும் நணுங்க—விரும்பி
7 இருங்குழை அஞ்ச எறிந்திரு கண்கள்
நெடுங்குமி ழின்கண் நெருங்க—வடங்கொள்
8 மணங்கமழ் குங்கும வண்டல் அணிந்து
சுணங்கணி கொங்கை துளங்க—வணங்கி
9 மருங்குல் தளர்ந்து வருந்த வருந்த
இருங்கலை கொஞ்சி இரங்க—நிரம்பி

---

அமுதமும். 9 அழகின்வெள்ளத்து எழுந்த—அழகாகிய வெள்ளத்தில் தோன்றிய 270 பூவின் மிகுபொறையாள்—பூமிபோல மிக்க பொறுமையுடையவள், 1 பார்வை அறியும்—குறிப்பை அறிகின்ற, 2 சுடருற்ற—ஒளி பொருந்திய, விடையோன்-ஏகம்பரிடம், 3 பல்நித்திலம்—பல முத்துக்களை, 5 புழுகின் கண்—நறுமணச்சாந்தில், 6 சுரும்பு—வண்டு, நணுங்க—நெருங்க, 9 மருங்குல்—இடை,

280 இலங்கு பதங்கள் இடுந்தொறும் நின்று
சிலம்பு சதங்கை சிலம்ப— நலந்திகழும்

1 வல்லியினி(து) ஆட மடவார் அணைந்துமலர்
வில்லி புரிவித்த மெய்த்தவமே— நல்லமட

2 மானே கலாப மயிலே மலர்பொழியாத்
தேனே திரையளித்த தெய்வமே— கானேயும்

3 கோவை இதழ்வாய்க் கொடியே நமக்கிந்தப்
பாவியிடை செய்த பகையுண்டோ— மேவியுடன்

284 மன்னும் சிறையன்றில் மன்றிற் பனைமடல்மேல்
இன்னும் சிலநாள் இருந்தாலோ— முன்னமே

5 வென்றே இருக்கும் விழியுடனே உள்ளபகை
இன்றே மதன்முடிக்க எண்ணமோ— வென்றிமதன்

6 சேரும் வளைமலரால் தீண்டப் பெறுவாழ்(வு)இவ்
ஆரமணிப் பந்துக்(கு) அமையாதோ— பாருலகில்

7 தாவில் தகைமைத் தபோதனர்தம் காலத்தே
ஆவி யுடனிருந்தால் ஆகாதோ— பாவாய்

8 அமையும் அமையுமெனும் அவ்வளவில் தேர்மேல்
உமையொரு பாகம் உடையோன்— சயரமுக

9 வீரனுக்கும் மெய்யன்பால் மேவும் திருநீற்றுச்
சேரனுக்கும் சோழனுக்கும் தென்னனுக்கும்—
ஊரனுக்கும்

---

280 சதங்கை சிலம்ப—சதங்கை ஒலிக்க, 1 வல்லி இனிதாட—மங்கை இனிதாக நடனமாட 2 மானே, மயிலே, தேனே, தெய்வமே—விளிகள். 284 அன்றில்—ஒருபறவை. அதன் குரல் தனித்திருப்பவருக்குத் துன்பம் தரும்.

''கோதைநல்லீர், சழக்கு அன்றில் வாய்பிளந்தால்
உய்ய லாமென்று சாற்றுமினே'' அழகரந்தாதி—16

''அன்றில், ஒருதரம் கத்தும் பொழுதும்
பொறாளென் ஒருவல்லியே''—திருவேங்கடத்தந்தாதி 9

290 ஆரணற்கும் வாசவற்கும் அல்லாத தேவருக்கும்
நாரணற்கும் ஏனோர்க்கும் நாதனார்—
போர்முகத்தில்

1 ஆமநாட் கொண்டதலை ஆட்டுத் தலையாக
மாமனார்க்(கு) ஈந்த மருகனார்— தாமாக

2 இங்கெமையாட் கொள்ள எழுந்தருளப்
பெற்றோமென்(று)
அங்குளமின் னார்கண்(டு) அகமகிழச்—செங்கேழ்

3 வயங்கு மணிமாட மாமறுகில் தோன்ற
வியந்தமணிப் பந்தாடல் விட்டு—நயந்தணுகித்

4 திண்தோளும் மார்பும் திருநீல கண்டமும்
கண்டோரை வாழ்விக்கும் கண்மலரும்—
கண்டிறைஞ்சித்

5 தூய பவளம் துவளுற்றாள் தோழியரும்
தாயரும் நிற்கத் தலைப்பட்டாள்— தீய

6 எறியும் மழுவுடையார் இம்மாதின் காதல்
சிறிதும் உணரார்போல் செல்லக்— குறைவில்

7 மறைபுகலும் பூசை மனுவால யத்தில்
உறைதிருவே கம்பம் உடையீர்—செறியிருளில்

8 பந்தணைக்கும் செங்கைப் பரவைபால் சங்கிலிபால்
வந்துழலும் தூது மறந்தீரோ— நொந்தொசியும்

9 சிற்றிடை புல்லத் திருமார் பகங்குழைந்தீர்
நெற்றி விழியுடையீர் நீரன்றோ—ஒற்றியூர்

---

289 திருநீற்றுச்சேரன்-சேரமான்பெருமாள், தென்னன் —பாண்டியன், 290 ஆரணன்—பிரமன், வாசவன்— இந்திரன், நாரணன்—திருமால், நாதனார்—தலைவர், 1 மாமனார்க்கு—தக்கனுக்கு, மின்னார்—மகளிர், 3 மா மறுகில்—பெரியவீதியில், அணுகி—நெருங்கி, 5 துவளுற் றாள்—(மங்கை)தளர்ச்சியுற்றாள், 6 மழுவுடையார்— திருவேகம்பர், 7 செறியிருளில்—மிகுந்தஇருளில். 298 பரவைபால்சங்கிலிபால்—பரவையாரிடத்தும்

300 பெண்ணோ வறிவார்தம் பேரின்று தொட்டுமக்கு
விண்ணோர் பெருமானே வேண்டாவோ—
வண்ணம்

1 அமைந்தாரார் காதலினால் ஆர்தலையிற்
பெண்ணைச்
சுமந்தாரார் மற்றுமைப்போல் சொல்லீர்—
அமைந்து

2 துகைத்து மதுகரத்தால் தோடுழுதார் தந்து
நகைத்துமுகம் பார்த்து நடவீர்— முகத்திலிவை

3 கண்ணன்றோ எப்படியும் காதலித்தாள் தானுமொரு
பெண்ணன்றோ கச்சிப் பெருமானே— எண்ணில்

4 இருக்கிலறம் சொன்னீர் எனுமாதை விட்டுத்
திருக்கடைக்கண் வைத்தவர்போல் செல்ல— ஒருக்
காலும்

5 ஏவுண்(டு) அறிகிலளென்(று) எண்ணாதே
ஏவுண்டால்
ஆவி படுவ(து) அறியாதே—பாவி

6 விறல்வேள் சிலையம்பு விட்டான்தன் அம்பின்
மறல்வேல் விழியாள் மனத்தே— பிறைமுடியார்

7 பாதி கருகப் படுபஞ்ச பாணமதிங்(கு)
ஏது படுத்தா(து) இளையாளைக்— காதலுக்குச்

8 சங்கம் விழுமென்றும் தாழ்கலைநில் லாதென்றும்
அங்கம் பசலைநிறம் ஆமென்றும்— திங்கள்நிலா

சங்கிலியாரிடத்தும், தூதுமறந்தீரோ—தூது சென்றதை மறந்துவிட்டீரோ, 9 சிற்றிடைபுல்ல—உமையவள் தழுவ 300 பெண்ணோவு—பெண்ணின் துன்பத்தை, 1 பெண்ணை உமைப்போல் தலையிற்சுமந்தாரார்—உம்மைப்போலப் பெண்ணைத் தலையில் சுமந்தவர் யாவர், 2 தார்தந்துநடவீர்—உமதுகொன்றை மாலையை அளித்துச் செல்லுங்கள், 4 இருக்கு—இருக்குவேதம், எனுமாதை—என்றுகூறிய மங்கையை 6 விறல் வேள்—

9 ஈரம் சுடுமென்றும் ஏழிசைவேய் தீயென்றும்
ஆரம் சுடுமென்றும் அன்றறிந்தாள்— சோர்வுற்(று)

310 அடங்கும் அறிவினளாய் அன்னையர்தம் தோள்மேல்
தடங்கண் மயில்தளர்ந்து சாய்ந்தாள்— மடந்தை

## மடந்தை வருணனை

1 இளையார் மனம்வளைய எய்யுமதன் செங்கோல்
வளையா வகையசையும் வல்லி— அளகநறை

2 தேங்கு கருமுகிலும் செவ்வாய் முருக்குமொளி
தாங்குபுரு வத்திந்த்ர சாபமும்— ஆங்கழையும்

3 வாய்ந்த மொழிக்குயிலும் மைக்கண் கருவிளையும்
பூந்தரளம் சேர்கழுத்தும் பூங்கமுகும்— ஏய்ந்தநலம்

4 முல்லை நகையும் முலைக்கோங்கும் கைக்காந்தள்
மல்லல் மலரும் வரிச்சுணங்கா— மல்லிமல

5 வேங்கையும் சாயல் மயிலும் வியனழகும்
தாங்கு திருநிறத்த சண்பகமும்— வாங்குமிடை

6 மின்னும் பதச்சூத மென்குழையும் கொண்டொன்றாய்
மன்னியகார் வேனிலுடன் வந்ததென— மின்னுசுதை

7 பக்க நிலவெறிக்கப் பத்மரா கத்துவெயில்
மிக்க அரங்கத்து மேல்நின்று— முக்கணனைத்

---

மன்மதன். வேல்விழியாள்—மங்கை, 8 சங்கம்விழும்—வளையல் கழலும், கலை—ஆடை, 9 நிலாஈரம்—நிலா ஒளி. வேய்—வேய்ங்குழல், ஆரம்—சந்தனம், 310 தடங்கண் மயில்—மங்கை, 307—10 காதலுடையவர்க்குக் கைவளை கழலும், ஆடைதளரும், அங்கம் பசலை நிறமாகும், வேய்ங்குழல் வருத்தும், சந்தனமும் தண்மதியும் சுடும் என்பதை மங்கை அறிந்தாள். 311 இளையார் மனம்வளைய—இளைஞர் உள்ளம் தளரும்படி, 2 புருவத்திந்த்ர சாபம்—புருவமாகிய இந்திரவில், 4 முல்லைமுகை—முல்லையரும்பு போன்ற பற்கள், 7 அரங்கம்—மேடை,

8 தேவர் நெருங்கும் திருமயா னம்பார்த்துத்
தாவில் திருமேற் றளிபார்த்து— மேவி
9 அரன்விடா தாளும் அனேகதங்கா பார்த்துப்
பரவுங்கா ரைக்காடு பார்த்துப்— பெரிதிறைஞ்சிக்
320 கங்கைகொண்டான்மண்டபமும்கண்டுமனமகிழ்ந்து
மங்கைகொண்டான் வாழும்மனைபார்த்துத்-திங்கள்
1 முடித்த முடிக்கு முடிகொடுத்த சம்பன்
படைத்ததுலாமண்டபமும்பார்த்து—விடைக்
கொடியோன்
2 கச்சாலை யும்பார்த்துக் கம்பர்தம் பாடியெனும்
பொற்சாலை யும்பார்த்துப் பூவைமொழிப்—பச்சை
நிறச்
3 சைவ முதல்வி தவஞ்செய்யப் பெற்றதொரு
தெய்வவுல காணித் திருக்குளமும்— துய்ய
4 அறச்சாலை யும்பார்த்(து) அறுசமயம் வாழும்
புறச்சாலை யும்பார்த்துப் பூவை— சிறப்புடைய
5 இந்நகர்போல் எந்நகரும் இல்லையிமை யோர்பதியும்
உன்ன அரிதிதனுக்(கு) ஒப்பென்ன— அன்னநடை
6 மானே இதன் பெருமை வல்லவரார்
சொல்லுகைக்குத்
தானே உவமை தனக்கல்லால் —மானார்கண்

---

8 திருமயானம்—திருக்கச்சிமயானம், அனேகதங்கா—அனேகதங்கா வதம், (திருக்கச்சிமயானம், திருக்கச்சிமேற்றளி, அனேகதங்காவதம், திருநெறிக் காரைக்காடு ஆகியவை காஞ்சிபுரத்திலுள்ள கோயில்கள்) 320 மங்கை கொண்டான்மனை—திருவேகம்பம், 1 திங்கள் முடித்த முடிக்கு பிறையணிந்த திருவேகம்பர் திருமுடிக்கு, முடி கொடுத்த சம்பன்—மணிமகுடம் செய்து வழங்கிய சம்புவ ராயன், துலாமண்டபம்—துலாபார மண்டபம், 3 திருக்குளம்—உலகாணித்தீர்த்தம், 324 அறச்சாலை—அறம் செய்யுமிடம், புறச்சாலை—புறச்சமயிகள் வாழுமிடம்.

7 பொற்றொடியாள் கண்ணுதலைப் பூசித்
தறஞ்செய்யப்
பெற்ற(து) இதுபோல் பிறிதுண்டோ—
மற்றவனுக்(கு)
8 அந்தமுத லில்லாத ஆதியொரு மாவடிக்கீழ்
வந்துவெளிப் பட்டநகர் மற்றுண்டோ— நந்தா
9 மருக்காவில் மூன்று மணிவிளக்கு மன்னி
ஒருக்காலும் நீங்கா(து) உறையும்— திருக்காமக்
330 கோட்டமெனில் இங்கே குலவும் கனகமழை
ஈட்ட முகில்பொழிந்த(து) இவ்விடத்தே—
கூட்டியபேர்
1 ஆசையுடன் மால் பத்(து) அவதாரம் தம்மிலும்
வந்(து)
ஈசனைப் பூசித்த(து) இவ்விடத்தே— பேசுநலம்
2 ஒன்று புரிந்தது ஒருகோடி ஆகுமிதில்
என்று மொழிகின்ற எல்லைக் கண்—மன்றல்
3 திருக்கொன்றை மாலையளி செவ்விமணம் உண்டு
தருக்கிய நாதம் ததும்ப— எருக்கமலர்
4 பாயும் சடாடவிமேல் பாகீ ரதிமுகங்கள்
ஆயிரமும் வீசி அலையெடுப்ப— ஓயா(து)
5 அருகிலிரு பாலும் அருமறைகள் நான்கும்
பரிகலமும் மாலையுடன் பாட— ஒருதன்

---

அறுசமயம்-சைவம், வைணவம், சாக்தம், சௌரம், காண பத்தியம், கௌமாரம் என்பன, 5 இமையோர்பதி—தேவ லோகம், ஒப்பு உன்னஅரிது—ஒப்பாக நினைக்க இயலாது, 7 பொற்றொடியாள்—உமையவள் 8 ஆதி—முதல்வன், மாவடிக்கீழ்—மாமரத்தின் கீழே, 9 காமகோட்டம்—காமாட்சி அம்மன் ஆலயம், 330 கனகமழை—பொன் மாரி, 1 மால்—திருமால், 2 மொழிகின்ற எல்லைக் கண்—கூறும்போது, 3 மாலையளி—மாலையிலுள்ள வண்டுகள், 4 சடாடவி—சடைக்காடு, பாகீரதி—கங்கை,

6 திருக்கைத் தமருகத்துத் தெய்வச் சுருதி
பெருக்கத் திசைமுகத்திற் பெய்ய—விருப்பொடரி
7 தேடும் திருவடியில் செம்பொற் சிலம்போசை
ஊடும் ககனத்(து) உலாய்நிமிர— நீடு
8 நடஞ்செய்(து) அருள்காக்கும் நாயகரும் வானந்
தொடும்பொன் மணித்தேரும் தோன்ற— கொடுங்
குழையாள்
9 கோதை அசையக் குழலசையக் கோல்வளைக்கை
மாதர் பலருடனே வந்திறைஞ்சிச்— சோதி
340 மிகக்கருணை எப்போதும் வீற்றிருந்த செவ்வி
முகத்தழகைக் கண்ணால் முகந்தாள்— நிகர்ப்பில்
1 தவளத் திருநீறும் சந்தனமும் தோய்ந்த
பவளத் திருத்தோள்கள் பார்த்தாள்— இவளும்
2 மலர்மார்பில் ஆசையெலாம் வைத்தாள்மைக்
கண்ணீர்
புலராமல் நெஞ்சம் புலர்ந்தாள்— உலகுண்ட
3 திண்பால் விடையீர் திருத்தோள் நலங்கண்ட
பெண்பாவி ஆவி பெறுமாறு— கண்பாரீர்
4 என்றபொழு திற்கச்சி ஏகம்பர் ஏகுதலும்
மன்றல் மலர்சொரிய மாரவேள்—நின்றயர்ந்த
5 தத்தை மொழிக்குயிலைத் தாயர் எடுத்தணைத்துச்
சித்ரமணி மண்டபத்தில் சேர்வித்து— முத்தினொரு
6 பந்தரும் இட்டார் பனிநீரை யும்சொரிந்தார்
செந்தளிரின் பாயலின்மேற் சேர்த்தினார்—
சந்தனமும்

---

6 தமருகம்—உடுக்கை, சுருதி—ஓசை, திசைமுகத்து—எல்லாத் திசைகளிலும், 7 ககனம்—ஆகாயம், 8 தேரும் தோன்ற—தேர்வீதியில்வர, கொடுங்குழையாள்—மடந்தை, 9 கோதைஅசையகுழலசைய—மாலையும் கூந்தலும் அசையும்படி, வந்திறைஞ்சி—வந்து ஏகம்பரை வணங்கி, 340 கண்ணால் முகந்தாள்—கண்களால் பார்த்

7 பூசினார் கொண்டமயல் போமோவென் றாயிரமும்
பேசினார் தாயர் பெரிதிருந்து— கூசாதே

8 தண்ணெண் கழுநீரும் சாத்தினார் பார்த்தயலார்
எண்ணம் உமக்கொன்றும் இல்லையோ— ஒண்ணு
தலீர்

9 முத்தி னொருபந்தல் முழுநிலா வீசுநிழல்
நித்தருறை தேமா நிழலாமோ— பித்துளதோ

350 வாசப் பனிநீர் மணலை அவராகப்
பூசித்த ஆற்றின் புனலாமோ— பாசிழைக்குப்

1 பாயல் குளிரி படுத்தாலப் பாய்விடையோன்
கோயிலிள மாவின் கொழுந்தாமோ— நேயமுள

2 பொற்றொடி நல்லீர் புனைசந் தனச்சேறு
நெற்றி விழியவர்தன் நீறாமோ— கற்றறிவின்

3 நூற்றா யிரநீர் நொடித்தால் அவையிவளுக்(கு)
ஏற்றார் திருவைந் தெழுத்தாமோ— மேற்றான்

4 பிணைந்த அணிகழுநீர் பெய்வளைக்குக் கம்பர்
அணிந்த திருக்கொன்றை ஆமோ— அணங்கனையீர்

5 என்று மொழிய இவையவை ஆயினபோல்
நின்ற(து) இவளாவி நீங்காமல்— அன்றே

6 தெரியவே யாவர்க்கும் சிந்தா குலமும்
உரையும் தெளிவுதரல் உற்றாள்— அரிவை

---

தாள், 1 திருத்தோள்—அழகியதோள்கள், 3 விடையீர்—விளி, கண்பாரீர்—கருணைசெய்யுங்கள், 4 மாரவேள்—மன்மதன் மலர் சொரிய—மலர்க்கணைகளைஏவ, நின்றயர்ந்த—நின்று தளர்ச்சியுற்ற, 5 தத்தை—கிளி போன்ற, குயிலை—மடந்தையை, தாயர்—தாய்மார், மண்டபத்தில் சேர்வித்து -மண்டபத்தில் சேர்த்து, 6 பனிநீர்—குளிர்ந்தநீர், பாயல்—படுக்கை, 7 மயல்-மயக்கம் ஆயிரமும் பேசினார்—பலமந்திரங்கள் கூறினர், 9 நித்தர்—திருவேகம்பர், 350 ஆற்றின்புனல்—கம்பை நதிநீர், 2 சந்தனச்சேறு—சந்தனக்குழம்பு, 4 பெய்வளை—மடந்தை.

## அரிவை வருணனை

7 கமல மலர்சுமந்தாள் கட்டழகும் மேனாள்
அமுதமுடன் வந்தாள் அழகும்— சிமையமிசை
8 கூசி மழைதவழும் கொல்லிக் கிரிபடைத்தாள்
பேச அரியதொரு பேரழகும்— வீசுமிளந்
9 தென்றலும் வென்றிச் சிலைமாரன் ஐங்கணையும்
மன்றலுமொன் றான வடிவினாள்—பொன்றுமொரு
360 காலமும் பார்த்துக் கயிறும் பிடித்தொருவன்
சூலமும் ஏந்திச் சுழலாமல்— மால்செய்(து)
1 உலவா நகையா ஒசியா அசையா
குலவா உயிருண்ணும் கூற்று— தலைவிக்(கு)ஐங்
2 கோணம் பெறவகுத்த கோயில்போல் யாவரையும்
காணுந் தொறுமயக்குங் காட்சியாள்— பேணி
3 மகிழ்வுற்ற ஆயமுடன் வண்தரள மாலை
திகழ்சித்ர மண்டபத்திற் சேர்ந்து— மகர
4 விடந்தோய் விழியங்(கு) எழுதியவை எல்லாம்
நெடும்போது பார்த்தகலா நிற்ப—அடைந்தெவரும்

---

7 கமலமலர்சுமந்தாள்—கலைமகள், அமுதமுடன் வந்தாள்—இலக்குமி, சிமையமிசை—உச்சியில், 8 கொல்லிக்கிரி படைத்தாள்—மலைமகள், 9 மாரன்ஐங்கணை—மன்மதனுடைய ஐந்து கணைகள், அவை: தாமரை, மா, அசோகு, முல்லை, நீலமலர் என்பன,

நெஞ்சில் அரவிந்தம் நீள்சூதம் கொங்கையிலே
துஞ்சும் விழியில் அசோகமாம்— வஞ்சியர்தம்
சென்னியிலே முல்லை திகழ்நீலம் அல்குலிலே
அன்னவேள் எய்யுமியல் பாம் —இரத்தினச்சுருக்கம்— 37

ஒருவன்—இயமன், 1 உலவா—உலவி, செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம், நகையா—நகைத்து, ஒசியா—ஒசிந்து, குலவா—குலவி, உயிருண்ணும் கூற்று—உயிரைக் கவரும் எமன் போன்றவள்.

5 இன்ன(து) இதுவிதுவென்(று) எங்களுக்குக் காட்டியருள்
அன்ன நடையாய் அடைவிலென— மின்னிடையீர்
6 வெள்ளி மலைநீங்கி விண்ணோரும் மண்ணோரும்
உள்ளும் பிரானை உமையாள்போய்— உள்ளமிகத்
7 தாங்காத பூசைக்குத் தக்கஇடம் ஈதென்று
நீங்காது நின்ற நிலைபாரீர்— தேங்கமழும்
8 காவி புடைசூழ்ந்த கம்பா நதிப்புனலில்
பாவை படியும் படிபாரீர்— கோவையிதழ்
9 ஓசை அளிகள் உலவம்பி காவனத்தில்
வாசமலர் கொய்யும் வகைபாரீர்—பேசரிய
370 ஆதி அமரர் அறியா அவராக
மாது குவித்த மணல்பாரீர்— கோதை
1 அணியும் இருளோதி அன்பொடுபூ சித்துப்
பணியும் வழிபாடு பாரீர்— இணையிலிமுன்
2 மேவு புளகமுடன் வெண்ணீறு மெய்க்கணிந்து
தேவி யிருந்த செயல்பாரீர்— பூவிற்

2 ஐங்கோணம்...காட்சியாள்—இவ்வடி, ''புகழ்சேர்க்கும் திசைபோல யாவரையும், பார்க்குந் தொறுமயக்கும் பண்பினாள்'' —திருப்பூவண. 371 கண்ணியோடு ஒப்பு நோக்கத்தக்கது, கோயில்—காமாட்சிஅம்மன்ஆலயம், 3 ஆயம்—மகளிர்க்கூட்டம், விடந்த்தாய்விழி—அரிவை, எவரும்—ஆயமகளிர்யாவரும், அடைவில்—முறையாக, 8 காவி—நீலமலர், பாவை—உமையம்மை, 9 அம்பிகா வனம்—உமாதேவிக்குரியமலர்வனம், 370 அவராக— திருவேகம்பராக, 1 இருளோதி—கரியகூந்தலையுடைய பார்வதி, இணையிலி—ஒப்பற்றதிருவேகம்பர், பூவில்— பூமியில், பூ—பூமி, இல்—ஏழனுருபு, கரந்து—மறைந்து, பரந்து—பரவி, மாகம்—ஆகாயம், தோகை—மயில் போன்ற உமாதேவி,

3 கரந்து மழைபொழியாக் காலத்தே கம்பை
பரந்து வரும்பெருக்கைப் பாரீர்—விரிந்தபுனல்

4 மாகம் புதைய வரப்பண்ணித் தம்மையொளித்[து]
ஏகம்பர் நின்ற இடம்பாரீர்— தோகை

5 அரும்புனல்கண்(டு) அஞ்சியவர் ஆகமுறச் சென்று
பரிந்து தழுவியது பாரீர்— புரிந்து

6 மலைக்கு மகள்தன் வழிபா(டு) உவந்து
பலித்த பெரும்பேறு பாரீர்— கலப்பொற்

7 தெரிவையுட னிந்த தேமா நிழலில்
பரமன் இருந்தவிடம் பாரீர்— பொருவில்

8 திருக்கைவளை யால்முலையால் திண்தோளும் மார்பும்
பரித்த திருத்தழும்பு பாரீர்—விரித்தசடை

9 அண்ணல் வெளிப்பட்(டு) அருள்வரங்கள் பாரீரென்(று)
எண்ணும் புதுமை இவையெல்லாம்—ஒண்ணுதலாள்

380 காட்ட அவரும் களிகூர் பொழுதிலொரு
தேட்டம் உளதாய சிந்தையளாய்க்—கூட்டில்

## அரிவை கிள்ளையிடம் கூறியது

1 இருந்த கிளியை இருகரத்(து) ஏந்தி
வருந்திவினை யேன்பெற்ற வாழ்வே...அருந்தவமே

---

7 பொருவில்—ஒப்பில்லாத, 8 கைவளையால்......பாரீர்—கைவளையால் தோளிலும், முலையால் மார்பிலும் தழும்பு உண்டாக்கியது பாரீர், 9 ஒண்ணுதலாள்-அரிவை, 380 தேட்டம்—தெளிவு, அவரும்— ஆயமகளிரும், களிகூர் பொழுதில்—மகிழும்போது, 2 கம்பரணிதாமம்—ஏகம்பர் அணிந்தமாலை, நிலாமுன்றில்—நிலா முற்றத்தில், வேழம்—கரும்பு, 4 வரிசிலையான்—மன்மதன், பகழி—மலர்க்கணைகளை, 6 தென்னன் பொருப்பு—பொதிய மலை, நெருப்பு—தென்றல், 8 சே—எருது, பூவை—

2 தேமென் குதலைதரும் தெள்ளமுதே கம்பரணி
தாமந் தருவாய் தவிருவாய்—யாமெல்லாம்

3 சூழும் நிலவில் சுதைநிலா முன்றிலின்யான்
வாழும் படிநினைக்க மாட்டாயோ— வேழம்

4 திகழும் வரிசிலையான் சேவகங்கள் காட்டும்
பகழிநறும் பூவாகப் பண்ணாய்—இகழ்வார்முன்

5 என்அன்னை ஏதும் இரங்காள் இரவுபகல்
உன்அன்னை உன்னை ஒறுக்குமோ— தென்னன்

6 பொருப்பிற் பிறந்து புகையாக வீசும்
நெருப்புக் குளிர நினையாய்— நிரைத்தரளத்

7 தாரும் கழுநீரும் சந்தனமும் தோய்ந்தபனி
நீரும் குளிர நினைந்திடாய்—பேரரவச்

8 சேவின் மணிவருத்கந் தீர்த்தருளாய் என்றிருந்து
பூவை இனிதுரைக்கும் போதின்கண்— தேவருய்ய

9 ஆலம் இனிய அமுதாக உண்டபிரான்
கோல மறுகு குறுகுதலும்—நீலவிழி

390 தூதுவிடக் கிள்ளைக்குச் சொல்லுவதெல் லாமறந்து
காதலுடன் வந்தவனைக் கைதொழுது— நீதிபுரி

1 இந்தமலைப் பாவை இடப்பாகம் கொண்டுமக்குத்
தந்தவலப் பாகம் தரலாமோ— எந்தைபிரான்

2 கங்கை திருமுடிமேல் கண்ணியலால் வெண்ணீறு
தங்குபுயக் கொன்றை தரலாமோ—சங்கரா

3 எம்பாகம் நீரணைந்தால் இவ்வுடம்பின் பச்சென்ற
செம்பாகம் வந்து சிவக்குமோ— நம்பாநின்

---

பெண் (அரிவை) தேவருய்ய—தேவர்கள் உய்யும்பொருட்டு, 9 ஆலம்...உண்டபிரான்-திருவேகம்பர், ''ஆலந்தானுகந் தமுதுசெய்தானை''—சுந்தரர் தேவாரம், கோலமறுகு—அழகிய வீதியில், நீலவிழி—அரிவை, 392 கண்ணி—தலை யில் அணியும்மாலை, கொன்றை—கொன்றை மாலை.

4 சோதி மணிமுடிமேல் சோமப் பனிக்கொழுந்தை
மோது முதுதரங்கம் மோதாதோ— ஓதாயென்(று)
5 ஆதியுடன் சொல்ல அறம்வளர்க்கும் ஊருடையான்
ஏதும் உரையான் எழுந்தருள— மாதர்
6 அரிந்து மகவை அளித்தவர்கள் ஆக்கும்
சொரிந்த கறியமுதும் சோறும்— அருந்தா
7 விருப்பினொடு செங்காட்டில் வேண்டும் பொழுதோ
திருப்பவளச் செவ்வாய் திறப்பீர்— விருப்பால்
8 வளைந்த திரிபுரத்தை மாள்விக்கும் போதோ
குளிர்ந்த திருமுறுவல் கொள்வீர்— துளங்குநில
9 முத்த வரிசிலையான் மொய்ப்பூங் கணைபுகுந்து
தைத்தபொழு தோதிருக்கண் சாத்துவீர்— மெய்த்த
400 கொடிய விடஞ்சுரரைக் கொல்லும் பொழுதோ
அடைய அருளுடையீர் ஆவீர்— மடமாதர்
1 உற்றதுயர் கேட்பதற்கொன்(று) ஓதாது போகின்றீர்
கற்றதிது வோகள்ளக் கம்பரே— பெற்றவர்தாள்
2 வீசுமழு வால்துணிய வெட்டுமவர்க்(கு) அல்லரது
வாசமலர்க் கொன்றை வழங்கீரோ— பூசித்து
3 வல்லபங்கள் செய்து வழிபடுவார்க்(கு) அல்லாது
புல்ல ஒருவர் பொருந்தீரோ— சொல்லீர்

---

4 சோமப்பனிக் கொழுந்து—பிறைச்சந்திரன், தரங்கம்—அலை, ஓதாயென்று—கூறுங்கள் என்று, 5 ஆதியுடன் சொல்ல—ஏகம்பரிடம் கேட்க, அறம்வளர்க்கும்ஊர்—காஞ்சிபுரம் 8 முறுவல்—புன்சிரிப்பு, 9 பூங்கணை—மன்மதன் மலரம்பு, தைத்த பொழுதோ திருக்கண் சாத்துவீர்—உம்மீது பட்டபோதுதான் கண் திறந்து பார்ப்பீரோ, 400 விடம்சுரரைக் கொல்லும் பொழுதோ—நஞ்சு தேவர்களை அழிக்கும்போதுதான், அருளுடையராவீர்—கருணையுடையவராவீரோ, 1 கூறாது போகின்றீர்—யாதும் கூறாமல் செல்கின்றீர், பெற்றவர்தாள்—தந்தையின் கால்களை.

4 ஒருவா சகமென்ன ஓராது போலப்
பொருமார னைநிறுத்திப் போனார்— தெரிவை

தெரிவை வருணனை

5 ஒருத்தி தவக்குறும்பை ஒட்டியுல கெல்லாம்
திருத்தி மதன் நடத்தும் செங்கோல்— நிருத்தனார்

6 தூது விடச் சங்கிலிபால் தோழனுக்குத் தாமுழன்ற
போதிதுவென் றெண்ணும் புரிகுழலாள்— ஆதிரை
யான்

7 வெண்டிரைநீர் வேணிக்கு வேறுமொரு திங்கள்
நமக்(கு)
உண்டெனவென் றெண்ணும் ஒளிநுதலாள்—துண்ட
மதி

8 வேணி யுடையோன் மிடற்றில் அடக்குதற்கும்
பாணி மிசையசையப் பண்ணுதற்கும்— பாணம்

9 தொடுப்பதற்கும்பார்ப்பதற்கும்சூழ்கழற்காலன்மேல்
விடுப்பதற்கும் எண்ணும் விழியாள்— விடைக்கொடி
யோன்

410 ஆய பிறப்பை அணுகா தவருடைய
தூய பிறப்புணர்த்தும் தோளினாள்— நாயனார்

1 சேமச் சிலையும் சிலையும் இவையென்று
தாமுட் குறிக்கும் தனத்தினாள்—மாமழுவோன்

---

2 துணிய வெட்டுமவர்—சண்டேசுவரர், கொன்றை வழங்கீரோ—கொன்றை மாலை அளிக்கமாட்டீரோ, ''தந்தைதாளொடும்பிறவித்தாளெறிந்து நிருத்தரிரு தாளைச் சேர்ந்த மைந்தர்''—திருவிளை—பாயிரம்—22 4 பொருமாரனை—போர்செய்யும் மன்மதனை, 6 தோழனுக்கு—சுந்தரருக்காக, 7 வேணிக்கு—சடைக்கு, 8 மிடற்றில்—கழுத்தில், 9 விழியாள்—விழிகளையுடைய தெரிவை, 411 சேமச்சிலையும் சிலையும்—பாதுகாப்பான கயிலைமலையும் மேருமலையும், தனத்தினாள்—முலைகளையுடையவள்,

2 தென்றல் படக்குழைந்த தேமாவின் கொம்பரிது
என்றுதிரு வுள்ளத்(து) இனிதெண்ண— ஒன்றாகத்

3 துய்யவளைக் கையும் துவர்வாயும் சோதிதிகழ்
மெய்யும் நிறமும் விளங்குவாள்— மொய்யமரில்

4 தாவும் விடையுடையான் தன்மேல் மலர்வாளி
ஏவும் மதனை எரித்தநாள் — மேவுற்(று)

5 எழும்புகையும் வானமும் என்ன உரோம
ஒழுங்கும் இடையும் உடையாள்— தொழும்சுரரைக்

6 காக்கும் மிடற்றார்க்குக் கச்சாதல் காப்பாதல்
ஆக்க நினையும் அகல் அல்குலாள்—நோக்கரிய

7 தூவி மயிலனையார் சூழ ஒரு கமல
வாவி அருகு மகிழ்ந்திருப்ப—மேவிஅயில்

8 உண்கண் விறலி ஒருத்தி செழுங்களபக்
கொங்கை இணை படைத்த கூற்றமே—எங்குமளி

9 நின்றோ விடுகின்ற நீள் வனசக் கோயில் தனக்(கு)
இன்றோ குடிபுகுத விட்டநாள்—ஒன்றாக

420 விஞ்ச அழகுடையார் வீற்றிருப்ப தல்லாது
கஞ்ச மலரொருத்தி காணியோ—அஞ்சாதே

1 இந்த அழகல்லால் ஏந்துமோ கஞ்சமலர்
தந்த அழகு தனையென்று—செந்திருமுன்

2 சென்று பணியத் திருவால வாயுமணி
மன்றும் ஒரு கடவுள் மாநிழலும்—என்றும்

3 விரும்பி உறைமழுவாள் வீரன் தசாங்கம்
இருந்து விறலிபா டென்னத்—தெரிந்தபெரும்

---

414 மலர்வாளி—மலர்க்கணை, 5 புகையும் வானமும் என்ன உரோம ஒழுங்கும் இடையும் உடையவள், சுரரை—தேவரை, 6 கச்சு—இடைக்கட்டு, காப்பு—கங்கணம், 417 கமலவாவி—தாமரைத்தடாகம், மயிலனையார்—மகளிர், வனசக்கோயில்—தாமரையாகிய கோயில், 8 விறலி—இளம்பெண்,

4 பாகு பலவுடையான் பாட்டுக் கொருவடிவான்
தியாக முதவுந் திருமலையும்—ஆகம்

5 பெருக்கும் அறுகும் பிறைக்கொழுந்தும் பாம்பும்
எருக்கும் முடித்தமண லியாறும்—விருப்பொடரன்

6 அந்தண் பெருந்துறையில் ஆளுடையார்—அம்மணலில்
வந்து சிறந்த வளநாடும்—சந்தும்

7 வடங்கொள் இளமுலையால் வானோர் அறியா
உடம்பு குறிபெற்ற ஊரும்—தொடர்ந்தவரி

8 நீலம்போல் கண்ணார் நிறமெல்லாம் தன்னுடைய
கோலம்போல் ஆக்கும் குளிர்தாரும்—ஆலிலையின்

9 சேக்கைப் புயலின் திருநாபி யில்பனவன்
வாக்கிற் பிறந்த வயப்பரியும்—நோக்கித்

430 திரண்டா யிரங்கயிலை செல்வதெனத் தோன்றும்
இரண்டா யிரங்கோட்(டு) இபமும்—நெருங்கு

1 கடிக்கற் பகவனத்தைக் காசினிமேல் ஆயர்
கொடிக்குக் கொடுத்த கொடியும்— தொடிக்கண்

---

2 திருவாலவாய்—மதுரைகோயில், மன்று—தில்லையம்பலம். கடவுள் மாநிழல்—தெய்வத் தன்மைவாய்ந்த மாவடி, வீரன்—ஏகம்பர், 3 தசாங்கம்: மலை, ஆறு, நாடு, ஊர், மாலை, பரி, யானை, கொடி, முரசு, ஆணை என்பன, 4 மலை—திருக்கயிலை மலை, 5 யாறு—கம்பை நதி, 6 நாடு—தொண்டை நாடு, 7 ஊர்—திருக்கச்சி, 8 தார்—கொன்றை மாலை, 9 பனவன்வாக்கிற் பிறந்த—பிரமனது நாவில தோன்றிய. பரி—வேதமாகிய குதிரை, 430 இபம்—அயிராவணம் ஆலிலையின் சேக்கைப் புயல்—ஆலிலைபாகிய படுக்கையையுடைய திருமால்.

"பாலன் தனதுருவாய் ஏழுலகுண்டு ஆலிலையின்
மேலன்று கண்வளர்ந்தாய் மெய்யென்பர்"

தண்டி மேற்கோள்

1 ஆயர்கொடி—நப்பின்னை. கொடி—திருமாலாகிய

2 தழங்கு சதியுடையான் தாண்டவத்துக்(கு) ஏற்ப
முழங்கு திருக்கை முரசும்— தொழும்பால்
3 அடுத்த சுரர்பரவ அண்டாண்ட மெல்லாம்
படுத்ததிரு ஆணையுமே— பாடத்— துடிக்கவிதழ்
4 நெஞ்சு தளர்ந்து நெறிமயங்கி நீடுயிர்த்து
வஞ்சி அறிவழிந்து மாலாகி—அஞ்சாதே
5 ஆகம் பிரியா அவளை அறியாமல்
ஏகம்பர் தாமேவந்(து) எய்திலேம்—
மோகங்கொண்(டு)
6 ஆர மருவி அகல்மார்பில் என்னையவர்
சேர வரஅணைக்கத் தேடிலேம்— பாரடையத்
7 தாவும் விடையுடையோன் தன்மேல் தனத்தழும்பு
மேவும் கலவி விளைக்கிலேம்— பூவினறும்
8 பாயல் அணுகிநலம் பாராட்டி என்னையவர்
ஆய புலவி அகற்றிலேம்— நேயமுடன்
9 போக வுததியினில் புக்கழுந்தி நெக்குருகி
ஆகம் இருவருமொன்(று) ஆகிலேம்— ஆகத்(து)
440 அணைத்த தறிய அவரணிந்த நீறென்
பணைத்த முலைமேல் படிலேம்— மணிக்களத்தார்
1 இன்று மணந்தபடிக்(கு) என்னுடம்பு சான்றாகக்
கொன்றை மணநாறக் கூடிலேம்— என்றிருந்து
2 வாழும் படிதன் மனத்திற் பிறந்ததெல்லாம்
தோழி யுடனிருந்து சொல்லுங்கால்— சூழும்

---

இடபக் கொடி 2 முரசு—உடுக்கை, 3 ஆணை—உலகைப் படைத்துக்காத்து அழிக்கும் ஆணை, இதழ்—உதடு, 4 வஞ்சி—தெரிவை, மாலாகி—அறிவு மயங்கி, 5 எய்திலேம்—அடைந்தேமில்லை, 9 போகவுததி—இன்பக்கடல், 440 நீறு—திருநீறு, படிலேம்—பட்டேமில்லை, 2 தன் மனத்திற்பிறந்ததெல்லாம்—தன் உள்ளத்தில் தோன்றிய யாவும்

3 நெருக்கார மாலை நெடுநிலா வீசும்
திருக்கா வணநிழலிற் சேயும் திருத்தாள்சேர்

4 சீலம் படைத்துத் திருநீ றிடவயிற்றிற்
சூலை கொடுத்தாண்ட தொண்டனும்—ஓலையுடன்

5 சென்று தடுத்துத் திருவெண்ணெய் நல்லூரில்
அன்று படைத்த அடியானும்—கொன்றைநறும்

6 தேன்பாய் முடிமேல் திருச்சேய்ஞ லூர்தன்னில்
ஆன்பால் சொரிந்தாட்டும் அந்தணனும்—
தேன்போலத்

7 தித்திக்கு மாறு திருவாச கம்சொன்ன
பத்திப் பெரும்பெருக்குப் பாவலனும்—எத்திசையும்

8 செல்ல அரிய சிவதத் துவமல்லா(து)
இல்லை எனஎழுதி விட்டோனும்—நல்லதவம்

9 சூழ்வாரும் சூழ்ந்துவரச் சூதத் திருநிழலின்
வாழ்வோன் மணிமறுகு வந்தணுகத்—தாழ்குழலும்

450 முற்ற நினைந்தவெல்லாம் முன்வந்து கைபுகுதப்
பெற்றவர்போல் வந்து பெரிதிறைஞ்சிப்—
பொற்றொடி

1 துய்ய புரிநூலும் தோளும் திருமார்பும்
மையல் பெருக வரநோக்கித்—தையலாள்

2 ஈசன்தன் மார்பும்நல் எண்தோளும் நீங்காத
வாச நறுங்கொன்றை மாலையே—பாசறையில்

3 வீசு பனிநீரும் மிக்கஅகில் சந்தனமும்
பூச உனக்குப் பொறுக்குமே— வீசிவரும்

---

3 திருக்காவணம்—முத்துப்பந்தல், சேய்—ஞானசம்பந்தர், 4 தொண்டன்—நாவுக்கரசர். 5 அடியான்—சுந்தரர், 6 அந்தணன்—சண்டேசுவரர் 7 பாவலன்—மாணிக்க வாசகர் 8 எழுதிவிட்டோன்—மெய்கண்டார் 9 வாழ்வோன்-திருவேகம்பர், மறுகு—வீதி, 450 பொற்றொடியாள்—தெரிவை, 1 துய்யபுரிநூல்—தூய முப்புரிநூல்,

4 போதாடும் தென்றல் புகுதுகைக்கு மாளிகையில்
வாதா யணந்திறந்து வைப்பையே— நாதம்

5 அளவே அளவே யென்(று) ஆயரிரா வூதும்
துளைவேய் உனக்குச் சுடாதே—குளிர

6 அடுத்த செழுங்கழுநீ ராலே படுத்த
படுக்கை சருகு படாதே—கடக்கவரி(து)

7 ஆயவிரி கங்குல் அடல்மா மதன்சொரியும்
சாயகங்கள் உன்மீது தையாவே— மாயஇரா

8 வெண்ணிலா வூழி எரித்தாலும் இங்குனக்குத்
தண்ணிலா ஏதுந் தழலாதே—நண்ணுமயல்

9 அய்ய விடையாரும் அன்னையரும் தாமொறுக்கும்
வெய்ய வுரைகேட்க வேண்டாவே— பையவரும்

460 சேவின் மணியிசைக்கும் தீரா அலைகடற்கும்
கூவும் குயிலுக்கும் கூசாயே —மேவிய நின்

1 முன்றில் உயர் பனையின் மூரி மடற் குடம்பை
அன்றில் அரிக்குரற்கும் அஞ்சாதே—என்றாலும்

2 வெய்ய பசலை விளைவானேன் மேனியெங்கும்
துய்யமலர்க் கண்ணீர் சொரிவானேன்—செய்ய

அங்கை

3 வண்டு விழுவானேன் மற்றெனக்குச் சொல்லென்று
கெண்டை விழிமாது கேட்டளவில்—திண்டிறள்வேள்

4 காவி ஒழிந்த கணை சொரிந்தான் அவ்வளவில்
தேவர்கள் நாதன் தெருவகன்றான்—பாவை மேல்

---

454 வாதாயணம்—சன்னல் 5 வேய்—வேய்ங்குழல், 7 விரிகங்குல்—நீண்ட இரவில், சாயகங்கள்—அம்புகள் 460 சேவின்—எருதினுடைய. 1 குடம்பை—கூடு, அன்றில்—ஒரு பறவை இதன் குரல் தனித்திருப்பவருக்கு வருத்தந்தரும், 2 வெய்ய பசலை—கொடிய பசலை நிறம், 3 வண்டு—வளையல், வேள்—மன்மதன், 4 காவி ஒழிந்த கணை—நீல மலரல்லாத மற்ற கணை களை, சொரிந்தான்—ஏவினான்,

5 ஆர வடமும் அணிந்தார் குளிர்ந்தபனி
நீரும் மடவார் நிரப்பினார்—பேரிளம்பெண்
பேரிளம்பெண் வருணனை

6 திண்மை மதனன் செலுத்துகின்ற பேராண்மை
பெண்மை அழகின் பெரும்பெருக்குத்-தண்மலரோன்

7 நாவும் அளவிறந்த ஞானத்தால் பேரழகால்
பூவும் அரசாளப் போதுவாள்—தேவர்

8 அரசன் இமையாத ஆயிரங்கண் சூழத்
தருநிழலின் வாழத் தருவாள்—விரவி

9 இனிய கலவிநலம் எல்லாம் மதனன்
மனைவியையும் கற்பிக்க வல்லாள்—கனைகடல்சூழ்

470 பாரை பெரிதுவக்கப் பண்ணிப் பழையசுரர்
ஊரைப் பெரிதுவக்க வொட்டாமல்—வாரிட்டுக்

1 கட்டுண் டனமென்று நாணிக் கவிழ்ந்து தலை
இட்டனபோல் சாய்ந்த இளமுலையாள்—கிட்டரிய

2 சைவப் பெருமைத் தமிழ்நா டறிவித்த
தெய்வப் புலவன் திருமுறையும்—வெவ்வமணர்

3 ஈருமத யானைக்(கு) இடும்போதும் அஞ்செழுத்தைத்
தேரும் அரசன் திருமுறையும்—சேரனுடன்

---

மன்மதன் கணை இயல்பு,

464 நினைக்கும் அரவிந்தம் நீள் பசலை மாம்பூ
அனைத் துணவும் நீக்கும் அசோகு—வனத்திலுறு
முல்லைக் கிடைகாட்டும் யாதே முழுநீலம்
கொல்லுமதன் அம்பின் குணம்—

இரத்தினச் சுருக்கம் 11

5 ஆரவடம்—முத்து மாலை, பனி நீர்—குளிர்ந்த நீர், 6 மலரோன்—பிரமன், 7 ஞானத்தால்—அறிவால், 8 தருநிழலில்—கற்பகத்தருவின் நிழலில், 470 பாரை—உலகிலுள்ள மக்களை. ஆகுபெயர். சுரரூரை—தேவலோகத்தவரை, 472 தெய்வப்புலவன் திருமுறை—ஞானசம்பந்தர் அருளிய திருமுறைகளையும், 3 அரசன் திருமுறை—நாவுக்கரசர் அருளிய திருமுறைகள்,

4 அன்று கயிலைக்(கு) அதிமதவெள்ளானையின் மேல்
சென்ற பெருமான் திருமுறையும்—தென்திசையின்

5 மாடப் பெருந்துறையில் வந்த அருட்கோலம்
தேடித் திரிந்தோன் திருமுறையும்—கூட இனி(து)

6 ஓதி அவர்கள்திரு உள்ளக் கருத்தினுள
கோதில் நிலைமையெலாம் கும்பிட்டுச்—சோதிதிகழ்

7 அஞ்செழுத்தும் ஏகம்பர் ஆடும் திருக்கூத்தும்
நெஞ்சமுழுத்தி வைக்கும் நிலைமையாள்—மஞ்சு

8 பொருந்துமணி மாளிகையில் பூங்கவரி வீச
விரும்புமணி ஆசனத்தின் மீதே—இருந்தெவரும்

9 பேச அரிய பிரானார் திருவார்த்தை
ஆசையுடன் கேட்புழிவந்(து) ஆங்கொருத்தி—
வாசலின்கண்

480 நின்றாள் ஒருமறையோன் நீறணிந்த கோலமுடன்
என்றாள் வரவிடுவை என்றுரைத்துச்—சென்றெதிர்
கொண்(டு)

1 அங்கை குவித்தோர் அரியா சனத்தினில் வைத்(து)
எங்கள்தவம் வந்தவா(று) என்றுரை செய்(து)
அங்கமுடன்

2 முன்னை மறைநூல் முதலாய எக்கலையும்
நின்னில் அறிவார் நிலத்தில்லை— மின்னுசடை

---

474 கயிலை......திருமுறை—சுந்தரர் அருளிய திருமுறை, 5 தேடித்...திருமுறை— மாணிக்கவாசகர் அருளிய திருவாசகமும், 6 அவர்கள்...கும்பிட்டு—அந்த அருளாளர்கள் தன்மையைத் தொழுது, 7 அஞ்செழுத்தும் ...நெஞ்சமுழுத்தி-ஐந்தெழுத்தையும் கூத்தையும் உள்ளத்தில் கொண்டு, 8 மணிமாளிகை—அழகிய மாளிகை, 9 கேட்புழி—கேட்குமிடத்து, ஒருத்தி—ஒருபெண், 480 மறையோன்—அந்தணன், 2 எக்கலையும்—எல்லாக் கலைகளையும், நின்னில்—உமமைப்போல,

3 ஈசன் நிலைமைக்கும் ஏனையிமை யோர் நிலைக்கும்
வாசி யுரைதெரியும் வாறென்னப்— பூசுரனும்

4 என் நிலைமை சோதிக்க என்றோ இது சொன்னாய்
நன்னுதலே என்று நகைசெய்யா— உன்னி

5 இதனை இதனுடனே எண்ணலாம் என்று
அதனை வினவுதலே அன்றி—மதியதனில்

6 எண்ணமிலா தார்போல எல்லாம் இனிதுணர்ந்த
பெண்ணமுதே கேட்கப் பெறுதியோ—மண்ணுலகில்

7 குன்றி தனையொருபொற் குன்ற முடனிகரும்
என்று திரிவாரை என்செயலாம்— துன்றிருள்போய்

8 விஞ்சு சுடருடைத்தாய் மின்மினியே வந்துதிக்கும்
செஞ்சுடரின் என்பாரைச் செய்யுமதென்—
தஞ்சமெனக்

9 கல்லால் நிழலிருந்த கண்ணுதலார் தம்முடனே
எல்லாரை யும்தேவர் என்றுரைத்தல்—
நல்லாய் ஒட்(பு)

490 ஏதும் நிகரா இரும்பினையும் பொன்னினையும்
தாது எனவுரைக்கும் தன்மைகாண்— மீதுலவும்

1 நீடுசுடர் ஆழி நிலத்தேரில் ஈரிரண்டு
பாடு சுருதிப் பரிபூட்டித்—தோடார்

2 நளினத்துப் பாகன் நடத்த எரிவாய்த்
துளவப் பகழி தொடுத்துக்— கொளுவியநாண்

---

3 ஈசன் நிலைமைக்கும்...வாசியுரை என்ன—ஈசனுக்கும் மற்ற தேவர்களுக்குமுள்ள வேறுபாடு கூறுங்கள் என்று கேட்க, 4 நகைசெய்யா—நகைத்து.

7 குன்றி—குன்றிமணி, பொற் குன்றம்—மேருமலை, 8 மின்மினி—மின்மினிப்பூச்சி. சுடரின்—சூரியன்போல, 1 ஆழிநிலத்தேர்—கடல் சூழ்ந்த பூமியாகிய தேர். சுருதிப்பரி—வேதங்களாகிய குதிரைகள், 2 நளினத்துப் பாகன்—பிரமன் துளவப் பகழி—திருமாலாகிய அம்பு,

3 மூரி அரவாக மூதண்ட மும்தாங்கும்
மேரு வெனும்சயிலம் வில்லாக—ஆர்வமுடன்

4 மூவர் உயிர்வாழ முப்புரமும் நீறாக
யாவர் பொருதார் இமையோரில்— தேவர்

5 பழித்தபெரு வேள்வி பழுதாக ஆள்விட் (டு)
அழித்த இமையவர்வே(று) ஆர்தான்—இழைத்து

6 வதைப்பான் வருங்கூற்றை மார்க்கண்டற்காக
உதைத்தார் இவரல்லா(து) உண்டோ—எதிர்த்த

7 கழற்கால் மதன்மாளக் கண்மலரால் வெய்ய
அழல்தானை ஏவினார் ஆர்தான்—நிழற்பொற்

8 கலையான் இடந்திட்ட கண்ணுக்கோர் ஆழி
விலையாக நல்கினார் வேறார்— நிலையாகத்

9 துன்னும் ஒருசிலந்தி சோணாடும் காவிரியும்
மன்னி அரசாள வைத்தவரார்— பன்நெடுநாள்

500 தேடி இருவர் திரியத் தெரியாமல்
நீடு சுடர்வடிவாய் நின்றவரார்—ஆடலென

1 உங்காரஞ் செய்தே உலகுண்ட மாலயனைச்
சங்காரம் செய்துபின்னர் தந்தவரார்—பங்கயன்மால்

---

3 மூரியரவு—பெரிய வாசுகி என்னும் பாம்பு, நாண்—வில்லின்நாண் 4 மூவர்—பிரமன், விஷ்ணு, உருத்திரன், முப்புரம்—திரிபுரம், 5 பெருவேள்வி—தக்கன் செய்த பெரிய யாகம், 6 கூற்றை—இயமனை, 7 மதன்மாள—மன்மதன் அழியும்படி, 8 பொற்கலையான்—திருமால், கண்ணுக்கு—அருச்சித்த கண்ணுக்காக—ஆழிநல்கினார்—சக்கரம் அளித்தவர். ''மாலுக்குச் சக்கரம் அன்றருள் செய்தவன்''. திருப்பல்லாண்டு 9 9 சிலந்தி—நிழல் செய்த சிலந்தியை. அரசாள...ரார்—சோழனாக ஆட்சி புரியவைத்தவர் யாவர். ''கோயில், சேமநூலிற் செய் சிலந்தியை ஆட்கொண்டவன்'' திருக்காளத்தி நாதருலா. 396—97. 500 இருவர் தேடித்திரிய—திருமாலும் பிரமனும் அடியையும் முடியையும் தேடி அலைய,

2 வீந்த சுடலை விபூதி தரித்திருவர்
ஆர்ந்ததலை மாலை அணிந்தவரார்—மாய்ந்திடவே

3 தாரா யணருடலும் நாலுமுக னாருடலும்
கூராய சூலமிசைக் கொண்டவரார்—சேர

4 எரிந்த பிறைஎயிற்றின் ஈரைந்து வாயும்
பரந்து செழுங்குருதி பாய நெரிந்தொருவன்

5 மான்று கிடக்க மலையான் மகளுடனே
ஊன்று விரலொன் றுடையவரார்—தோன்றியடல்

6 ஓத விடமுண்டு உபயநிறத் தாமரைமேல்
கோதையர்க்குத் தாலிகொடுத்தவரார்—மாதவனைக்

7 கூடி அயனைக் கொடுத்தவரார் மோகினிபால்
நாடுமெழிற் சாத்தனைமுன் நல்கினரார்-பாடார்ந்த

8 புத்தேளிர் என்பைப் புனைந்தவரார் அல்லினுமை
கைத்தாளம் கொட்ட நடம் காண்பவரார்—
மத்தமுறும்

9 ஆதிநெடு மாலுதிரம் அத்தனையும் கைக்கலத்தில்
பாதிதனி லேநிறையப் பண்ணினரார்—வேதமுடன்

சுடர்வடிவாய்—அக்கினி மலையாய், 2 வீந்த தலைமாலை இறந்தவர் தலைமாலையை, 4 எயிறு—பல், ஒருவன்—இராவணன் 5 மான்று கிடக்க--மயங்கியிருக்க, 6 உபய நிறத்தாமரை—செந்தாமரை, வெண்டாமரை, கோதையர்—இலக்குமி, சரசுவதி, "விடம், தண்கழுத்தில் வைத்து நெடுந் தாலிசெழுந் தாமரையின், பெண் கழுத்தில் வைத்த பிரான்" திருப்பூவண-116 9 மாலுதிரம்—திருமாலின் இரத்தம், கைக்கலம்-கையிலுள்ள கபாலம், "காதி ஆயிரம் மால்களைப் பிழிந்து மாங்கனிபோல் கோது வீசினும் கடல் கவிழ்த்தனைய செங்குருதி, பாதியாயினும் நிறை வுறாக் கபால பாணியனாய், மாது பாதியன் அவையி டைப் புகுந்தனன்"— பிரபுலிங். கைலாச 41,

510 துண்ணெனவே ஆழிபுகும் சோமுகனைச் செற்றிடுமீன்
கண்ணை உகிரால் களைந்தவரார்—கண்ணனார்
1 ஆமைவடி வந்தனிலும் ஆதிவரா கந்தனிலும்
மாமுதுகோட் டைக்கரத்தால் வாங்கினரார்—தூமறையும்
2 பேசரிய சிம்புளாய்ப் பேரா டகனையடும்
கேசரியை வள்ளுகிரால் கீண்டவரார்—கூசா(து)
3 அடரும் சலந்தரனை அன்றாழி சூட்டி
உடலம் பிளந்தவர்வே(று) உண்டோ—படிவிண்
4 முழுதளந்த மாயன் முதுகெலும்பைச் செந்நீர்
ஒழுகவே வாங்கினர்வே(று) உண்டோ—பழுதெண்
5 தடமலரோன் உச்சித் தலையை உகிரால்
உடனே குறைத்தவர்வே(று) உண்டோ—நெடுவிசும்பு
6 முற்றும் புதைத்(து) அலையால் மோதும் சுரநதியைச்
சுற்றும் சடையிற் சுவறுவித்து—மற்றும்
7 பகீரதன்நின்(று) ஊழிநாள் பாதமலர் போற்ற
மகீதலத்தே போதுவித்தார் மற்றார்—புகழைச்
8 செலுத்தச் சிறுத்தொண்டர் தேவியறுத் தாக்கிக்
கலத்திற் படைத்த கறியைத்—தலைக்கிட்ட
9 சுட்டியும் மாலைச் சுரிகுஞ்சியுமுத்தும்
கட்டியை நல்கும் கனிவாயும்—இட்டதொரு

---

510 மீன்—மச்சாவதாரம், உகிரால்—நகத்தால், 1 ஆமை வடிவம்—கூர்மாவதாரம், 2 ஆடகன்—இரணியன், வராகந்தனிலும்—வராக அவதாரத்திலும், வள்ளுகிரால்—கூரிய நகத்தால் 3 படிவிண்-மண்ணுலகையும் விண்ணுலகையும். சலந்தரன் ஓர்அசுரன் 4 மாயன் முதுகெலும்பை—திருமாலின் முதுகெலும்பை, 5 மலரோன்—பிரமன், தலையை உகிரால் குறைத்தவர்—தலையை நகத்தால் கிள்ளி எடுத்தவர், 6 சுவறுவித்து—வற்றச் செய்து, 7 மகீதலத்தே போதுவித்தார்—பூமியில் வரச்செய்தவர்,

520 வாளியும் காதும் மருங்கும் மணிவடமும்
தாளிணையும் செம்பொன் சதங்கையுமாய்—மீளப்

1 பிறப்பித் தவர்தம் பெரும்பிறப்பை எல்லாம்
மறுப்பிக்க வல்லவர்தாம் மற்றார்—
நறைக்கொன்றை

2 ஆதி தனையொழிய ஆறாறு தத்துவத்தின்
மீது மகிழ்ந்திருக்கும் விண்ணவரார்—மாதிற்

3 பொருந்தி விடையாகப் பூந்துழாய் மாலை
விரும்பி நடத்தினார் வேறார்—அரன்பெருமை

4 இன்னும் பலகோடி இல்லையோ யாமிருந்து
சொன்ன பொழுதே தொலையுமோ—உன்னரிய

5 மூவா முதலா முதல்வனையும் மூவுலகிற்
சாவார் பிறப்பார்கள் தங்களையும்—தேவாக

6 ஒக்க நினைவாருக்(கு) அல்லவோ ஓரேழு
மிக்க நரகம் விதித்ததுகாண்—மைக்கண்

8 சிறுத்தொண்டன்தேவி—வெண்காட்டுநங்கை 521 பிறப்பித்தார்-பிள்ளையாக வரச் செய்தவர், மறுப்பிக்க வல்லார்—மறுக்கவல்லவர், கொன்றை ஆதி—கொன்றை மாலையணிந்த சிவன், 2 ஆறாறு தத்துவம்—முப்பத்தாறு தத்துவம், அவை: பூதங்கள் 5 ஞானேந்திரியம் 5 கன்மேந்திரியம் 5, தன்மாத்திரைகள் 5 அந்தக்கரணம் 4 வித்தியா தத்துவம் 7 சிவதத்துவம் 5 ஆக 36. 3 மாலை —திருமாலை, விடையாக நடத்தினார்—இடப வாகன மாக நடத்தியவர், வேறார்—வேறுயாவர், அரன் பெருமை—சிவபெருமான் பெருமைகள் 4 இன்னும் பலகோடி இல்லையோ—மேலும் கோடிக் கணக்காக இல்லையோ. 525 மூவா முதலா—இறப்பும் பிறப்பும் இல்லாத, சாவார் பிறப்பார்—இறந்தும் பிறந்தும் உழல் கின்ற, 6 ஒக்கநினைவாருக்கு—ஒன்றாக நினைப்பவருக்கு.

7 மருவார் குழலியென மற்றவளும் அந்தப்
பெருவாழ் வுடைய பிரானைப்—பரவியவர்

8 தெய்வ எழுத்தைந்தும் ஓதித் திருநீறு
மெய்யில் அணிய விதியற்று—மையல்தரும்

9 எட்டெழுத்தை ஓதி இடுவார்மண் எப்பொழுதும்
கட்டுரைக்க என்னக் கவுதமனார்—இட்டபெரும்

530 சாபத் தியல்பு தருமா மறையோர்செய்
பாபக் கலிகாலப் பண்புகாண்—கோபவிதழ்

1 மின்னே எனச்சிறந்தும் வேதியரா கிப்பிறந்தும்
என்னே பெருமை இருந்தவா—முன்னை

2 மறையின் எழுத்தைந்தும் வாயார ஓதி
நிறைய அணிந்துதிரு நீறும்—பிறவியெல்லாம்

3 வாட்ட அறியாமல் வாளாப் பிறவிதனை
ஈட்டுவதே பாவம் எனவுரைத்து—வேட்டஎலாம்

4 ஒண்டொடியும் வேதியனுக்(கு) உள்ளம் மகிழ்ந்தளித்து
வண்டணையும் பூவணைமேல் வந்திருப்பப்—பண்டுவிடம்

5 உண்டபிரான் பாகத்(து) ஒருத்தி முலைத்தழும்பு
கொண்டபிரான் ஆடக் குழுவெல்லாம்—தண்டகமா

6 நன்னாட்டுத் தேவர்கள் நாயகனார் சோணாட்டின்
முன்னாட்டு மன்றின் முதலியார்—தென்னாட்டில்

---

7 அவள்—பேரிளம் பெண், 8 எழுத்தைந்தும் ஓதி—பஞ்சாக்கரத்தை செபித்து, விதியற்று—ஊழில்லாமல், 9 கட்டுரைக்க ஏன்ன—காரணம் கூறுங்கள் என்று கேட்க, கவுதமனார் இட்டசாபத்தியல்பு—கவுதம முனிவர் இட்ட சாபத்தின் தன்மை, 530 கலிகாலப்பண்பு-கலிகாலத்தின் பண்புமாகும், 3 வாட்ட அறியாமல்—போக்கத் தெரியாமல், வாளா—வீணாக, 4 ஒண்டொடி—பேரிளம் பெண், 6 தண்டகநாட்டு—தொண்டை நாட்டில்

7 சூடும் அபிடேகச் சொக்கனார் துங்கமணி
மாட நெடுவீதி வந்தணுக—ஆடகப் பூஞ்

8 சோதி சிலம்புக்கும் சூழ்பாட கத்துக்கும்
பாதத் தழகைப் பகிராதே—மோதிளநீர்

9 ஆன முலையழகை ஆரஇள வண்டலுக்கும்
நானநறுந் தொய்யலுக்கும் நல்காதே—வானநிலா

540 ஆர மணித்தோள் அழகைக் கரும்புக்கும்
ஈரமிலா வல்லிக்கும் ஈயாதே—தாரைப்

1 பலவுநிரைத் தன்னதொடைப் பாளைக்(கு) அளகம்
குலவும் அழகைக் கொடாதே—கலவிநலம்

2 கொண்ட திரு மார்பும் குளிர்ந்த திருச்சாந்தும்
வண்டணியும் கொன்றை மலர்த்தாரும்—
தொண்டருள

3 அந்தா மரைமலரை ஆனந்தத் தாண்டவஞ்செய்
செந்தா மரையும் திருச்சிலம்பும்—சிந்தை

4 மகிழ மகிழ வணங்கி வளையெல்லாம்
நெகிழ நெகிழஎதிர் நின்று—சகமேல்

5 பிறவாமல் எண்ணிறந்த பேரண்டம் மாய்ந்தும்
இறவாத மேனி இறைவா—உறவாய்ச்

6 சிரித்துமுகம் பார்த்துத் திருக்கொன்றை மாலை
தரித்ததிருத் தோளழகைத் தாரீர்—ஒருத்திகுறி

7 ஆக மிசையில்லை யாமாகில் இப்பொழுதே
ஏக உமைவிட் டிருப்பேனோ—ஆகிலும் நான்

---

7 ஆடகம்—மாற்றுயர்ந்த பொன், 8 பாடகம்—காலணி 1 அளகம்—கூந்தல், 3-4 சிந்தை மகிழ மகிழ— உள்ளம் பெருமகிழ்வு கொள்ளும்படி, வணங்கி—துதித்து, 5 இறவாத திருமேனி இறைவா—சாவாத திருமேனியுடைய இறைவனே, 6 ஒருத்திகுறி—ஒருபெண்ணின் தழும்பு, 7 ஆகமிசை—உடலில்.

8 கட்டியிறுகக் கலந்துருகி ஒன்றாகி
இட்ட குறியழித்தால் யார்தவிப்பார்—பட்டது
பட்(டு)

9 ஆவல்கெடப் புல்லி அகலாமல் யான் வளைத்தால்
ஏவரெனைத் தள்ளியுமை ஏகுவிப்பார்—
மேவியெனைப்

550 புல்லி ஒருக்காலும் போகா வகை பிணித்து
வல்ல படிகாண மாட்டாரோ—நல்ல மடம்

1 நாண்கொண்ட தாருவன நங்கையரைப் போலமனம்
வீண்கொண்டு போக விடுவேனோ—மாண் கொண்டு

2 பூத்ததிரு நீறும் புயமும் திருமார்பும்
ஏத்து மவர்க்கருளீர் என்னென்று—வாய்த்த
சொலால்

3 ஆவதெல்லாம் பார்த்தாள் அவளும் தழுவுகைக்
கங்(கு)
ஆவதெல்லாம் பார்த்தால் அவை வருமோ—ஆவி

---

8 கட்டி இறுகக்கலந்து—உம்மை இறுகக்கட்டித் தழுவி, குறி அழித்தால்—தழும்பைப்போக்கினால், 9 ஏவரும்மை ஏகுவிப்பார்—உம்மைப் போகச் செய்பவர் யாவர், 550 எனைப்புல்லி—என்னைத்தழுவி, போகாவகை—போகாதவாறு, 1 நாண்கொண்டதாருவன நங்கையர் போல்—நாணமுற்ற தாருகவனத்து முனிவர் பத்தினிமார் போல, மனம் வீண்கொண்டு செல்லவிடுவேனோ—என் மனத்தை வீணாகக் கொண்டு செல்ல விடுவேனோ,

4 உருகும் வகை காதல் உண்டாக நோக்கி
விரவுநகை கொண்டேகி விட்டார்—தரளம்

5 இடையும் நகையார் இவரெழுவர் இங்ஙன்
கொடிய பெருங்காதல் கொள்ள— முடிமேல்

556 நிலாவுடையான் தேமா நிழலுடையான் சேரன்
உலாவுடையான் போந்தான் உலா

---

''பிள்ளைவெண் திங்கள் வேய்ந்த பிரான்கொண்டுபோன நாளும் உள்ளமும் மீட்கலாற்றாது உயங்கினார்'' திருவிளையாடல்—வளையல்விற்ற படலம்—14 2 ஏத்து மவர்க்கருளீர் என்—உம்மைத்துதிப்பவருக்கு அருள்செய் யாதிருக்கின்றீர் என்ன காரணம், 3 அவளும்—பேரிளம் பெண்ணும், அவை வருமோ—அந்நிலைமை உண்டாகுமோ, 4 நகைகொண்டு ஏகிவிட்டார்—ஏகம்பர் புன்முறுவலோடு சென்றருளினார், 5 தரளம் இடையும் நகையார்—முத்துக்கள் தோல்வியுறும் பற்களையுடைய பேதை முதலிய ஏழுபருவ மகளிரும், 556 முடிமேல் நிலா வுடையான்—பிறையணிந்தவர், தேமாநிழலுடையான்—மாவடியில் எழுந்தருளியுள்ளவர், சேரன் உலாவுடையான்—சேரமான் பெருமாள் பாடிய உலாவையுடையவர், போந்தான் உலா—உலாவந்தருளினார்.

ஏகாம்பரநாதருலா முற்றிற்று

| | மேற்கோள் நூல்கள் | கண்ணி — எண் |
|---|---|---|
| 1 | அருணைக்கலம்பகம் | ,, 107 |
| 2 | அழகரந்தாதி | ,, 284 |
| 3 | இரத்தினச்சுருக்கம் | ,, 359, 464 |
| 4 | தண்டியலங்காரம் | ,, 235, 428 |
| 5 | திருக்காளத்திநாதருலா | ,, 499 |
| 6 | திருப்பல்லாண்டு | ,, 48, 498 |
| 7 | திருப்புகழ் | ,, 203 |
| 8 | திருப்பூவணநாதருலா | ,, 246 |
| 9 | திருவாசகம் | ,, 89 |
| 10 | திருவிளையாடற்புராணம் | ,, 110, 402, 551 |
| 11 | திருவேங்கடத்தந்தாதி | ,, 284 |
| 12 | தேவாரம் | ,, 203, 389 |
| 13 | தொல்காப்பியம் | ,, 1 |
| 14 | பிரபுலிங்கலீலை | ,, 509 |

## சில தனிப்பாடல்

*வீரசம்புவும் இரட்டையரும்*

*வீரசம்பு என்பவர் கொடுத்த பரிசை இரட்டையர் இடக்கையில் வாங்கினதற்கு வீரசம்பு பாடியது வினா?*

**பதிவீர சம்புவென்று பாராமல் கல்விக்(கு)**
**இதமுடைய ரெட்டையரே ஈகை—உதவில்வலக்**
**கைத்தலத்திற் கொண்டு களிக்காமல் உம்இடது**
**கைத்தலத்திற் கொள்ளுவதேன் காண்**

*இரட்டையர் விடை*

**கூவரா யன்தியாகம் கொள்வோம் வலக்கைமுடி**
**யாவர் தரினும் இடக்கைகொள்வோம்—பூவுலகில்**
**மின்பணிமின் னார்மதனே ! வீரசம்பு வே !யினிநாம்**
**இன்பமும் நேரோம் இனி**

*வீரசம்பு வினா*

என்னுடைய பேரும் புகழும் இருஞ்சீரும்
என்னுடைய ஈகையுங்கண்(டு) எப்படிநம்—முன்அவனை
ஆவலுட னேயதிக மாச்சொன்னீர் ரெட்டையரே
கூவரா யன்இயல்பென் கூறு

*இரட்டையர் விடை*

மாதாபி தாவுமவன் மன்னுகுரு தெய்வமவன்
தாதா அவனே தருங்கீர்த்திக்(கு)— ஆதாரன்
தியாக சமுத்திரன் தண்கூவ ராயன்தன்
ஈகைதனைச் சொல்லஎளி தோ

*திருவாங்கூர்ச் சிவபெருமானைத் தரிசித்து அன்று இரவு உணவு கிடைக்காமல் பசியால் வருந்தியபோது பாடியது*

தேங்குபுகழ் ஆங்கூர்ச் சிவனே அல்லாளியப்பா
நாங்கள் பசித்திருக்கை ஞாயமோ—போங்காணும்
கூறுசங்கு தோல்முரசு கொட்டோசை அல்லாமல்
சோறுகண்ட மூளியார் சொல்

*சிதம்பரத்தில் ஒரு செல்வனைப் பாடினர்.*
*அவன் பரிசளிக்காதபோது பாடியது*

மூடர்முன் பாடல் மொழிந்தால் அறிவரோ
ஆடெடுத்த தென்புலியூர் அம்பலவா— ஆடகப்பொன்
செந்திருவே போலணங்கைச் சிங்காரித் தென்னபயன்
அந்தகனே நாயகன்ஆ னால்

*திருநெல்வேலிப் பெருமானைத் தரிசித்துப் பாடியது*

வேயீன்ற முத்தர்தமை வெட்டினா னேஇடையன்
தாயீன்ற மேனி தயங்கவே— பேயாகேள்
எத்தனைநாள என்றே இடறுவான் பால்குடத்தை
அத்தனையும் வேண்டும் அவர்க்கு

*மாங்காட்டு வேளாளன் தன்மகளை மருமகன்*
*ஊருக்கு அழைத்துச் செல்லும்போது வழியில்*
*அவளைத் தழுவியதைக் கூறியது*

மாங்காட்டு வேளான் மகளை மருமகன்பால்
போங்காட்டில் இன்பம் புணர்ந்தானே— ஆங்காணும்
மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு

*மலையும் காடும் கடந்து செல்லும்போது வருந்திப் பாடியது*

குன்றும் குழியும் குறுகி வழிநடப்ப(து)
என்று விடியுமெமக்(கு) என்கோவே— ஒன்றும்
கொடாதானைக் கோவென்றும் காவென்றும் கூறின்
இடாதோ நமக்கிவ் விடி

*காளமேகப் புலவரும் இரட்டையரும் பாடியது*

நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம்
பாணந்தான் மண்தின்ற பாணமே— தாணுவே
சீராரூர் மேவும் சிவனேநீ எப்படியோ
நேரார் புரமெரித்த நேர்

ஆசு கவியால் அகில வுலகெங்கும்
வீசு புகழ்க்காள மேகமே— பூசுரா
விண்கொண்ட செந்தணலாய் வேகுதே ஐயையோ
மண்தின்ற பாணமென்ற வாய்

*பாண்டியனிடம் பரிசுபெறும்போது அதனைத் தடுத்த மந்திரிமீது பாடியது*
*கட்டளைக்கலித்துறை*

புராதன மான தமிழ்ப்புல, வீர்இந்தப் புன்குரங்கு
மராமரம் விட்டிங்கு வந்ததென், னோவகை, கேட்டிலையோ
தராதலம் வென்ற தமிழ்மா றனையும்தன் தம்பியையும்
இராகவன் என்றும் இலக்குவன் என்றும் இருந்ததுவே

அப்பிலே தோய்த்திட்(டு) அடுத்தடுத்து நாமதனைத்
தப்பினால் நம்மையது தப்பாதோ— இப்புவியில்
ஆனாலும் கந்தை அதிலுமோர் ஆயிரங்கண்
போனால் துயர்போச்சு போ

கண்ணா யிரமுடைய கந்தையே ஆனாலும்
தண்ணார் குளிரையது தாங்காதோ— எண்ணாதே
இக்கலிங்கம் போனாலென் ஏகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்கம் உண்டே துணை





பிறப்பு 15-1-1915

## பதிப்பாசிரியரைப்பற்றி...

- சென்னைப் பல்கலைக்கழகத்தில் வித்துவான் பட்டமும பண்டித பயிற்சியும பெற்ற இவர் T. T D. நிருவாகத்தின கீழுள்ள வேலூர் ஸ்ரீ வேங்கடேசுவரர் மேல்நிலைப்பள்ளியில் முதலநிலைத் தமிழாசிரியராக அமர்ந்து 30 ஆண்டுகள் பணி புரிந்து ஓய்வு பெற்றவர்!

- வேலூர் மத்திய சிறை பண்பாட்டுக் குழு உறுப்பினர் ஞாயிறு தோறும் சிறைவாசிகளுக்கு நீதிபோதனையும் சமயபோதனையும் செய்தவர். பழைய இலக்கியங்களைப் படித்து மகிழும் பண்புடையவர்!

- தில்லைக்கலம்பகம், திருவாமாத்தூர்க்கலம்பகம், ஏகாம்பரநாதருலா ஆகிய நூல்கள் மூன்றையும் குறிப்புரையோடு மககளுக்கு அறிமுகம் செய்கின்றார். வளர்க அவர் தொண்டு!